# கல்கி

பா.ஜ.க. தலைவர்?
ஜனா
ஸ்பெஷல் பேட்டி!



KALKI 26.3.2000
ரூ. 5.00

# 'வாட்டர்' கலாட்டா;
# வருத்தத்தில்
# ஷபானா!

# காதலர்களே, உஷார்!

## கிளிண்டன் வருகை :

"காதலர்களே உஷார்! நீங்கள் நேரு பார்க்கில் மெய் மறந்து காதல் மொழி பேசிக் கொண்டிருந்தால் கிளிண்டனின் பாதுகாப்புப் படையினர் அதைக் கேட்க முடியும். முணுமுணுப்பைக் கூட குறைத்துக் கொள்ளுங்கள்."

–டைம்ஸ் ஆஃப் இந்தியா நாளிதழ் இப்படி காதலர்களை எச்சரித்திருக்கிறது! இது நிஜம்தான். மூன்று கிலோ மீட்டர் அளவு சுற்று வட்டாரத்திற்குள் நடக்கும் பேச்சுகளைக் கேட்கக் கூடிய மைக்ரோ அலை கருவிகளை காதில் பொருத்திக் கொண்டு அமெரிக்கப் பாதுகாப்புப் படையினர் அலைகின்றனர். இதைப் பார்த்தால் இருப்பது தில்லியிலா? அமெரிக்காவிலா? என்று நம்மையே கிள்ளிப் பார்க்கத் தோன்றுகிறது. அது மட்டுமின்றி எப்போதும் பார்த்திராத அளவு கடும் செக்யூரிட்டி! எங்கெங்கு காணினும் சாதாரண மற்றும் யூனிஃபார்மில் காவல் காக்கும் போலீசார்!

நாளொரு ரகசியக் கூட்டம், பொழுதொரு அறிக்கை என்று டெல்லி போலீஸ் பரபரப்பாகியிருக்கிறது! சும்மாவா? பாக். ராணுவ ஆட்சி. ஐ.எஸ்.ஐ. நடமாட்டம். தீவிரவாதிகள். சீனாவின் சந்தேகப் பார்வை. இதன் மூலம் ஏடாகூடமாக ஏதாவதாகி இந்தியாவின் இறையாண்மைக்குப் பிரச்னை வந்தால்...! பலத்த சர்ச்சையாகும் என்ற கணிப்பே இந்தப் பாதுகாப்பு ஏற்பாடுகளுக்குக் காரணமாம்!

கிளின்டன் தங்கும் மௌரியா ஷெரட்டன் ஹோட்டலைச் சுற்றி மரங்கள் நட்டு, தெருக்களைச் சுத்தம் செய்து மலர் தூவ ஏற்பாடு செய்தது டெல்லி மாநகராட்சி!

மௌரியா ஹோட்டல் வளாகம் முழுவதும் மூடப்பட்டு சீல் வைக்கப்படாத குறைதான். 28 மாடி கொண்ட இந்த ஹோட்டலின் 500 அறைகளும் அமெரிக்கக் குழுவுக்காக ஒப்படைக்கப்பட்டு விட்டது! இதை ஒரு 'குட்டி வெள்ளை மாளிகை'யாக ஆக்கியிருக்கிறார்கள்.

கிளிண்டனுடன் அவரது சமையல்காரர்கள், பரிமாறுபவர்கள், ஃப்ரீஸ் செய்யப்பட்ட உணவு, ஏன் குடி தண்ணீர் கூட அமெரிக்காவிலிருந்துதான் இறக்குமதி! "அவருக்கு உண

கல்கி இன்டர்நெட் முகவரி : www.kalkiweekly.com
ஈ மெயில் : kalkiweekly@vsnl.com




• மௌரியா ஹோட்டல்

போதோ ஏற்பாடுகள் துவங்கி விட்டன.

கையில் ஒரு நீண்ட பிரஷுடன் சுத்தம் செய்த தொழிலாளி ஒருவர் சொன்னார்:

"அந்தக் காலத்துல எல்லாம் மகாராஜாக்கள் நாடு விட்டு நாடு வந்து கலைகளை வளர்த்தாங்க. அதுமாதிரி இப்ப கிளின்டன் சாஹிப் வர்றார் மகாராஜா மாதிரி... எங்களுக்கெல்லாம் புல்லரிக்கிறது. ஏதோ இனம் புரியாத பயம் கலந்த சந்தோஷமும்!"

வளிக்கும் பாக்கியம் கூட நமக்குக் கிடைக்கலையே'' என்று வருத்தப்படுகிறார் மௌரியா ஹோட்டலின் தலைமை செஃப். இதில் இன்னொரு விஷயம் என்னவென்றால் ஜெயலலிதா இங்கு வந்தபோது தங்கிய 'சந்திர குப்தா' என்ற அறையில்தான் கிளின்டனும் தங்குகிறார்!

டெல்லியிலுள்ள பத்திரிகை நிறுவனங்கள் உட்பட ஒவ்வொரு நிறுவனங்களுக்கும் போலீஸ் எச்சரிக்கை விடுத்துள்ளது. "உங்கள் காம்பவுண்டில் ஒரு கதவுதான் திறந்திருக்க வேண்டும். பார்க்கிங்கில் நீண்ட நேரம் ஏதாவது வாகனம் நின்றால் தகவல் தெரிவிக்க வேண்டும்" என்பதில் ஆரம்பித்து இன்னும் நிறைய!

கிளின்டனின் பயணத் திட்டத்தில் இருக்கும் மற்ற இடங்களான காந்தி, நேரு சமாதிகள் இருக்கும் ராஜ்காட், குதுப்மினார், அதனருகிலுள்ள மொகலாயர் காலத்து ஓவியக் கூடம் எல்லாம் பரபரப்பாக இருக்கின்றன. இவற்றையெல்லாம் 'பளிச்'சாக்க எப்

## சாட்டிலைட் ஸ்டேஷன்!

**கிளின்டனுக்காக ஒரு சாட்டிலைட் ஸ்டேஷனையே மௌரியா ஹோட்டலில் வைத்திருக் கிறார்கள்! இதன் மூலம் இங்கு ஹாயாக அமர்ந்து கொண்டு வாஷிங்டன் தலைமைச் செயலகத்துப் பணிகளை கவனிக்க முடியுமாம்! ஆனால் இந்த சாட்டிலைட் சமாசாரம் இந்திய பாதுகாப்புக்குக் குந்தகம் விளைவிக்குமா என்ற கேள்வி இந்திய அதிகாரிகளை இப்போது உலுக்கி இருக்கிறது!**

**எல்லாம் சரி, கிளின்டன் வருகையின் நோக்கம்?**

"சீனாவை ஒடுக்க, அதாவது ஆசியாவில் கம்யூனிஸம் ஒரு மாபெரும் சக்தியாக (சீனா ரூபத்தில்) இயங்குவதை பெருமளவு குறைப்பதற்கு ஜப்பான் மற்றும் இந்தியாவுடனான உறவைப் பலப்படுத்திக் கொள்வது அவசியம் என்று அமெரிக்கா உணர்கிறது. அதன் நடவடிக்கைதான் கிளின்டனின் இந்திய விஜயம்'' என்கிறார் அமெரிக்க ஆசிய ஆய்வு மைய தலைவர் தாமஸ் ராபின்சன்!

கிளின்டனின் இந்தப் பயணத்தை அடுத்து சீனாவுக்கும்-தைவானுக்குமான டென்ஷன் உச்சக்கட்டத்தை அடையலாம் என்றும் கூறப்படுகிறது.

ஆனால் சர்வதேச சூழல் பார்வையாளர்களிடம் கருத்து வேறுபாடு இருக்கிறது! கிளின்டனின் வருகை இந்தியா ஒரு மாபெரும் அணு ஆயுத நாடு, வல்லரசு என்று நிரூபித்து விடுமா என்கின்றனர் இவர்கள்!

"கார்கில் பிரச்னையில், பாக் ஆக்கிரமிப்பை விலக்குவதில், நான்தான் முக்கிய கருவியாகச் செயல்பட்டேன் என்ற ரீதியில் இந்த விஜயத்தை கிளின்டன் உபயோகித்துக் கொள்ளலாம்'' என்கிறார் பென்சில்வேனியா பல்கலைக் கழக அட்வான்ஸ்ட் ஸ்டடீஸ் இயக்குனர் ஈ.ஸ்ரீதரன்!

இதற்கிடையே இரு தரப்புக்கும் என்னென்ன பலன்கள் கிடைக்கலாம் என்றும் கணிக்கப்பட்டுள்ளது.

- உலகிலுள்ள மிகப் பெரிய சந்தைகளில் ஒன்றான இந்திய சந்தையில், அமெரிக்க நிறுவனங்கள் மற்றும் பொருட்களின் அதிகரிப்பு.
- இந்திய உறவைப் பலப்படுத்துவது

# குக்கிராமத்தில் கிளின்டன்!

அமெரிக்க அதிபர் பில்கிளின்டன், இந்தியாவுக்கு வருவது என்று குழப்பமில்லாமல் முடிவெடுத்து விட்டார். ஆனாலும் அவருக்கு வேறு குழப்பம். பாகிஸ்தானுக்குப் போவதா? வேண்டாமா? வேண்டாம் என்றனர் சிலர்; அப்படி ஒரு முடிவை அவசரப்பட்டு எடுத்து விடாதீர்கள். அது, ஆபத்தில் முடியும் என்றனர் சிலர். ஏற்கெனவே, முஸ்லிம் தீவிரவாதத்துக்கு ஸ்திரமான அடித்தளம் ஆப்கானிஸ்தானிலும் பாகிஸ்தானிலும் இருக்கிறது. இந்தச் சூழ்நிலையில், பாகிஸ்தான் போகாமல் இருந்தால், தான் உதாசீனப் படுத்தப்பட்டுவிட்டதாக பாகிஸ்தான் அதிபர் முஷாரப் நினைப்பார். ஆப்கானிஸ்தானின் தாலிபன் அரசு, இதற்குக் கொம்பு சீவி விடும். இதனால் அமெரிக்கா மற்றும் இந்தியாவுக்கு எதிரான தீவிரவாதம் தீவிரப்படுத்தப்படும்" என்று இதற்கு விளக்கம் தரப்படுகிறது.

'பாகிஸ்தானைத் தவிர்ப்பது புத்திசாலித்தனமில்லை; எனவே, இந்தியா, பங்களாதேஷ் சுற்றுப் பயணத்துக்குப்பின், பாகிஸ்தான் செல்லுவதே ராஜதந்திரம் என்று ஆலோசனை சொன்னதன் பேரில், இதனையே கிளின்டன் ஏற்றுக் கொண்டார். ஆனாலும், "எல்லை கடந்த தீவிரவாதத்தை ஊக்குவிக்கக் கூடாது; ஆப்கான் அரசுடன் மிகுந்த இணக்கம் கூடாது என்று ஒப்புக்கு சில கண்டிஷன்களை அமெரிக்கா போடும் என்றும், பாகிஸ்தானும், சும்மா அவைகளுக்கு தலையாட்டி சம்மதிக்கும் என்றும் அரசியல் விமர்சகர்கள் கணிக்கிறார்கள்.

கிளின்டன் வருகைக்காக ராஜஸ்தான் மாநிலத்தில் உள்ள ஒரு குக்கிராமம் (நைலா கிராமம்) தயாராகி வருகிறது. இங்கே இயங்கி வரும் கூட்டுறவு பால் சங்கம் பிரசித்தம். கம்ப்யூட்டர்களைப் பயன்படுத்தி வெற்றிகரமாக இந்தச் சங்கத்தை நடத்திக் கொண்டிருப்பவர்கள் அனைவரும் பெண்கள் என்பது குறிப்பிடத்தக்க அம்சம். ராஜஸ்தானில், ஜெய்ப்பூரில் கிளின்டன் தங்கப் போகும் ஓட்டலிலிருந்து ஆறு கி.மீ. தொலைவில் உள்ளது நைலாகிராமம். அங்கு போய் பால் சொசைட்டி பெண்களை கிளின்டன் சந்திக்கப் போகிறார். கிளின்டன், பால் சொசைட்டி பெண்களைச் சந்திப்பதன் பின்னணி சுவாரசியமானது.

போன வருடம் ஜனவரியில் டெல்லியில் ஒரு விவசாயக் கண்காட்சி நடைபெற்றது. அப்போது நைலா கிராம கூட்டுறவு சொசைடி சார்பில் இடம்பெற்ற ஸ்டாலில், ஐந்தாம் வகுப்பு வரை மட்டுமே படித்த சந்தோஷ் என்கிற சங்கப் பெண்மணி, கம்ப்யூட்டரை இயக்கியது கண்டு, கண்காட்சிக்கு வந்திருந்த அமெரிக்க தூதரக அதிகாரிகள் அதிசயித்தனர். அதை மனத்தில் வைத்துக் கொண்டு இப்போது கிளின்டனின் புரோகிராமில் இதைச் சேர்த்திருக்கிறார்கள்.

– சி.எம்.

(சீனாவைப் பலவீனப்படுத்த)

- இந்திய-பாகிஸ்தான் பிரச்னைகள் ஒரு மினி அணு யுத்தத்தில் முடிந்து விடக் கூடாது என்பதை வற்புறுத்துவது.
- தெற்காசியா மீதான தங்கள் கொள்கை, விரோதமாக இல்லை என்பதை காட்டுவது.

– இதெல்லாம் அமெரிக்காவுக்கு!

இந்தியாவிற்கு...?

- பனிப்போர் விளைவுகளின் சந்தேகங்கள் நீக்கப்படுவது.
- வணிக ரீதியான உடன்பாடு.
- சீனாவின் சக்தியைக் குறைக்க மறைமுக அங்கீகாரத்தைப் பெறுவது.
- பாகிஸ்தானுக்கெதிரான தனது வாதத்தை கிளின்டன் மூலம் வலிமையாக வைப்பது.

இவையெல்லாம் யூகங்கள்தான்! அரசு தரப்புச் செய்திகள் அல்ல!

டெல்லியிலிருந்து : **வெங்கட்**

# நீங்கள் கேட்டவை – தராசு

● எஸ். முரளி, குறிஞ்சிப்பாடி.

? ஒவ்வொரு மாவட்ட கலெக்டரும் மாதம் ஒருமுறை பத்திரிகையாளர் சந்திப்பு மற்றும் பத்திரிகையாளர் பயணத்துக்கு ஏற்பாடு செய்ய வேண்டும் என்று தமிழக அரசு உத்தரவிட்டுள்ளது பற்றி...?

! வீண் செலவு! கலெக்டர் காட்டும் இடங்களைப் பார்த்து, அவர் சொல்வதைக் கேட்டு எழுதும் செய்திக் கட்டுரைகள் உண்மை நிலைகளைப் பிரதிபலிக்காது. பத்திரிகைகள் தாங்களாகவே நிருபர்களை அனுப்பி ஆராய்ந்து பார்த்து எழுதுவது தான் சிறந்தது. அதைத்தான் கல்கி மாதம் ஒரு மாவட்டம் பகுதியில் செய்தது; இப்போது மாதம் ஒரு நகரம் திட்டத்திலும் செய்து வருகிறது.

● பா. ஜெயக்குமார், வந்தவாசி.

? கிளின்டன் வருகைக்காக ஹைதராபாத்தில் பிச்சைக்காரர்களை வலுக்கட்டாயமாக போலீசார் வெளியேற்றியது நியாயமா?

! கிளின்டன் விஜயத்தின் போது அவருக்கு ஒரு போலியான இந்தியாவைக் காட்டும் முயற்சியில் வெற்றி பெறலாம்; ஆனால், அமெரிக்க அதிபர் இதனால் ஏமாந்துவிடப் போவதில்லை. அவருக்கு உண்மை நிலையை எடுத்துக்கூற ஏராளமான ஆலோசகர்கள் உள்ளனர். இந்தப் போலித்தனத்தையும் கூட, பிச்சைக்காரர்களின் மறுவாழ்வுத் திட்டமாக மாறுமானால் வரவேற்கலாம். ஆனால் அது எங்கே நடக்கப் போகிறது! கிளின்டன் அமெரிக்கா திரும்பியதும் இவர்கள் தெருவுக்குத் திரும்பி விடுவார்கள்!

## பிச்சைக்காரர்களை வெளியேற்றியது நியாயமா?



• கண் போல் மனம்...?

● வாசுதேவன், ஸ்ரீராம்பூர்.

? சமீபத்திய சாதனையாளர் யார்?

! வங்கத்துச் சிங்கம்!

● ஜெயா ஜான்பால், சென்னை – 21.

? இடைத்தேர்தல் என் கண்களைத் திறந்து விட்டிருக்கிறது என்கிறாரே ஜெயலலிதா – இது பற்றி...?

! நல்லது. இதுவரை கண்கள் மூடியிருந்ததை ஒப்புக் கொண்டிருக்கிறார். தனி நீதிமன்ற வழக்கு முடிவுகளும் அதே போல் மனச்சாட்சியைத் திறந்து விடட்டும்...

● சின்னஞ்சிறுகோபு, மயிலாடுதுறை.

? மேற்கு வங்க சட்டசபையிலேயே அமைச்சரிடம் யாரோ எதிர்க்கட்சி எம்.எல்.ஏ. பிக்பாக்கெட் அடித்ததைப் பற்றி...?

! பத்திரிகை ஜோக்குகள் எப்போதும் கற்பனையாகவே இருப்பதில்லை. (ஆசிரியரை சிறைக்கு அனுப்பினாலும்.)



• சினிமா ஆசை!



• 'சிக்கல்' எரிபொருள்!

● ஜோ. பன்னீர்செல்வம், சென்னை – 84.

? பீஹார் சட்டசபைத் தேர்தலின் போது ராஷ்ட்ரீய ஜனதாதள அரசைக் 'காட்டாட்சி' என்று வர்ணித்த காங்கிரஸ் இப்பொழுது ராஷ்ட்ரீய ஜனதா தளத்திற்கு ஆதரவு தருகின்றதே...? காங்கிரஸ் கலாசாரம் மாறவே மாறாதா...?

! ஆதரவு, அமைச்சரவையில் இடம்பெறல்,

பொதுச் செயல் திட்டம், அதில் முதல் அம்சமாக ஊழல் ஒழிப்பு! அரசியல் முரண்பாடு – political irony உட்பட – எதுவும் மாறாது, போங்கள்!

● எம். குணசேகரன்,
வேலாயுதம்பாளையம்.

*? ஆர்.எஸ்.எஸ். இயக்கத்தில் அரசு ஊழியர்கள் சேரலாம் என்ற தனது உத்தரவை குஜராத் அரசு திரும்பப் பெற்றுக் கொண்டது யாருக்குக் கிடைத்த வெற்றி...?*

! எதிர்க்கட்சிகளைக் காட்டிலும் கூட்டணி கட்சிகளுக்குக் கிடைத்த வெற்றிதான் இது.

● ஆர். மோகனகிருஷ்ணன்,
மயிலாடுதுறை.

*? பத்து நாட்கள் நாடாளுமன்றத்தை ஸ்தம்பிக்க வைத்து ஒன்பது கோடி ரூபாய் நஷ்டம் உண்டாக்கி, பா.ஜ.கவை ஆர்.எஸ்.எஸ். விஷயத்தில் பணிய வைத்த எதிர்க்கட்சிகளின் நடவடிக்கை குறித்து?*

! அந்த நஷ்டத்துக்குக் காரணம் எதிர்க்கட்சிகள் என்பதை விட குஜராத் அரசு என்றுதான் சொல்ல வேண்டும். ஆர்.எஸ்.எஸ்.ஸில் அரசு ஊழியர் சேரலாம் என்ற அரசாணைக்கு இந்த எதிர்ப்பு நிச்சயம் இருக்கும் என்பதை ஊகித்து அதைப் பிறப்பிக்காமலேயே இருந்திருக்கலாம்; அல்லது பிறப்பித்த பிறகு எதிர்ப்பின் தீவிரம் உணர்ந்து முன்னதாகவே வாபஸ் பெற்றுக் கொண்டிருக்கலாம்.

● சி. மகேஷ், சென்னை – 26.

*? ராமர் பிள்ளை கைது...?*

! பல காலமாகவே மூலிகை பெட்ரோல் வெறும் ஹம்பக் என்பதாக விஞ்ஞானிகளால் பேசப்பட்டுத்தான் வந்திருக்கிறது. இப்போது வியாபாரத்தில் ராமர் பிள்ளை தீவிரமாக இறங்கியதால் நடவடிக்கை எடுக்கும்படி ஆயிற்று.

● கி. பலராமன், கோவை – 11.

*? போலீச் சாமியார்களைப் பற்றி விழிப்புணர்வு ஏற்படுத்த அரசு சினிமா எடுக்கும் என்று முதல்வர் கருணாநிதி அறிவித்துள்ளாரே?*

! மதுவிலக்குப் பிரசாரப் படம் எடுத்து வீணானது போல்தான் ஆகும். சினிமா எடுப்பது அரசின் வேலையே அல்ல.

● வடவள்ளி ராமசுப்ரமணியன்,
கோவை. ✱

*? இடைத் தேர்தல்களில் மூப்பனாரின் பலத்தைத் தெரிந்து கொண்ட அவரது 'அருமைச் சகோதரி', வரும் பொதுத் தேர்தலில், கலைஞர் பெருந்தன்மையுடன் த.மா.கா.வுக்கு முன்பு கொடுத்த அத்தனை இடங்கள் கொடுக்க மாட்டார் என்பது என் கணிப்பு. சரி தானே?*

! நூற்றுக்கு நூறு சரி!

● ஆர்.கே. வெங்கேசன்,
மேலகிருஷ்ணன்புதூர்.

*? எது சோதனை? எது வேதனை?*

! அரசுக்கு நிதிப்பற்றாக்குறை நிரந்தர சோதனை. அதற்கென கள்ளுக்கடையைத் திறக்கத் தீர்மானித்தால் வேதனை! லட்சக்கணக்கான குடும்பங்களுக்கு வேதனை!



* அரசியல்...



* சிங்கம்!



* ...முரண்பாடு!

❑ ரூ. 50 பரிசு பெறுபவர் :
பா. ஜெயக்குமார்,
45, புதுத்தெரு,
வந்தவாசி - 604 408.

✱ ரூ. 25 பரிசு பெறுபவர் :
ஆர். ராமசுப்ரமணியன்,
ராஜம்மாள் இல்லம்,
20, முதல் தெரு, VNR நகர்,
வடவள்ளி போஸ்ட்,
கோவை - 641 041

# ராஜதர்பார்

மத்திய அமைச்சரவை மாற்றி யமைக்கப்படும் என்று அறிவிக்கப் பட்டபின் தமிழகத்தின் ஒரு முக்கிய கட்சியைச் சேர்ந்த மந்திய அமைச்சர் ஒருவருக்குப் போதாத காலம் உரு வாகியிருப்பதாக தர்பார் வளாகங் களில் கிசுகிசுப்பு!

ஊழலுக்குப் பெயர் போன வங்கி யில் இவர் பணம் வாங்கியிருப்பது, அந்த வங்கி யூனியன் காம்ரேடுகள் சமீபத்தில் வெளியிட்ட பட்டியலால் தெரியவந்துள்ளதாம்! அ.தி.மு.க. எம்.பி., பி.எச். பாண்டியன் இப்பிரச்னையை மக்களவையில் கிளப்ப, இரு திராவிட கட்சிகளுக்கும் கைகலப்பு ஏற்படும் நிலை! சபாநாயகர் தலையிட்டதால் விஷ யம் முடிந்தாலும் பாண்டியன், மீண்டும் புயலைக் கிளப்புவார் என்கிறார்கள்!



• பாஸ்வான்



• பி.எச். பாண்டியன்



• சு.சுவாமி

### விசாரணையில் சோனியா செயலர்!

காங்கிரஸ் எம்.பி. வீணா வர்மாவின் மகன் அபிஷேக் வர்மா அந்நியச் செலா வணி மோசடி வழக்கில் பிடிபட்டுள்ளார்! ஆயிரம் கோடிக்கணக்கில் நடந்துள்ள இந்த மோசடியில் சோனியா காந்தியின் அந்தரங்க செயலாளர் ஜார்ஜுக்கும் தொடர்பு இருப் பது தெரியவர, இப்போது அவரும் விசாரணையில்! இதையடுத்து ஜன்பத் மாளிகையின் சிலருக்காகவும் இந்த மோசடி நடந்ததா என்பது பற்றிய விஷயம் விரைவில் வெளிவருமாம்!

# பாண்டியன் கிளப்பப் போகும் புயல்!

### மகிழ்ச்சியில் பாஸ்வான்?!

பீஹாரில் நிதிஷ்குமார் முதல்வராகாமல் போனதில் பிற கட்சி யினரை விட அதிக சந்தோஷத்தில் இருக் கிறாராம் ஐக்கிய ஜனதா தள தலைவர் ராம் விலாஸ் பாஸ்வான்! இருவரும் பரம எதிரி களாம்! தேசிய ஜனநாயகக் கூட்டணி பல இடங்களில் தோற்றதற்கு இவர்களின் 'ஜாதி' பாலிடிக்ஸும் ஒரு காரணம் என்று இங்கு கூறப்படுகிறது.

### புத்தகம் எழுதுகிறார் சு. சுவாமி

சுப்பிரமணியன் சுவாமி என்று ஒருவர் இருந்தாரே! ஞாபகமிருக்கிறதா? நரசிம்ம ராவின் ஆட்சிக் காலத்தில் கேபினெட் அந்தஸ்த்தில் அவர் இருந்த போது, உலக வர்த்தக ஸ்தாப னம் குறித்து கிலோக்கணக்கில் அவர் எழுதிய அறிக்கைகளை வைத்து ஒரு புத்த கமே தொகுத்திருக்கிறார். விரைவில் இதை வெளியிட இருக்கிறாராம்! அடுத்து விடு தலைப் புலிகள் மற்றும் ராஜீவ் கொலை பற்றிய புத்தகமும் ரெடியாம்!

### கேசரி உபயம்!

லாலு பிரசாத்திற்கு காங்கிரஸ் ஆதரவு தர அதிக சிரத்தை எடுத்தவர் காங்கிரஸ் கமிட்டியின் முன்னாள் தேசிய தலைவர் சீதாராம் கேசரிதான்! லாலுவுக்கு நெருக் கமான இவர், மார்ச் இறுதியில் நடக்கப் போகும் ராஜ்ய சபா தேர்தலை நினைவில் வைத்தே இந்த உதவியை செய்திருக்கிறா ராம்!

— இந்த்ரப்ரஸ்தன்

"உடனடியாக வீடு கட்டவோ அல்லது விரைவான முதலீட்டு லாபமோ"
எப்படியானாலும் இது ஒரு புத்திசாலித்தனமான முதலீடு.

# இந்த வீட்டு மனையை வாங்கச் சரியான நேரம்

(கீழே கொடுத்துள்ள 5 காரணங்களுக்காகவே)

## சிந்து நகர், சென்னை–600 056

பூந்தமல்லி பை-பாஸ் அருகே – CMDA அப்ரூவ்டு மனைகள். (ரெ. 65/99.)

அமைந்துள்ள இடம் ✔

மாநகருக்கு மிக அருகில் ✔

பாதுகாப்பு ✔

முதலீடு செய்யும் பணத்துக்கு தகுந்த மதிப்பு ✔

வேகமாக உயரும் நில மதிப்பு ✔



### சிறப்பு அம்சங்கள்

● உடனே வீடு கட்டலாம் / அருகில் வீடுகள். ● கோயம்பேட்டிலிருந்து 10 நிமிட பயணம். ● அண்ணா நகரிலிருந்து 15 நிமிட பயணம். ● சுலபமான மூன்று வழிப் பாதைகள். கிண்டி, செயிண்ட்தாமஸ் மவுண்ட் போரூர் 100 அடி சாலை. அரும்பாக்கம், கோயம்பேடு, மதுரவாயில் 100 அடி சாலை / அம்பத்தூர், ஆவடி 60 அடி சாலை. ● சென்னை-பெங்களூர் (NH4) தேசிய நெடுஞ்சாலை. ● கோயம்பேட்டில் அமைந்துவரும் பிரம்மாண்ட பஸ் நிலையம். ● தாம்பரம்-வானகரம் புறவழிச் சாலை. ● மாநகரின் அனைத்து பகுதிகளுக்கும் தாராளமான பஸ் வசதி. ● மெடிக்கல், டெண்டல், இஞ்ஜினியரிங், கேட்டரிங் ஆர்ட்ஸ் கல்லூரிகள் மிக அருகில். ● சுவையான / மிருதுவான நிலத்தடிநீர். ● **சுத்தமான பத்திரம் / நம்பகமான நிறுவனம். ● உடனடி பத்திரப் பதிவு.**

### BLBயின் உறுதி செய்யப்பட்ட சேவை (விற்பனைக்கு பின்)

● 5 வருடங்களுக்கு மனை பாதுகாப்பு சேவை. ● பத்திரப் பதிவுக்கு பின் தனிப் பட்டா ஏற்பாடு (பட்டா செலவு தனி.) ● வீடு கட்டும் பட்சத்தில் தரமான எஞ்சினியர்களை கொண்டு BLB மூலமாக கட்டுமானப் பணி ஏற்பு. ● வீடு கட்ட கடன் வசதி ஏற்பாடு.

**மனையை பார்வையிட இலவச வாகன வசதி தினமும்**
**காலை 7.00 மணி, 11.00 மணி மற்றும் மாலை 3.00 மணி**

**PH : 4357721 / 31 *TEL-FAX.* 4353183 ● CELL : 98400-44018**




## BLB Estates (P) Ltd.

S-3, "Ramana Flats", Rathna Nagar, Off : Anna Salai,
**Teynampet, Chennai - 600 018.**
(Behind Apollo Cancer Hospital)

வர்த்தகத்தில் நேர்மை; பணியில் பொறுப்பு

# 'வாட்டர்' கலாட்டா: வருத்தத்தில் ஷபானா!

மகளிர் தினத்தை ஒட்டி நடந்த நிகழ்ச்சி ஒன்றில் பேச, சென்னை வந்திருந்தார் நடிகை ஷபானா ஆஸ்மி.

சாம்பல் நிறப் புடைவை. நெற்றியில் கறுப்பு நிற ஆச்சரியக் குறியைப் போல் பொட்டு. கழுத்தில் சில்வர் மாலையோடு சின்ன ருத்திராட்சங்கள் கோத்த மாலை. 'வாட்டர்' படத்துக்காக மழித்துக் கொண்ட தலையில் கொஞ்சூண்டு துளிர்விட்டிருக்கிறது...!

மேடைக்குப் போகுமுன், அவரிடம் பேசினோம்!

*மேற்கு வங்க முதல்வர் ஜோதி பாசுவைச் சந்தித்துப் பேசினீர்களே! 'வாட்டர்' படப்பிடிப்பை அங்கே தொடரப் போகிறீர்களா?*

அங்கே படப்பிடிப்பு தொடருவதாய் இருந்தால், ஸ்க்ரிப்ட்டில் நிறைய மாற்றங்கள் செய்ய வேண்டியிருக்கும். அதற்கெல்லாம் கொஞ்சம் டைம் ஆகும். அதை தீபா மேத்தா தான் செய்ய வேண்டும். ஸ்க்ரிப்ட்டை மாற்றி எழுதிய பிறகுதான் அங்கே படப்பிடிப்பு தொடங்குவது பற்றி யோசிக்க முடியும். அங்கே மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட்டுகள் மட்டுமல்ல, த்ரிணமூல் காங்கிரஸ்காரர்களும் எங்களுக்கு ஆதரவு தெரிவித்திருக்கிறார்கள்.

*வாரணாசியில் ஏன் கலாட்டா செய்தார்கள்?*

அவர்களில் ஒருவர் கூட படத்தின் ஸ்கிரிப்ட்டைப் படித்துப் பார்க்கவில்லை. வெறும் ஊகத்தில் ஆத்திரம் கொண்டு அநாவசியமாக ஆர்ப்பாட்டம் செய்து படப்பிடிப்பை நிறுத்தச் செய்தார்கள். இத்தனைக்கும் ஒரிஜினல் ஸ்க்ரிப்ட்டுக்கு மத்திய அரசு இரண்டு முறை க்ளியரன்ஸ் கொடுத்திருக்கிறது. உத்தரப் பிரதேச அரசு எதுவும் தரவில்லை. மத்திய அரசுக்கு இம்மாதிரி மாநில விஷயங்களில் தலையிட உரிமை எதுவும் இல்லையோ என்று சந்தேகம் வருகிறது.

*முப்பதுகளில் நடைபெற்றதாக உள்ள கதையை, இப்போது படம் பிடித்துக் காட்டுவதில் என்ன பயன்?*

'விருந்தாவனி'ல் இப்போதும் அப்படித்தான் இருக்கிறது. அன்றைக்கு இருந்த நிலைமையில் பெரிதாக ஒன்றும் மாற்றம் வந்து விடவில்லை. உ.பி. அரசு அந்த நிலைமையைச் சீராக்குகிற பணியில் கொஞ்சமும் அக்கறையோ, கவனமோ செலுத்தாமல், அதை வெளியுலகுக்குக் காட்டுவது மட்டும் தவறு என்று சொல்லுவது நியாயமா?

*நீங்கள் இந்து மதத்தைச் சேராதவர் என்பதால், இதில் நடிப்பது குறித்து ஆட்சேபம் தெரிவிக்கிறார்களோ?*

அல்ல. இதை எனக்கு எதிரான விமர்சனமாக நான் எடுத்துக் கொள்ளவில்லை.

*தமிழக முதல்வர் கலைஞர் 'வாட்டர்' படப் பிரச்னை பற்றிப் பேசும்போது, எழுத்து - பேச்சு சுதந்தரத்தை மதிப்பதாகவும், ஆனால் மற்றவரைப் புண்படுத்தாத வகையில் அது இருக்க வேண்டும் என்றும் சொன்னார். இந்து மதத்தைப் பற்றி ஓர் இந்துவே விமர்சித்தால் அது சரியானதாகப் புரிந்து கொள்ளப்படும்; ஆனால் மாற்று மதத்தைச் சேர்ந்தவர் விமர்சித்தால் அது பிரச்னை ஆகிவிடும் என்றார். உங்கள் கருத்து என்ன?*

கலைஞர்கள் - சமூகத்தை மதரீதியாகப் பிரித்துப் பேசுவது நியாயமல்ல என்று சொல்லுவேன். சிந்தனையாளர்கள் - கலைஞர்கள் சொல்லுகிற கருத்துக்களுக்கு மதிப்புக் கொடுக்காமல், அவர்கள் இன்ன மதத்தைச் சேர்ந்தவர்கள்; அதனால் அவர்கள் விமர்சனம் தவறு என்று சொல்லுவது சரி அல்ல.

மேடையில் பேசும் போது, ஷபானா குறிப்பிட்ட சில கருத்துக்கள் :



• பெண்களுக்கு அதிக அதிகாரம் கொடுத்தால், ஆண்கள் எடுக்கும் முடிவுகளை விடப் பிரமாதமாக இருக்கும் என்றோ, மோசமாக இருக்கும் என்றோ சொல்ல மாட்டேன். ஆனால், நிச்சயம் வித்தியாசமான முடிவுகளாக இருக்கும்.

• மதக் கலவரங்கள் பற்றி விசாரிக்க அமைக்கப்பட்ட எந்த விசாரணை கமிஷன் ரிப்போர்ட்டும் திறந்து பார்க்கப்படுவதே இல்லை. ரங்கநாத் மிஸ்ரா கமிஷன், ஸ்ரீகிருஷ்ணா கமிஷன், லிபரான் கமிஷன் – எதுவாகட்டும், இவற்றின் பரிந்துரைகள் என்ன? இவை மீது நடவடிக்கை எடுக்காத பட்சத்தில், மைனாரிடிகள் எப்படி ஆட்சியாளர்கள் மீது நம்பிக்கை வைப்பார்கள்? ஒரே ஓர் ஆளைக் கொன்றால் அந்தக் கொலைக்குத் தண்டனை கொடுக்கிறார்கள். மதக் கலவரத்தின் போது பல பேரைக் கொன்றால், ஒரு தண்டனையும் இன்றி, குற்றவாளி தப்பித்து விட முடிகிறதே!

• என்னை இந்துமத அடிப்படைவாதிகளுக்குத்தான் பிடிக்காது என்பதல்ல. முஸ்லிம் – அடிப்படைவாதிகளுக்கும் என்னைப் பிடிக்காது!

• பிரச்னைகளுக்குத் தீர்வு காணும் முயற்சியில் ஈடுபடுகிறோம். நாங்கள் ஆண்களை எதிர்க்கவில்லை.

மேடையில் ஷபானா பேச வருமுன், அரங்கத்தில் கசமுச என்று பெண்களின் பேச்சுச் சத்தம். "உங்களுடன் சில முக்கியமான பிரச்னைகள் பற்றிப் பேச, பம்பாயிலிருந்து ஷபானா பறந்து வந்திருக்கிறார். அதனால் அமைதியாக அமர்ந்து அவரது பேச்சைக் கேளுங்கள்" என்றார் ஜெயந்தி நடராஜன். ஆனால், ஷபானா பேசிக் கொண்டிருக்கையில், ஜெயந்தி நடராஜன், மூப்பனார், சிவசங்கரி, வழக்கறிஞர் சுமதி எனும் நால்வர் கூட்டணி மேடையிலேயே ஓயாமல் பேசிக் கொண்டிருந்ததுதான் சோகம்!

**— சாருகேசி**

அட்டை வண்ணப்படம் : **பிரவீண்குமார்**

# பிளாஸ்டிக் பெட்டிக்குத் தடா!







ஒரு தனியார் நிறுவனத்தில் கம்யூனிகேஷன் மேலாளராக இருந்த சாருபாலாவுக்கு கர்நாடக இசையில் அளவு கடந்த ஈடுபாடு. முதல்தரமான சாஸ்த்ரிய சங்கீதத்தை மக்களிடம் எடுத்துச் செல்ல வேண்டும் என்பது இவரது லட்சியம்.

திருவிடைமருதூரைச் சேர்ந்தவர் சுரேஷ் கோபாலன் ஒலிப்பதிவு இன்ஜினியர். மலிவான விலையில் தரமான சங்கீதத்தை மக்களிடம் எடுத்துச் செல்ல வேண்டும் என்ற கனவுடன் வாழ்ந்து வந்தவர்.

சாருபாலாவுக்கும் சுரேஷ் கோபாலனுக்கும் இசையே நட்பை உண்டாக்க சார்கர் (சாருபாலா + சுரேஷ்) டிஜிட்டல் ஒர்க் ஸ்டேஷன் என்ற காஸெட் நிறுவனம் உதயமானது. ஒரே டேஸ்டுள்ள இருவரின் நட்பால் ஒரு நிறுவனம் துவக்கப்பட்டிருக்கிறது! அவ்வளவுதானே என்கிறீர்களா? ப்ளீஸ் வெயிட்!

சார்கர் நிறுவனம் வெளியிட்டுள்ள காஸெட்டுகளிலும், சி டிக்களிலும் உள்ள விசேஷம் அவை மற்ற நிறுவனங்களின் தயாரிப்புகள் போல பிளாஸ்டிக் பெட்டிகளில் அடைக்கப்படாமல் அட்டைப் பெட்டியில் பாக்கிங் செய்யப்பட்டிருப்பதுதான். பளபளா பிளாஸ்டிக் பெட்டியில், கலர் படங்கள் எடுப்பாகத் தெரிய, விற்பனைக்கு வரும் காஸெட்டுகள் மத்தியில், அவற்றுக்குச் சற்றும் குறைவில்லாத அட்ராக்‌ஷனுடன் மார்க்கெட்டில் வலம் வருகின்றன சார்கர் காஸெட்டுகள்.

''மண்ணோடு மண்ணாக மக்கிப் போகாத பிளாஸ்டிக் சமாச்சாரங்களை உபயோகப்படுத்துவது சுற்றுச்சூழலுக்கு கேடானது என்ற கருத்து உலகம் முழுவதும் வலுப்பட்டு வருகிறது. நாங்கள் சமுதாயத்துக்கு உதவியாகவும் ஏதாவது செய்ய முடியுமா என்று மூளையைக் கசக்கினோம். அதன் விளைவுதான் இந்த அட்டைப் பெட்டிகள்'' என்கிறார் சாருபாலா.

''காஸெட்டுகளையும் சிடிக்களையும் அட்டைப் பெட்டியிலா பாக் செய்து விற்கப் போகிறீர்கள்'' என்று எங்களை பயமுறுத்தியவர்களும் உண்டு. ஆனால் இப்போது எங்கள் தயாரிப்புகள் மக்களின் ஒப்புதலைப் பெற்று விட்டன'' என்கிறார் சுரேஷ் கோபாலன். (இருவரும் 'போட்டோ எடுக்க வேண்டாமே, ப்ளீஸ்!' என்கின்றனர்.)

பிளாஸ்டிக் பெட்டி என்றால் கீழே விழுந்தால் முனைகள் உடைந்து அப்புறம் உபயோகிக்கும்போது கைகளைக் கீறி விடும். ஆனால் அட்டைப் பெட்டியில் அது போன்று கிடையாது. சென்ற சங்கீத சீசனில் இவர்களது காஸெட்டுகள் விற்பனையில் கலக்கியதாம். இந்தியாவிலேயே வேறு எந்த காஸெட் நிறுவனமும் அட்டைப் பெட்டியில் பாக்கிங் செய்வதில்லை! இவர்களது முயற்சியைக் கண்டு மகிழ்ச்சியடைந்திருப்பவர்கள் காகிதம், அட்டைகள் தயாரிப்பவர்கள்தான். எல்லா காஸெட் கம்பெனிகளும் சார்கர் வழியைப் பின்பற்றினால் எங்களுக்குப் பெரிய மார்க்கெட் கிடைக்குமே!'' என்கிறார்கள் அவர்கள்.

''அட்டைப் பெட்டியில் போட்டது எங்களுக்கு வசதியாகப் போச்சப்பா. ரசிகர்களுக்கு பெட்டியின் மேலேயே கையெழுத்துப் போட்டுக் கொடுக்கலாமே'' என்றாராம் டாக்டர் பாலமுரளிகிருஷ்ணா.

— ஸ்ரீநிவாசன்

# மூலிகையே மூலிகையே...!

நிதிஷ் யாதவிற்கு இரண்டு குறி. ஒன்று... மனைவி சுஷ்மா சராசரி இந்தியப் பெண்மணியின் எடைக்கு வர வேண்டும். (நம்ம ஊர் சராசரியே ரொம்ப அதிகம் என்பது வேறு விஷயம்!) அநியாயத்திற்கு கிராஃபை கிழித்துக் கொண்டு எகிறும் பங்குச் சந்தை குறியீட்டு எண் போல எங்கேயோ போய்க் கொண்டிருக்கிறாள். அட்லீஸ்ட் அது அடிக்கடி குறைந்து கூடுகிறது. ஆனால் இவள்...! ஐந்து வாரத் திட்டம், ஐந்து மாதத் திட்டமென்று என்னவெல்லாமோ முயற்சி செய்து விட்டு கடைசியில் எடை குறைப்பு, நிறைவேறாமல் போகும் ஐந்து ஆண்டு திட்டமாகப் போனது. இருந்தும் நிதிஷ் தொல்லை தாங்காமல் "இளைத்துக் காட்டுகிறேன் பார்!" என்று சவால் விட்டு இரண்டு வாரமாக ரகசியமாக எங்கோ சென்று வந்தாள்.

இரண்டாவது குறி, பிரமோஷன். புலனாய்வுத் துறையில் இருப்பவனுக்கு இத்தனை ஆண்டுகளாக பிரமோஷன் ஏன் கிடைக்கவில்லையென்று புலனாய்வு செய்ய வேண்டிய மோசமான நிலைமை.

வேலையில்தான் விவரமில்லை. சுஷ்மா எங்கு ரகசியமாக போகிறாள் என்பதையாவது கண்டுபிடிப்போமென முடிவு செய்தான். அன்று பின்தொடர்ந்தான்.

மூடியிருந்த பெரிய கதவை இலேசாகத் திறந்து எட்டிப் பார்த்தான். பக்கென்றது. அது விசாலமான அறை. சுவர்களில் கண்ணாடி மயம். ஆங்காங்கே ஜிம்மில் இருக்கும் உடற்பயிற்சி சாதனங்கள். அறையின் சென்டரில் ஃபோம் மெத்தை மீது அமர்ந்திருந்தார் யோகி... கர்ம யோகி! ஜடாதாடி முடிக்குள் கொஞ்சூண்டு முகம். தேஜஸில் நட்சத்திரமாக மின்னியது. பக்கத்தில் பெரீ.....ய பானை!

சாமியார் என்றால் கேட்க வேண்டுமா, சுற்றி ஒரே பெண்கள் கூட்டம் – அதில் நிதிஷின் மனைவியும் இருந்தாள். இடுக்கு வழியாக கண்களை அகல விரித்துப் பார்த்தான். புதிதாகச் சேர்ந்த ஒரு பெண்ணுக்கு அறிமுகம் நடத்திக் கொண்டிருந்தார் யோகி. ஒரு பெண்ணைக் காட்டி, "இதோ இவங்க, இரண்டு மாதம்," என்று சொல்லி விட்டு இன்னொருத்தி பக்கம் திரும்பி, "உங்களுக்கு எத்தனை மாசம்?"

"நாலு ஜி!" என்றாள் வெட்கம் மேலிட. அவங்க ஆறு மாசம் என இன்னொருத்தியை காட்டினார்.

நிதிஷுக்குக் குழம்பியது. இரண்டு மாசம், நாலு மாசம் கம்மி, தெரியாம இருக்கலாம். ஆனா ஆறு மாசம் வயிறு காட்டி விடுமே!

பேசியபடியே புதியவளை பாட்டில்களாக அடுக்கி வைக்கப்பட்டிருந்த பெரிய மேஜை அருகே அழைத்துச் சென்றார் சாமியார். பாட்டில்களில் கலர் கலராக, பச்சை, மஞ்சள், நீலமென திரவங்கள். அருகில் அந்தக் காலத்து கம்பவுண்டர் அளவு கிளாஸ்.

திடீரென "புஷ் அப்ஸ்" செய்துவிட்டு ஒரு பெண் ஓடிவந்து. "ஜி, 20 மில்லி கொலஸ்ட்ரால் ஸ்வாஹா" எனக் கேட்டாள்.

பச்சை கஷாயத்தை ஜி கொடுத்ததும், "வெரி ஸ்வீட் ஜி!" சிரித்து விட்டு இடை பயிற்சி மெஷினுக்குத் திரும்பினாள்.

யோகி மேஜையிலிருந்த பாட்டில்களைக் காட்டி அந்தப் பெண்ணிடம், "இவையெல்லாம் நம்ம பாரம்பரியம்! ஆயிரமாயிரம் ஆண்டுகளுக்கு முன் நம் மூதாதையர் ஓலைச்சுவடியில் எழுதி விட்டு போன மூலிகை ரசங்கள். இமயம் முதல் குமரி வரை உள்ள பலதரப்பட்ட மூலிகை செடிகளிலிருந்து ரகசிய

ஃபார்முலா கொண்டு தயாராகும் அசாதா ரண ரசங்கள். என்ன, இது எல்லாமே எரிபொருள். நம் உடலில் தேவைக்கு அதிக மாக இருக்கும் கொழுப்புச் சத்தை எரித்து போசுக்கக்கூடிய எரிபொருள். மூலிகை எரிபொருள்!"

ஷாக்கடித்தது நிதிஷ்"க்கு... ஆ மூலிகை எரிபொருள்! அடிச்

அவள் இங்கு வந்த போது உன்னைப் போல் இரண்டு மடங்கிருந்தாள். இப்போ?"

"ஐஸ்வர்யா ராய் மாதிரி இருக்கா ஜி!"

"நீயும் ஆறு மாசத்தில ஐஸாயிடுவே. அதான் நம்ம "ஹெர்பல் ஸ்லிம்மிங்"கோட மகிமை. இளைப்பு



நிரந்தரம்! நோ சைட் எபெக்ட்ஸ்.

"ஏன்னா சைடே இருக்காது. அவ்வளவு மெலிஞ்சு போயிடுவே!" சொல்லிச் சிரித்தார்.

"வெரி கிரேட் ஜி!"

"பத்து நிமிஷம் ஒவ்வொரு உடற்பயிற் சியா செய்திட்டு இடையிடையே 20 மில்லி ஆரஞ்சு, பச்சை, நீல ரசங்களை குடிச்சாப் போதும்..."

"ஆறே மாசத்தில ஐஸ்!" முடித்தான் புதியவள். யோகி சேர்ந்து சிரித்தார்.

சது யோகம்! சகியே உன் தயவால் எனக்கு பிரமோஷன் கிடைக்கப் போகிறது. குஷ்! உஷ்! டைரக்டா டைரக்டர் பிரமோஷன்!

அறையினுள் யோகி தொடர்ந்தார். "இங்கே ஒரு மண்டலம் என்பது ஆறு மாசம். அந்த ஆறு மாச பெண்ணை பார்த்தியே,

## மொழிபெயர்ப்புப் பாலம்!

"இலக்கியத்தில் மொழிபெயர்ப்புகள்தான் பல்வேறு மக்களை இணைக்கும் பாலமாக இருக்கின்றன. உலக இலக்கியங்களின் மொழிபெயர்ப்புகள் புதிய இலக்கியங்களைப் படைக்க வழிகாட்டுகின்றன" என்கிறார் சேலம் தமிழ்நாடன்!



"ஏழு கார்ட்டூன்களும் ஒரு வண்ண ஓவியமும்" என்ற இவரது மொழி பெயர்ப்பு சிறுகதை தொகுப்புக்கு சமீபத்தில் சாகித்ய அகாடமி விருது கிடைத்துள்ளது.

"நோபல் பரிசு பெற்ற உலக இலக்கியங்களின் மொழிபெயர்ப்புகள்தான் ஓர் ஆசிரியர் போல் இருந்து கொண்டு என்னை ஒரு படைப்பாளியாகவும் விமரிசகனாகவும் வளர்த்தது.

சின்ன வயதில் நான் படித்த தாகூர், காண்டேகர் படைப்புகள், டால்ஸ்டாயின் அன்னாகரனினா போன்றவை இன்னும் என் நெஞ்சில் நிற்கின்றன. இந்த விருது குறித்து பெருமைப்படுகிறேன்" என்று கூறும் தமிழ்நாடனுக்கு ஆகஸ்ட் 4-ம் தேதி இவ்விருது வழங்கப்பட இருக்கிறது!

— சந்தியூர் கோவிந்தன்

அந்தக் காலை வேளையில் 'தடதட' வென்று கதவைத் திறந்து கொண்டு தடிதடியாக ஏழெட்டுப் பேர் யோகியின் அறைக்குள் நுழைந்தனர். அதில் நிதிஷும் ஒருவன்.

"மிஸ்டர்...."

"யோகி... கர்மயோகி" என்று ஜேம்ஸ்பாண்ட் பாணியில் கூறி கைகுலுக்கினார். "நீங்களெல்லாம்...?"

"சி.பி.ஐ! அட்டையைக் காட்டினார். நீங்க மூலிகை எரிபொருள் செய்யறதா தகவல் கிடைச்சிருக்கு."

அதற்குள் நிதிஷ், "உங்க வாயால அதை நீங்க ஒத்துக்கிட்டிருக்கீங்க. இதோ, என்று மைக்ரோ டேப்பை ஓட விட்டான். யோகி அந்தப் பெண்ணிடம் பேசியது பதிவாகியிருந்தது.

கேட்டுச் சிரித்தார் கர்மயோகி.

"என்ன, இதெல்லாம்?" என்று பாட்டில்களை காட்டி ஒருவன் கேட்டான்.

"பாரம்பர்யம்!"

இவரோட பரிசோதனைக் கூடத்தை சோதனை போடுங்கள் என்று ஒருவன் ஆணையிட்டான். ஒருவன் பல வண்ண புட்டிகளைத் திறந்து மோப்பம் பிடித்தான்.

அதற்குள் லேப்பிலிருந்து ஒரு குரல், "பாஸ் சீக்கிரம் இங்க வாங்க.. க்விக்."

அனைவரும் உள்ளே ஓடினர். பார்த்தால் ஒரே கோகோகோலா, பெப்சி, பேன்டா, தம்ஸ்அப், ரஸ்னா என்று ராட்சஸ பாட்டில்கள்மயம்!

"என்ன இது ஏமாத்து வித்தை? எங்கே மூலிகை எரிபொருள்?" யோகியை மிரட்டினர்.

"ஐயா, இதுவே நான் சொன்ன மூலிகை எரிபொருள்!"

"பொய் சொல்றான் தாடி!" கத்தினான் நிதிஷ்.

"இல்லையப்பா. நிஜந்தான். 'ஹெர்பல் ஸ்லிம்மிங்' வெறும் சேல்ஸ் பால்லா. மூலிகை ரசத்தை குடிக்க வேண்டுமென்றால் பத்து நிமிடம் உடற்பயிற்சி செய்ய வேண்டுமென்பது கட்டாயம். ஒவ்வொரு 20 மில்லி கோக், பேன்டா, ரஸ்னாவுக்கும் அவர்கள் உடற்பயிற்சி செய்வார்கள். அப்படித்தான் உடல் இளைக்கிறதே தவிர...

"அப்போ நம் பாரம்பர்யம்?"

"கசப்பான மருந்தை தேனில் குழைத்துத் தருவது நம் பாரம்பரியம், அதுபோல உடற்பயிற்சி எனும் மருந்தை 'மூலிகை ரசம்' எனும் கோக், பெப்சியில் கலந்து டேஸ்ட் மறைக்க நிறைய மினரல் வாட்டர் சேர்த்துத் தருகிறேனே!"

"ஐயோ அப்ப என் பிரமோஷன்!" அலறினான் நிதிஷ்.

"அதற்கும் நம் பாரம்பரியத்தில் வழி இருக்கிறது" என்று யோகி தாடியைத் தடவ அது கையோடு வந்தது.

— மாதுரி

காதில் விழுந்தவை



● மூன்று இடைத்தேர்தல்கள் முடிந்த பிறகு தமிழக காங்கிரஸ் பிரமுகர்கள் சிலர் "புதிய தமிழகத்துடன் கூட்டணி வைப்பது நல்லது. த.மா.காவை விட அந்த அமைப்பு செல்வாக்கு மிக்கது'' என்று மேலிடத்துக்கு கடிதம் எழுதியிருக்கிறார்கள். குறிப்பாக அறந்தாங்கி, திருச்சி சட்டமன்றத் தொகுதிகளில் த.மா.கா அணியில் இருந்து சென்ற பாராளுமன்றத் தேர்தலின்போது போட்டி போட்டபோது கிடைத்ததைவிட அதிக வோட்டுக்களை புதிய தமிழகம் இப்போது, தொகுதியில் பெற்றிருக்கிறதாம். இந்த நிலையில் தென் மாவட்டங்களில் தி.மு.க அணிக்கு வலுவூட்ட, கிருஷ்ணசாமியை, கலைஞர் பக்கம் சேர்த்து விடவும் சில சக்திகள் முயன்று வருகின்றன!



● ஒரு வழியாகத் தி.மு.க அமைப்புத் தேர்தல்கள் முடிந்துவிட்டன. முப்பதுக்கும் குறைவாக இருந்த மாவட்டங்களின் எண்ணிக்கை நாற்பத்தெட்டாக உயர்ந்திருக்கிறது. இந்த 48 'கட்சி' மாவட்டங்களில் முப்பது மாவட்டங்களில் ஸ்டாலினுக்கு வேண்டியவர்கள் எந்தப் போட்டியுமில்லாமல் தேர்ந்தெடுக்கப்பட்டிருக்கிறார்கள். குறிப்பாக சென்னை மற்றும் சென்னையைச் சுற்றியுள்ள மாவட்டங்களில் ஸ்டாலின் ராஜ்யம்தான். அவருக்கு வேண்டியவர்கள் தவிர வேறு யாரும் போட்டியிட முடியாத அளவு 'செல்வாக்கு' பிரயோகிக்

# புதிய தமிழகத்துக்கு கிராக்கி!

கப்பட்டதாகச் சொல்கிறார்கள். 'தளபதிக்கு வேண்டியவர்கள் தேர்ந்தெடுக்கப்படுவது ஒரு பக்கம் இருக்க, மாவட்டங்களைப் பிரித்ததற்கு காரணம் எந்தத் தனிப்பட்ட செயலாளரும் ஒரு முழு மாவட்டத்தை கண்ட்ரோல் பண்ணும் நிலையில் இருக்கக் கூடாது என்பதற்காகத்தான். வைகோ பிரிந்தபோது ஒன்பது மாவட்டச் செயலாளர்கள் உடன் சென்றனர். அப்போது அந்த மாவட்டங்களில் கட்சியே காலியானது போல் தோற்றம் உருவாக்கப்பட்டது. அது போன்ற சூழல் இனியும் வரக் கூடாது என்பதற்காகத்தான் இந்த 'பிரிப்பு' என்றார் அறிவாலயப் பிரமுகர் ஒருவர்.

● கன்னியாகுமரி மற்றும் புதுக்கோட்டை செயலாளர்களை மாற்றியதன் மூலம் அ.தி.மு.க.வில் தினகரனின் ஆதிக்கம் துவங்கி விட்டது' என்கிறார்கள் போயஸ்தோட்டத்து காவலர்கள். குறிப்பாக திருவண்ணாமலையில் நடந்த தினகரன் மகளின் காது குத்து விழாவுக்குச் சென்று வந்ததன் மூலம் சசிகலாவின் வட்டாரத்தின் மேல் தனக்குள்ள பிடிப்பு இன்னமும் மாறவில்லை என்று தெளிவுபடுத்தியிருக்கிறார் ஜெ என்கிறார்கள். அடுத்த சட்டமன்றத் தேர்தலுக்குப் பின் அவசியம் ஏற்பட்டால் தினகரனை தனக்கு அடுத்த நிலைக்குக் கொண்டு வர ஜெ. முடிவு செய்து விட்டதாக புலம்புகிறார்கள் சீனியர் அ.தி.மு.க. பிரமுகர்கள். இதற்கிடையில் ஜெ மற்றும் சசிகலா மீதான வழக்குகளில் தொடர் நடவடிக்கையில் மத்திய அரசின் செயல்பாடுகள் திருப்தியாக இல்லை என்று தி.மு.க சொல்ல வேண்டியவர்களிடம் சொல்லியிருக்கிறதாம்!

— சஞ்சயன்

# இது - உன் போல் கவிதையல்ல!

● எனக்காக நீ
திறந்து வைக்கும் ஜன்னலில்
காற்று என்
வந்து தொலைக்கிறது?

● உன்னிடமிருக்கும்
அழகுகளையெல்லாம்
ஒற்றை கவிதையில்
எழுதிவிட முடியாது.

எழுதும் போதே கூடி விடுகிற
அழகு உனக்கேயானது.

● நாம் நின்று பேசிய
நுணா மரத்தை
வெட்டி விட்டார்கள்.

நீ விட்டுப் போன சுவடுகளில்
வெயில் படுமே என்றுதான்
வருத்தப்படும் அந்த மரமும்.

● பெண் பார்த்துப் போனவன்
பிடிக்கவில்லை என்றதற்காக
சந்தோஷப்படுகிறாய்.

உன்னைப் பிடிக்காதவனும்
இருக்க முடியுமா?

● ஒரு தீக்குச்சியைப் போல
எவ்வளவு விரைவாக
தீர்ந்து விடுகின்றன
உனக்காக நான் கொளுத்தும்
உரையாடல்கள்.

போன பிறகும்
பேசிக் கொண்டிருக்கும்
ஊதுவர்த்தியை போன்றதுன்
சொற்கள்.

— யுகபாரதி

என்னவோ
வரம் கேக்கணும்னு
நினைச்சோமே...?

அதான்
யோசிக்கறேன்!

அடக்
கடவுளே!
ஞாபகமே
வர
மாட்டேங்குதே...!

கிளிண்டன்




2000 மார்ச் 26
பிரமாதி பங்குனி 13
மலர் : 58
இதழ் : 35


# கல்கி

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா - பாரதியார்.



## கிளிண்டன் விஜயம்: அட்வான்டேஜ் அமெரிக்கா!

இவ்விதழ் வெளியாகும் தினத்தில் அமெரிக்க அதிபர் கிளின்டன் இந்தியாவில் இருப்பார். அவரை வரவேற்பதற்காகத் தலைநகர் எப்படியெல்லாம் அலங்கரிக்கப்பட்டு தயாராகி வருகிறது என்று பக்கம் பக்கமாகச் செய்திகள் வெளியாகி வருகின்றன.

அமெரிக்க தரப்பிலும் மிக நீண்ட இடைவெளிக்குப் பிறகு இந்தியா செல்லும் ஓர் அமெரிக்க அதிபரின் பயணம் மும்முரமாகத் திட்டமிடப்பட்டுள்ளது.

கிளின்டனின் பாதுகாப்புக்கு என்ன ஏற்பாடுகள்; அவர் தங்குவதற்கு என்ன வசதிகள் என்றெல்லாம் பட்டியலிட்டாலும் இந்தியப் பிரதமரும் அவரும் எது குறித்துப் பேசி விவாதிக்கப் போகிறார்கள்; இந்த வி.ஐ.பி. வருகையால் இந்தியாவில் என்னென்ன நல்லது நடக்கும் போன்ற விவரங்களைத் தேடினால் குறட்டை சப்தம்தான் கேட்கிறது!

இந்திய அமெரிக்க உறவுகள் பலப்படுவதும் பரஸ்பர நம்பிக்கை உறுதிப்படுவதும் எதிர் காலத்துக்கு மிக அவசியமாகும்.

அமெரிக்காவைப் பொறுத்தவரை இந்தியா ஒரு மிகப் பெரிய நுகர்வோர் சந்தை. இந்திய அறிவுத்திறன் அந்நாட்டின் விஞ்ஞான, தொழில்நுட்ப முன்னேற்றத்துக்கு அளித் துள்ள கொடை கொஞ்ச - நஞ்சமல்ல! இந்த இரு அம்சங்களையும் வலியுறுத்தியே அமெரிக்கப் பொருளாதார ஆதரவையும் தார்மிக ஆதரவையும் கேட்டுப் பெறலாம்.




சமீப காலம் வரை இந்தியாவின் சோஷலிஸ சார்பு பிரகடனப்படுத்தப்பட்டு வந்தது. அமெரிக்கா சந்தேகக் கண்ணுடனேயே பார்க்கப்பட்டு வந்தது. தற்போது சோஷலிஸ சித்தாந்தங்களைக் கைவிட்டு, புதிய பொருளாதாரக் கொள்கை, தாராளமயமாக்கல், குளோபலைசேஷன் என்று முற்றிலும் மாறுபட்ட பாதையில் நாடு சென்று கொண்டிருக்கிறது. இந்த சித்தாந்த மாற்றத்தை அமெரிக்காவுக்கு நினைவூட்டி, உலகின் மிகப் பணக்கார நாடான அதனிடமிருந்து உதவிகளையும் சலுகைகளையும் அள்ளிக் கொள்ள இதனினும் சிறந்த சந்தர்ப்பம் அமையாது.

தொழிலகங்கள் நிறுவவும் தொழில்நுட்ப பரிவர்த்தனைக்கும் புதிய வர்த்தக ஏற்றுமதி ஒப்பந்தங்கள் செய்துகொள்ளவும் வரைவுத் திட்டம் போட்டு அதை உலகளாவ தமுக்கடித்திருக்க வேண்டாமோ? இதுதான் சமயமென்று, அமெரிக்கா விதித்துள்ள வர்த்தகத் தடைகளை நீக்கச் செய்ய அரசு வலியுறுத்தியிருக்க வேண்டாமோ? ஊஹூம்...! ஆர்.எஸ்.எஸ்.ஸில் அரசு ஊழியர் சேருவதற்கான தடையை நீக்குவதிலும் அதை நியாயப்படுத்துவதிலுமே நமது அரசின் கவனம் குவிந்திருக்கிறது!

இந்திய உற்பத்திப் பொருள்களான பாஸ்மதி, வேம்பு, மஞ்சள் போன்ற பலவற்றில் நமது பேடன்ட் உரிமையை வலியுறுத்தவும், கருத்தளவில் அமெரிக்காவுடன் முரண்பாடு நிலவுகிற வேறு பல சர்ச்சைகளைத் தீர்த்துக் கொள்வதற்கும் கிளின்டன் வருகையினால் காலம் கனிந்திருக்கிறது. ஆனால் நமது அரசோ கூட்டணி கட்சிகள் கிளப்பியிருக்கும் பட்ஜெட் சர்ச்சையிலிருந்தே விடுபட்டபாடில்லை!

காஷ்மீர் பிரச்னையில் அமெரிக்கா தலையிட அவசியமில்லை என்று வீம்பாகப் பேசி வந்தாலும் கிளின்டன் வருகையின்போது காஷ்மீர் விவாதிக்கப்படும் என்பதில் சந்தேகமில்லை. இந்த விவாதத்தை எப்படி அணுகுவது என்பதைப் பற்றி காக்கப்படும் மௌனமே அபாயச் சங்கொலிதான்!




பாகிஸ்தான் செல்வதென்று கிளின்டன் முடிவு செய்துள்ளது இந்திய வட்டாரங்களைச் சற்று கலக்கத்துக்குள்ளாக்கியிருக்கிறது. பாக். ராணுவ ஆட்சியை அமெரிக்கா அங்கீகரித்ததாகிவிடாதா? என்ற கேள்வி எழுந்துள்ளது.

தமது முடிவை நியாயப்படுத்தும் பொறுப்பு அமெரிக்க அதிபருடையதுதான். ஆனால், கிளின்டனின் இந்த முடிவைச் சாதகமாகப் பயன்படுத்திக் கொண்டு, அவர் மூலமே இந்தோ - பாக். உறவுகளைச் செப்பனிடும் முயற்சியில் இறங்கலாம். உதாரணமாக, சி.டி.பி.டியில் கையெழுத்திடுவது குறித்து ஒப்புதல் தந்து பாகிஸ்தானின் ஒப்புதலையும் கட்டாயமாக்கலாம். பாக். ஊக்குவிக்கும் பயங்கர வாதத்துக்கு முடிவு கட்ட, பொருளாதார ரீதியான புறக்கணிப்புத் திட்டம் வகுக்குமாறு அமெரிக்காவை வற்புறுத்தலாம்.

இவ்வாண்டு நிதிநிலை அறிக்கையில் ராணுவச் செலவு வரலாறு காணாத அளவுக்கு உயர்த்தப்பட்டுள்ளதை அறிவோம். இந்தோ - பாகிஸ்தான் உறவுகளின் மேம்பாடு ஒன்றுதான் இச் செலவைக் குறைக்க உதவும் என்பதையும் அறிவோம். அதன் மூலம் மிச்சப்படும் தொகை வளர்ச்சிப் பணிகளுக்குத் திசை திருப்பப்பட்டால் தேசப் பொருளாதாரம் முன்னேற்றமடையும் என்பதையும் அறிவோம். அமெரிக்க அதிபரின் விஜயம் இந்த மாற்றத்தைக் கொண்டு வருவதற்கு உதவக்கூடும். ஆனால் இந்தியத் தரப்பின் சுறுசுறுப்பும் முனைப்பும் 'பராக்கிரம பட்ஜெட்' போடுவதோடு நின்று போய் விட்டது!

தடபுடலான முன்னேற்பாடு, விருந்தோம்பல் என்று கிளின்டனுக்கு இந்திய விஜயத்தை மறக்க முடியாததாக்கிவிட்டோம். இந்த விஜயத்தால் இந்தியர்களுக்கும் மறக்க முடியாத நற்பயன்கள் விளைய வேண்டாமா...? இந்திய நுகர்வோர் சந்தையைப் பயன்படுத்திக் கொண்டு 'அட்வான்டேஜ் அமெரிக்கா' என்று கிளின்டன் 'டாடா' காண்பித்து விடுவார்... நாம் பற்றாக்குறை பட்ஜெட்களுடன் தொடர்ந்து போராடிக் கொண்டிருப்போம்! ○

# "மீண்டும்

ஒருபுறம் ஆக்ஸிஜன் இல்லாமல் தமிழ் சினிமா பாதாளத்தில் படுத்துக் கிடக்க, மறுபுறம் சினிமா கலையை கனவுகளோடு கற்று வரும் அரசு திரைப்படக் கல்லூரி மாணவர்கள், சப்தமில்லாமல் மூன்று சர்வதேச விருதுகளை வீடியோ டாகுமெண்டரி படங்களுக்காக வாங்கியிருக்கிறார்கள். இறுதியாண்டு படித்து வரும் அந்த எதிர்கால இயக்குனர்களை, அடையாறு திரைப்படக் கல்லூரி வளாகத்தில் தேடிப் பிடித்தோம்.

"என்னோட பெயர் பா. இரவிக்குமார். 'டைரக்ஷன்' படிக்கிறேன். ஃபௌண்டேஷன் ஃபார் வோர்ல்டு பாப்புலேஷன் என்ற சர்வதேச தொண்டு நிறுவனம் அமெரிக்காவில் இருக்கு. மக்கள் தொகை அதிகரிப்பு பற்றி விழிப்புணர்வு ஏற்படுத்தி வரும் இந்த நிறுவனம், ஒவ்வொரு வருடமும்,





• படப்பிடிப்பில் ஜெயந்தி சித்ரா

நடத்தற போட்டிதான் நாங்க கலந்துக்கிட்ட 'வோர்ல்டு பாப்புலேஷன் ஃபிலிம் அண்ட் வீடியோ பெஸ்டிவல்! உலக அளவில் நடக்கும் இந்தப் போட்டிக்கு, மக்கள் தொகை அபாயம்தான் தீம்.

"ஏழு டாகுமெண்டரி அனுப்பினோம். அதுல மூணு படங்களுக்கு சர்வதேச விருது கிடைச்சிருக்கு.

"நான் தயாரிச்சு, டைரக்ட் பண்ணினது 'நெவர் கம்ஸ் எகைன்'ங்கற டைட்டில்ல. டி.வி கோர்ஸ் படிக்கிற கிருஷ்ணமூர்த்திதான் கேமரா. பத்து நிமிஷம்தான் படம் ஓடும். படத்தோட ஓபனிங் உலகம் அழிஞ்சுட்ட மாதிரி காட்சிகள் நகரும். கேமரா மகாபலிபுரம் சிற்பங்கள்கிட்டே வரும்போது, அங்க உள்ள சிலைகள் பேசும். நம்மள தினம் தினம் வந்து பார்த்துக்கிட்டிருந்த மனுசங்க எங்கே? அப்போ ஒரு அசரீரி குரல், 'சுற்றுச் சூழல் அழிஞ்சு – சுவாசிக்க சுத்தமான காற்று இல்லாமல், கடைசி மனிதனும் இறந்து விட்டான். மரண அமைதி! இப்படியொரு நிலைமை வரலாம். வராம இருக்க நாம என்ன செய்யணும்– இருக்கிற இயற்கை வளங்களைக் காப்பாத்தணும். மக்கள் தொகை அதிகரிக்க, அதிகரிக்க... இயற்கை வளங்கள் அழியும்– இல்லேன்னா அழிக்க வேண்டி வரும். இதான் படத்தோட மெசேஜ்!" என்று சொல்லும் ரவிக்குமாருக்கு மணிரத்னத்திடம் அசிஸ்டெண்டாக சேர வேண்டும் என்று ஆசை!

"நான் க. ஜெயபாலன். 'இயக்கம்' படிக்கிறேன். 'நியூ பிரின்சிபில் ஆஃப் பாப்புலேஷன்'ங்கறது என் படத்தோட டைட்டில்.



• இடமிருந்து வலம் : ரஷித், ஜெயபாலன், ஜெயந்தி சித்ரா, முத்துக்குமார், ரவிக்குமார்

# கர்ப்பத்துக்குள்!''

உலக அளவில் அறியப்பட்ட நம்ம நாட்டு விவசாய அறிஞர் எம்.எஸ். சுவாமிநாதன் கிட்ட ஆறு கேள்விகள் கேட்டு அதை நேர் காணல் உத்தியில் டாகுமெண்டரியா மாத்தி யிருக்கோம். சுவாமிநாதனோட ஒவ்வொரு பதிலும் படத்தில் ஒவ்வொரு தீர்வா அமைஞ்சுடுச்சு. தயாரிப்பாளர் கே. முத்துக் குமார் என்னோட க்ளாஸ்மெட்.

விருது வாங்கிய மூன்றாவது டாகு மெண்டரியை இயக்கியவர், த. ஜெயந்தி சித்ரா. ஒளிப்பதிவு செய்தவர் பி.ஏ. ரஷித். இருவருமே எடிட்டிங் மாணவர்கள். ''இருபதாண்டு கல்லூரி வரலாற்றில், எடிட்டிங் மாணவர்கள் படம் டைரக்ட் செய்து விருது வாங்குவது இதுதான் முதல் தடவை. 55 நிமிஷம் ஓடுற எங்க டாகு மெண்டரியோட டைட்டில் 'பன்டோரா'. கிரேக்க புனைக்கதை ஒண்ணு இருக்கு. அதைத்தான் நாங்க டைட்டிலா வெச்சோம். தாய் வயிற்றில் கர்ப்பத்தில் இருக்கும் பெண் குழந்தை, தான் பிறக்கப் போகும் உலகம் எவ்வளவு அழகாய் இருக்கும்னு கற்பனை செய்து பார்க்கிறது. ஆனால் பிறந்த பிறகு, அது யோசித்து வைத்திருந்த உலகத்திற்கும்... பார்க்கிற உலகத்திற்கும் உள்ள வேறுபாட் டைப் பார்த்து விட்டுத் திரும்பவும் கர்ப் பத்திற்கே போக விரும்புது... குழந்தை இப் படி நடப்பு உலகத்தை வெறுக்க என்ன கார ணம்... எது காரணம்... யார் காரணம் இந்த ஆங்கிள்ல டாகுமெண்டரி போகுது... குடி சைவாழ் மக்கள்லேர்ந்து பல துறை நிபுணர் களின் பேட்டிகளையும் டாகுமெண்டரில சேர்த்திருக்கோம். இந்த வெற்றி எங்க திறமைக்குக் கிடைத்ததுன்னு சொல்றதை விட, இந்திய மாணவர்களுக்கு, மக்கள் தொகை வளர்ச்சி பத்தி விழிப்புணர்வு இருக்கான்னு அமெரிக்கா நமக்கு வெச்ச சோதனைக்குக் கிடைத்த வெற்றின்னு சொல்லணும்.''

**வி**ருது வாங்கிய மூன்று டாகுமெண்டரி களையும் சொந்தச் செலவில் தயாரித்திருக் கிறோம் என்று சொல்லும் இந்த செல்லு லாய்டு சிறகுகளின் ஒவ்வொரு குடும்பமும் அளவான குடும்பமாம்!

— விஷுவல்தாசன்

படம் : வெங்கடேஷ்



• துரைப்பாண்டியனுடன் ராபின்

# எட்டு வருஷம் ஆனா குட்பை!

"செங்கல்பட்டில் நடந்தது அந்தக் கொலை. உடலைச் சுற்றிப் போலீஸ"ம் பொதுமக்களும்! அப்போதுதான் சில கான்ஸ்டபிள்கள் துணையோடு வந்தார் ராபின். உடலை சுற்றிப் பார்த்துவிட்டு(!) நேராக ஓடினார்... ஓடினார்.... ஓடிக்கொண்டே இருந்தார். ஒன்று இரண்டல்ல; பதினேழு கிலோமீட்டர்! கூடவே போலீஸ்காரர்களும்! திருக்கழுகுன்றம் வரை ஓடிச்சென்று அங்கு ஹாயாக கொட்டாவி விட்டுவிட்டு படுக்கப் போன அந்த இளைஞரை 'கப்'பென்று பிடித்துக்கொண்டனர்.

– இது, ராபினின் திறமைக்கு ஒரு சாம்பிள்! கடந்த எட்டு வருடமாக போலீஸ் துறையில் பல சாதனைகளைச் செய்துள்ள இந்த ராபின் என்ற துப்பறியும் நாய், கடந்த 12ம் தேதி ஏலம் விடப்பட்டது!

அறிவித்தபடி மிகச் சரியாக 10 மணிக்கு உதவி கமிஷனர் நாகராஜன் முன்பு ஏலம் துவங்க, வந்திருந்த ஐந்து பேர்களில் கிரிமினல் வழக்கறிஞர் துரைப்பாண்டியன் 4,450 ரூபாய்க்கு ஏலத்தில் கேட்டார் நாயை!

ஒரு தரம், இரண்டு தரம், மூன்று தரத்திற்குப் பிறகு அவரிடம் ஒப்படைக்கப் பட்டது நாய்!

"நம்மைவிட ஆயிரம் மடங்கு அதிகமான மோப்ப சக்தி நாய்க்கு உண்டு. பல்வேறு விதமான ஸ்மெல்களை நாய்கள் கண்டு பிடிக்கும். இங்கு இருக்கிற பத்து நாய்கள்ல ராபின் ரொம்ப பாசமானது; இப்ப பாருங்களேன்'' என்ற டெபுடி கமிஷனர் ஜெஸ்பார் ராஜா சிங், 'டேய் ஹலோ சொல்லு' என்றதும் இலேசாக ஊளை யிடுகிறது. (ஹலோ மாதிரி!)

இந்த ராபின் லேபரடார் ரிட்ரீவர் வகையைச் சேர்ந்த நாயாம்!– தேசிய அளவில் மெடல்கள் வாங்கி இருக்கிறதாம்!

நாக்கை நீளமாகத் தொங்கப் போட்டுக் கொண்டு மூச்சை இரைத்தபடி சுற்றி சுற்றி வரும் ராபினைப் பிடித்துக் கொண்டு சொன்னார் அதன் ட்ரெய்னர் வெங்கடேசன்:

"ஒரு நாய்க்கு எட்டு வருஷம் தான் மோப்ப சக்தி நல்லா இருக்கும். அதுக்கப்புறம் முடியாது. ஒரு வெட்ரினரி டாக்டர் வந்து செக் பண்ணி சர்ட்டிபிகேட் கொடுத்த பிறகுதான் நாங்க ஏலம் விடறோம். எப்போதுமே அதுகூடவே இருக்கிறதால ஒரு நாள் பாக்கலைனா கூட மறுநாள் வந்தா குலைக்கும். இங்க இருந்து இதை அனுப்பறது மனசுக்கு கஷ்டமாத்தான் இருக்கு. வேறென்ன செய்ய முடியும்? சொல்லுங்க!"

வழக்கறிஞர் துரைப்பாண்டியனிடம் "இவ்வளவு விலை கொடுத்து இதை வாங்கறீங்களே..." என்றால், "எனக்கு நாய் வளர்க்கிறது ஒரு ஹாபி, அதுவும் போலீஸ் நாய்னா ரொம்ப நல்லாயிருக்கும். இதுக்கு முன்னால இங்க புருஸ்லீங்கற நாயை ஏலம் விட்டப்போ கூட நான்தான் அதை எடுத்தேன். அது பாம் ஸ்குவாட்ல இருந்த நாய். கோயமுத்தூர்ல நிறைய குண்டுகளை அது கண்டு பிடிச்சிருக்கு. அப்படிப்பட்ட திறமையான நாய்களை நல்லா வளர்க்கணும்கறதுதான் ஆசை. இன்னும் எத்தனை போலீஸ் நாய் ஏலம் விடப்பட்டாலும் அதை எடுப்பேன். அந்த நாய்களுக்கு நல்லது செய்யும் விதமாக" என்கிறார் சிரித்துக்கொண்டே!

— சலாம்ஜி

படம்: வெங்கடேசன்

# ஸ்ரீ டிராவல்ஸ்

194-A, முதல் மாடி, அண்ணாசாலை, சென்னை - 600 006.
12/a, ரெட்ஹில்ஸ் ரோடு, கொளத்தூர், சென்னை - 600 099.
போன் : 5568620, பேக்ஸ் : 5564866
பேஜர் : 9632-701579 இ-மெயில் :sritrave@satyam.net.in

**கோடை விடுமுறையை உங்கள் குடும்பத்துடன் மகிழ்ச்சியுடன் கழித்திட ஸ்ரீ டிராவல்ஸ் அளித்திடும் அருமையான சுற்றுலாக்கள்!**

அனல் பறக்கும் கோடையில் ஹிமாசல பிரதேசத்தின் பனிப்பொழிவுகளில் உங்கள் குடும்பத்துடன் குதூகலித்து மகிழ்ந்திடுங்கள்!



ரோடங் பாஸில் எமது சுற்றுலா குழுவினர்

புறப்படும் தேதிகள் : 30-04-2000
மற்றும் 13-05-2000

**சென்னை-டில்லி-குருசேத்திரா-சண்டிகார்-சிம்லா-குலு-மணாலி-ரோடங்பாஸ்-டில்லி-விருந்தாவன்-மதுரா-ஆக்ரா-சென்னை.**

பயணத்தொகை : ரூ.6,500/-
பயணநாட்கள் : 13 நாட்கள்

## ST - 16 கோவா சுற்றுலா

புறப்படும் நாள்: 15.04.2000

**சென்னை-கோவா-மும்பாய்-நாசிக்-திரியம்பகம்-பஞ்சவடி-ஷீரடி-அவுரங்காபாத்-அஜந்தா-எல்லோரா-சனிசிங்கானப்பூர்-சென்னை.**

பயணநாட்கள் : 9 பயணத்தொகை : ரூ.4,800/-

## ST - 17 அந்தமான் சுற்றுலா

அந்தமான் தீவுக்கூட்டங்களின் இயற்கையழகை காணுங்கள்

புறப்படும் தேதி: 21.04.2000

**சென்னை-போர்ட் பிளேர்-சென்னை**

பயணநாட்கள் :12 பயணத்தொகை : ரூ.6,500/-

(கப்பலில் உயர்வகுப்பு பயணம் மற்றும் விமானப் பயணம் வேண்டுவோருக்கு பிரத்தியேக வசதி உண்டு)

## ST - 20 நேபாள சுற்றுலா

கொளுத்தும் வெயிலில் குளுகுளு பனிமலை பிரதேசங்கள்

புறப்படும் தேதி : 22.05.2000

**சென்னை-கல்கத்தா-கேங்டாக்-டார்ஜிலிங்-காத்மாண்டு-போக்ரா - கோரக்பூர்- வாரணாசி - சென்னை**

பயணநாட்கள் :12 பயணத்தொகை :ரூ.6,900/-

- மிகவும் தரமான ஹோட்டல்களில் பிரத்தியேகமான தங்கும் அறைகள்.
  (கலர் டி.வி., போன், ஹீட்டர், கார்பெட் மற்றும் பாத்டப் வசதிகளுடன்)
- பிராமண சமையல்காரர்களால் தயாரிக்கப்படும் தரமான தென்னிந்தியசைவ உணவு.
- வழக்கம்போல் விருந்து மற்றும் இன்னிசை நிகழ்ச்சியும் உண்டு.
- வெளியூர்களில் இருந்து கலந்து கொள்பவர்களுக்கு எமது செலவிலேயே ரயிலில் டிக்கெட் வசதி செய்து தரப்படும்.
- **16 பேர் கொண்ட குழுவினராக வருபவர்களுக்கு பிரத்தியேக தள்ளுபடி உண்டு.**

**அனைத்து கிரெடிட் கார்டுகளும் கமிஷன் இன்றி ஏற்றுக் கொள்ளப்படும்.**

**L.T.C. வசதி உண்டு.**

**ஏமாற்றத்தை தவிர்க்க உடனே முன்பதிவு செய்யுங்கள்!**

# — ஜனாவுடன் ஒரு சந்திப்பு!

**பா.ஜ.கவின் தேசியத் தலைவராக வரும் வாய்ப்பு பிரகாசமாக உள்ள நிலையில் கடந்த வாரம் சென்னைக்கு வந்திருந்தார் அதன் துணைத் தலைவரான ஜனா. கிருஷ்ணமூர்த்தி. நடப்பு அரசியலைப் பற்றிய கேள்விகளோடு அவரை அவரது இல்லத்தில் பேட்டி கண்டோம்:**

*தேவையில்லாமல் ஆர்.எஸ்.எஸ். பிரச்னையைக் கிளப்பி விட்டதன் மூலம் பாராளுமன்றம் செயல்படாத நிலையை உருவாக்கியதற்கு பா.ஜ.கவும் காரணமல்லவா...?*

**ஜனா கிருஷ்ணமூர்த்தி :** ஆர்.எஸ்.எஸ். விவகாரத்தில் நடந்தது என்ன? மாநில அரசு ஊழியர்கள் ஆர்.எஸ்.எஸ்.ஸில் பங்கு பெற இருந்த தடையை வாபஸ் வாங்கியது குஜராத் மாநில அரசு. இது ஒரு மாநில அரசு சம்பந்தப்பட்ட விவகாரம். இந்த "வாபஸ்" குறித்து எதிர்க்கட்சிகள் போராட்டம், ஆர்ப்பாட்டம் நடத்துவதென்றால் அவற்றை குஜராத் மாநிலத்தில்தான் நடத்த வேண்டும். அதை விட்டு விட்டு, பாராளுமன்றத்தை நடத்த விடாமல் ஸ்தம்பிக்கச் செய்வது என்ன நியாயம்?

இது சம்பந்தமாக மத்திய அரசு ஏதாவது உத்தரவு போட்டிருந்தால் அதை எதிர்த்து பாராளுமன்றத்தில் செயல்பட்டிருக்கலாம். மத்திய அரசு ஊழியர்கள் ஆர்.எஸ்.எஸ்ஸில் பங்குபெற தடை நீடிக்கிறது; அதில் ஒன்றும் மாற்றம் இல்லை; மாற்றமும் இருக்காது; அது போன்ற நோக்கம் இல்லை என்று விளக்கிய பிறகும் காங்கிரஸ் பாராளுமன்றத்தைத் தொடர்ந்து நடத்த விடாததன் காரணம் அதன் உட்கட்சிப் பிரச்னைகள்தான். சமீபத்தில் முடிந்த மாநில சட்டமன்ற தேர்தல்களில் காங்கிரஸ் வாங்கிய அடியால் அதன் தலைமைக்குச் சோதனை. எனவே கட்சிக்காரர்களை திசைதிருப்ப ஆர்.எஸ்.எஸ். பிரச்னையை எடுத்துக் கொண்டது, அதன் தலைமை.

*"பத்து, பதினைந்து நாட்கள் கழித்து தனது முடிவை மாற்றிக் கொண்ட குஜராத் மாநில பா.ஜ.க. அரசு, முதலிலேயே இதைச் செய்திருந்தால் பாராளுமன்றப் பணிகள் தங்குதடையில்லாமல் நடந்திருக்குமே...?"*

"மாநில அரசு எடுத்த முடிவை மாற்றிக் கொள்ளச் சொல்லி மத்திய அரசு எப்படி நிர்ப்பந்தம் செய்ய முடியும்? அப்படிச் செய்தால் மாநில விவகாரத்தில் நேரிடையாகத் தலையிட்டதாக ஆகாதா? மாநில அரசின் முடிவுகளை





பாராளுமன்ற நிர்பந்தங்களின் மூலம் மாற்ற முடியும் என்றால் அது தவறான முன்னுதாரணமாகப் போய் விடுமே! நமது கூட்டு ஜனநாயகத்திற்கு மிகவும் முரண்பட்ட நிலையைத்தான் இதுபோன்ற போக்குகள் உருவாக்கும்.

ஆர்.எஸ்.எஸ். என்பது ஜனநாயக நாட்டில் சட்டபூர்வமாக இயங்கி வரும் அமைப்பு. அதை ஆதரிப்பவர்களும் எதிர்ப்பவர்களும் இருக்கிறார்கள். தங்களுக்கு உடன்பாடில்லை என்ற ஒரே காரணத்திற்காக இதைப் பொதுப் பிரச்னையாக்கி பாராளுமன்ற நடவடிக்கைகளை ஸ்தம்பிக்கச் செய்தது காங்கிரஸ். இது நாட்டுநலனில் கொஞ்சமும் அக்கறையில்லாத செயல். ஆனால் அதற்கு நேர்மாறாக, தங்களது செயல்களால் மத்தியில் ஆளும், தேசிய ஜனநாயக முன்னணி அரசுக்கு எந்தச் சங்கடமும் வரக் கூடாது என்பதற்காக தமது உத்தரவை மறுபரி

சிலனை செய்தது குஜராத் மாநில அரசு. எனவே, பாராளுமன்றத்தை ஸ்தம்பிக்கச் செய்ததன் மூலம், ஜனநாயகத்துக்கு எதிராக – மக்களுக்கு எதிரான செயல்களில் ஈடுபட்டது காங்கிரஸ்தான். இந்த விவகாரத்தில் தோழமைக் கட்சிகள் அரசுக்கு எந்த நிர்பந்தத்தையும் உருவாக்கவில்லை.

''ஆர்.எஸ்.எஸ்ஸ¬க்கு புதிய தலைவர் வந்திருக்கிறார்.



# "ராப்ரி அரசை காங்கிரஸ் கவிழ்க்கும்!"

இனி அதன் 'அழுத்தம்' அரசின் மீது எப்படியிருக்கும்?''

புதிய தலைமை காரணமாக பா.ஜ.க. மீது எந்தவிதமான அழுத்தமோ, நிர்ப்பந்தமோ வராது.

"பீஹார் விவகாரம் மத்திய அரசின் இமேஜை பாதிப்பதாக அமைந்து விட்டதே. குறிப்பாக கவர்னரின் செயல்பாடு...''

"பீஹாரைப் பொறுத்தமட்டில் காங்கிரஸ் சந்தர்ப்பவாதத்தோடு செயல்பட்டிருக்கிறது. தேர்தலுக்கு முன் லாலுவின் காட்டாட்சிக்கு ஆதரவு கொடுத்ததற்காக மக்களிடம் மன்னிப்புக் கேட்டு பிரச்சாரம் செய்தது அக்கட்சி. அப்படிப்பட்ட காங்கிரஸ் மீண்டும் லாலு கட்சி ஆட்சிக்கு வர எந்தவிதத்திலும் உதவாது என்ற கருத்தின் அடிப்படையிலும், அதிக சட்டமன்ற உறுப்பினர்கள் எங்கள் கூட்டணியை ஆதரித்த காரணத்தினாலும் தான் கவர்னரால் ஆட்சியமைக்க நிதிஷ்குமார் முதலில் அழைக்கப்பட்டார். சென்ற சட்டமன்றத்தில் இருந்ததை விட, பா.ஜ.க.வுக்கும் கூட்டணிக் கட்சிகளுக்கும் இந்த முறை அதிக இடங்கள் கிடைத்திருக்கின்றன. அதே சமயம் லாலுவின் கட்சிக்கு செல்வாக்கு குறைந்திருக்கிறது. இப்போதைக்கு வேண்டுமானால் காங்கிரஸ் உதவியுடன் சிறிது காலம் ராப்ரிதேவி ஆட்சி நடத்தலாம். ஆனால் 'ஆதரவு கொடுத்து பின்னர் கழுத்தை அறுக்கும் கலாசாரத்துக்கு' சொந்தமான காங்கிரஸ், ராப்ரியின் அரசைக் கண்டிப்பாக கவிழ்க்கும்.

"தோழமைக் கட்சிகளோடு பா.ஜ.க. உறவு எப்படியிருக்கிறது?''

பா.ஜ.கவின் தோழமைக் கட்சிகள் மிக இணக்கமான முறையில் செயல்பட்டு மத்திய அரசை நடத்தி வருகிறார்கள். பல பிரச்னைகளில் கருத்து வேறுபாடு இருந்தாலும் ஒரு பொதுத் திட்டத்தின்படி மத்திய அரசு செயல்படுகிறது. எப்படிப்பட்ட கருத்து வேறுபாடுகள் வந்தாலும், ஒன்றுகூடிப் பேசி கருத்தொற்றுமை காணும் மனோதைரியமும், விவேகமும் வாஜ்பாய்க்கு உண்டு.

"குறிப்பாக தி.மு.க. – பா.ஜ.க. உறவு பற்றி என்ன சொல்கிறீர்கள்? அடுத்த சட்டமன்றத் தேர்தலிலும் தோழமை நீடிக்குமா?''

தோழமை இன்னமும் நீடிக்கிறது. வரும் சட்டமன்ற பொதுத் தேர்தலிலும் நீடிக்க வேண்டும் என்பதே எங்கள் விருப்பம். தோழமைக் கட்சிகளோடு கூட்டணி அமைத்து தேர்தலில் போட்டியிடும் போது, மற்ற கட்சி வேட்பாளர்களையும் எங்கள் வேட்பாளர்களாக நினைத்து கடுமையாக உழைப்பவர்கள்தான் பா.ஜ.க. தொண்டர்கள்.

"முன்பு ஜெ.வுடன் உறவு; இப்போது தி.மு.க.வுடன் உறவு... இந்த மாற்றத்தில் என்ன வேறுபாடுகளைக் காண்கிறீர்கள்?"

"சென்ற முறை ஜெயலலிதா எங்களுக்கு ஆதரவளித்த போது பல சங்கடங்கள். தம் சுயநலத்துக்காக, பல நிர்ப்பந்தங்களை உண்டாக்கினார் ஜெயலலிதா. அவற்றை நாங்கள் ஏற்க முடியாதென்ற நிலையில் ஆதரவை வாபஸ் பெற்றார். அதுமாதிரியான சங்கடங்கள் இப்போது கிடையாது. தி.மு.க. அமைச்சர்கள் மத்திய அரசில் நல்ல முறையில் பணியாற்றிக் கொண்டிருக்கிறார்கள்.



''தம்பி நீ எங்கே வேலைக்குப் போகிறாய்?''
''எங்க அப்பாவுக்கு உதவியா இருக்கேன் சார்...''
''அப்படியா, வெரிகுட்! உங்கப்பா என்ன பண்ணிட்டு இருக்கார்?''
''வீட்ல சும்மாதான் இருக்கார் சார்?!''
– அருள் மூர்த்தி

"அ.தி.மு.க.வுடன் மீண்டும் பா.ஜ.க. கூட்டணி சேரும் வாய்ப்பு உள்ளதா? ஏனென்றால் அரசியலில் நிரந்தரப் பகைவர்களோ எதிரிகளோ கிடையாதே!"

தமிழகத்தைப் பொறுத்தவரை ஏற்கெனவே கூட்டு சேர்ந்து பெற்ற மோசமான அனுபவத்தின் அடிப்படையில், மீண்டும் அ.தி.மு.க. – பா.ஜ.க. கூட்டு ஏற்பட சற்றும் வாய்ப்பு கிடையாது.

''ரேஷன் அரிசிக்கு மானியத்தை வெட்டக் கூடாது என்று தோழமைக் கட்சிகள் அழுத்தம் கொடுத்து வருகின்றனவே?''

''இந்த வருட பட்ஜெட்டில் 1,30,000 கோடி பற்றாக்குறை உண்டாகியிருக்கிறது. இந்தத் துண்டை சரிசெய்து, பொருளாதார நிலையை உயர்த்த மூன்று விஷயங்களில் நாம் கவனம் செலுத்த வேண்டியிருக்கிறது. செலவினங்கள், வாங்கிய கடனுக்கு வட்டி, மற்றும் மானியத் தொகை என்று அந்த மூன்று பிரச்னைகளை முன்வைத்துதான் பட்ஜெட் தயாரிக்கப்பட்டிருக்கிறது. பல அதிரடி நடவடிக்கைகள் எடுப்பதன் மூலமே நாட்டை வளர்ச்சிப் பாதைக்கு கொண்டு போக முடியும். இதைத் தோழமைக் கட்சிகளும் உணர்ந்துள்ளன. மானியத்தைக் குறைப்பதால் ரேஷன் அரிசி விலை உயரும். அதனால் தோழமைக் கட்சிகள் ஆட்சேபிக்கின்றன. நான் ஏற்கெனவே சொன்னது போல் வாஜ்பாயும் நிதியமைச்சரும் தோழமைக் கட்சிகளை அழைத்துப் பேசி கருத்தொற்றுமை காணுவார்கள்.

''பா.ஜ.கவின் அடுத்த தலைவராக வரும் வாய்ப்பு பெற்ற நீங்கள், விவசாயிகளுக்கு வருமான வரி போட வேண்டும் என்று பேட்டியளித்து கட்சிக்கு சங்கடமான நிலையை உண்டாக்கியதாகச் சொல்லப்படுகிறதே?''

''முழுக்க, முழுக்க பொருளாதார விவகாரங்களைப் பற்றி, செய்தி நிறுவனம் ஒன்றுக்கு அளித்த பேட்டி முன்னுக்குப் பின்னாக வந்து விட்டது. 'அரசின் வருமானத்தை உயர்த்த சமுதாயத்தில் விவசாயிகள் உட்பட மேலும் பல பிரிவினரை வருமான வரி வரம்புக்குள் கொண்டு வந்தால் என்ன?' என்றார் பேட்டியாளர். "80, 90 சதவீத விவசாயிகள் வறுமையோடு தான் போராடிக் கொண்டிருக்கிறார்கள். இந்த நிலையில் வசதி படைத்த விவசாயிகள் வருமான வரி வரம்புக்குள் வந்தால் அரசுக்கு நல்லதுதானே'' என்றுதான் சொன்னேனே தவிர, விவசாயிகளுக்கும் வருமான வரி விதிக்க வேண்டும் என்று சொல்லவில்லை. கட்சி மட்டத்தில் எந்தப் பிரச்னையும் இல்லை. மற்றபடி பா.ஜ.க. தலைவர் பொறுப்பென்பது கட்சி தீர்மானிக்க வேண்டிய விவகாரம். மூன்று மூத்த தலைவர்கள் கூடி விவாதித்து, எல்லோரும் ஏற்றுக் கொள்ளக்கூடிய ஒருவரைத் தேர்ந்தெடுப்பார்கள்.

சந்திப்பு : **ப்ரியன்**
படங்கள் : **வெங்கடேஷ்**

# மாறிப்போன கிளைமாக்ஸ்!

✉ எந்தவித வளர்ச்சிக்கும் வழிகாட்டாத சாதாரணமான பட்ஜெட்டை வெளியிட்டு மக்களை ஏமாற்றி விட்டது பா.ஜ.க. அரசு. மொத்தத்தில் கூட்டிப் பார்த்தால் தொகை சரியாய் வருவதைத் தவிர வேறு சிறப்பம்சம் இடையாது. உண்மை நிலையைப் படம்பிடித்துக் காட்டிய கல்கிக்கு நன்றி.
தூத்துக்குடி, கே. சுதர்ஷன்.

✉ 'சூப்பர் சேவகர்' பி. வினாயகச்செல்வம் பற்றி வந்த செய்தியைப் படித்தேன். தினமும் வேலை செய்த நேரம் போக சேவை செய்யும் மனப்பான்மையுள்ள இவரைப் போன்ற இளைஞர்களை ஊக்குவிக்க வேண்டும்.
லால்குடி,
எம். இராஜேந்திரன்.

✉ தூண்டி விடும் உமக்குத்தான் அதிக தண்டனை கிடைக்கும். ஜாக்கிரதை! உம்மை யார் பழைய நல்ல டிசைன் நகைகளை கலரில் வெளியிடச் சொன்னது?
சென்னை – 78,
ஏ.பி. மதிவாணன்.

✉ ஆனந்தியின் 'சிரித்தாடும் கண்ணன்' மிக நளினம். மெய்யான பக்தியும், நல்ல ரசனையும் இருந்தால் மட்டுமே இப்படி நயமாக எழுத முடியும். ஊத்துக்காட்டையே கண்முன் நிறுத்தி விட்டார்!
பெங்களூர் – 8,
ப.சு. வைத்தியநாதன்.

✉ முகவரியின் கிளைமாக்ஸ், ரிலீஸுக்குப் பிறகு அவசரமாகச் சேர்க்கப்பட்டது. கேமராவுக்கு முதுகு காண்பித்து சோகமாக அஜீத் நடந்து போவதுதான் ரிலீஸின் போது கிளைமாக்ஸ்!
பொன்மலை,
ஆர்.பிரகாஷ்.

✉ முகவரி பட விமர்சனம் கன கச்சிதம். பாராட்ட வேண்டிய இடங்களில் பாராட்டி, குட்ட வேண்டிய இடங்களில் குட்டிவிட்டீரே!
சிதம்பரம், ஸ்ரீவித்யா காளிதாஸ்.

✉ சொக்கர் சொல்வது போல, த.மா.கா. தனியாக நின்று ஜெயிக்காமல் போனால், சுயநலமிகள் வெளியேறி, கட்சி இன்னும் பலம் பெறும் என்பது உண்மை. ஆனால் வாக்கு வங்கி, பதவி, சந்தர்ப்பவாதம் என்றலையும் மற்ற கட்சிகளின் வரிசையிலல்லவா சேர்ந்து விட்டது த.மா.கா. இது தமிழ்நாட்டின் துரதிர்ஷ்டம்.
காரைக்குடி, பாலு.

✉ சிறையிலிருக்கும் கைதிகளை யோகா அடியோடு மாற்றிய அதிசயத்தைப் படித்ததும், வெளியிலிருக்கும் அரசியல்வாதிகளுக்கும், யோகா பயிற்சியைக் கட்டாயப் பாடமாக்கினால் என்ன? என்று தோன்றியது.
மதுரை, என். உஷாதேவி.

✉ கல்பனாத்ராய் இறந்து விட்டார் என்ற செய்தி இந்திரப்ரஸ்தனுக்குத் தெரியாதது ஏன்? (ராஜதர்பார்)
புதுதில்லி, பி. கிருஷ்ணமூர்த்தி.

✉ அழகுக் கலை நிபுணர் அருணா முகியின் சக்ஸஸ் ஸ்டோரியை விலாவாரியாக விவரித்து யுக்தா முகியின் மம்மிதான் அருணா முகி என்று சஸ்பென்ஸை கடைசியாக உடைக்கும் உமது ஸ்டைல் பிடிச்சிருக்குதுங்கோ!
புனே, ஜெ. ரஜினிராம்கி.

✉ பேராசிரியர் பெரியார்தாசன் "தத்துவமே லட்சியமாய்" என்ற தலைப்பில் 'சாருவாகம்' பற்றி எழுதியிருக்கிறாரே. ஒரே வார்த்தையில் சொல்லப் போனால் 'அற்புதம்'. தொடரட்டும் அவர் சீரிய பணி.
சென்னை – 78, எம்.எஸ். கோபு.

## வட்டமேஜை







# சிரிப்பாய் சிரிக்குது!

— கிச்சா

படங்கள் உதவி: மௌனம் ரவி


ரொம்ப ஆசையா
கட்டிப் புடிச்சுக்கறேன்னு
நினைக்காதீங்க... விட்டா
ஆர்.எஸ்.எஸ்ஸுக்கு
ஓடிப்போய்டுவாரு!


இவர் ஊழலை
ஒழிப்பேன்னு சபதம் பண்றாரு...
அதுக்கு அவர் மாலையும்
போடறாரு...
சிரிக்காம
என்ன செய்வாங்க!




பீஹார் கவர்னர் மாதிரி
நடுவிலே மாட்டிக்கிட்டு
முழிக்கறேன்!

# பேச்சு-தமிழ்; மூச்சு ஆர்.எஸ்.எஸ்!



ஆர்.எஸ்.எஸ்.ஸின் ஐந்தாவது தலைவர் குப்பஹள்ளி சீதா ராமய்யா சுதர்சன். வயது 68! இவரது மூதாதையர்களின் பூர்வீகம் நெல்லை மாவட்டம், செங்கோட்டை. குடும்பத்தினர் பிரிட்டிஷ் அரசு உத்தியோக நிமித்தமாக கர்நாடகாவுக்குக் குடிபெயர்ந்து, அடுத்து மத்தியப் பிரதேசம் போனபோது, ராய்ப்பூரில் பிறந்தவர் சுதர்சன். பிறந்து வளர்ந்தது எல்லாம் ம.பி. என்றாலும் கூட தமிழ் பேசுகிறார்!

பள்ளிக்கூட நாட்களிலேயே படு சுட்டியாக இருந்த சுதர்சனிடம், "புத்திசாலியாக இருக்கிறாயே! தினமும் ஆர்.எஸ்.எஸ். ஷாகாவுக்குப் போ" என்று சொன்னவர் அவரது வகுப்பு ஆசிரியர்.

பள்ளிக்கூட நாட்களிலேயே ஷாகாவுக்குப் போக ஆரம்பித்த சுதர்சனுக்கு, உடற்பயிற்சி மீது அபாரக் காதல். பிற்காலத்தில் ஆர்.எஸ்.எஸ். அமைப்பின் உடற்பயிற்சி சம்பந்தப்பட்ட விஷயங்களுக்குப் பொறுப்பாளராக இருந்தபோது, ஆர்.எஸ்.எஸ். தொண்டர்களுக்கு யோகாவும் கராத்தேவும் கற்றுக் கொடுக்க இவர் ஏற்பாடு செய்தார். ஆர்.எஸ்.எஸ்.ஸின் அறிவு ஜீவிகள் பிரிவிலும் முக்கிய பொறுப்பில் இருந்திருக்கிறார்.

"பள்ளிக் கூடத்தில் படிக்கிறபோது ஆர்.எஸ்.எஸ். ஷாகாவுக்கு நான் போகிற வழியில், ராஜ வம்சத்தைச் சேர்ந்த பாபா சாஹிப் புஸ்குடே

• படம் - நன்றி : அவுட்லுக்

தேசப்பற்று ஏற்படுத்துவது போன்றவற்றை இளம் வயதிலிருந்தே கடைப்பிடிக்கச் செய்தால், ஒவ்வொருவரையும் மிகச் சிறந்த குடிமகன்களாக்கி விடலாம்" என்பது இவர் வகுத்துக் கொடுத்தத் திட்டம்.

எண்பதுகளில் வடகிழக்கு மாநிலங்களுக்குப் பொறுப்பாளராகி, அங்கே சென்ற சுதர்சன், அப்பகுதி மலைவாழ் மக்களுடன் நெருங்கிப் பழகி, பாரதப் பண்பாட்டுக்கும் அவர்கள் பழக்க வழக்கங்களுக்கும் இடையில் உள்ள தொடர்புகளை அவர்களுக்கு எடுத்துச் சொல்லி, மதமாற்றத்தைத் தடுக்கவும், மக்களிடையே விழிப்புணர்ச்சியை ஏற்படுத்தவும் கடுமையாக உழைத்தார்.

பஞ்சாப் பிரச்னை தலையெடுத்தபின், பஞ்சாபுக்கு இடம்பெயர்ந்தார். இந்து மதத்தின் ஒரு அங்கம்தான் சீக்கிய மதம் என்று சீக்கியர்களிடையே பிரசாரம் செய்தது மட்டுமின்றி, பஞ்சாப் பிரச்னை பற்றி தெள்ளத் தெளிவாக இரண்டு புத்தகங்களும் எழுதியிருக்கிறார்.

இந்திய வான்பகுதியில், இரு வளைகுடா விமானங்கள் நேருக்கு நேர் மோதிய கோர விபத்து நடந்தபோது, அதில் மரணமடைந்த முஸ்லிம்களை, அவர்கள் மத மரபுப்படி இறுதிச் சடங்குகளுடன் அடக்கம் செய்ய முக்கிய காரணமாக இருந்தவர் சுதர்சன்தான் என்பது குறிப்பிடத்தக்கது.

நிறைய படிப்பது, படித்த விஷயங்களை நண்பர்களுடன் பேசும்போதும், சொற்பொழிவுகளிலும் மேற்கோள் காட்டுவது இரண்டும் சுதர்சனுக்கு மிகவும் பிடித்த விஷயங்கள்.

• சுதர்சன்

ராஜா என்கிற பந்தாவே இல்லாமல், சைக்கிளில் வருவார். மிக எளிமையாக அனைவரிடமும் பழகுவார். இளம் வயதில் என் மனத்தில் ஆர்.எஸ்.எஸ். பற்றி மிக உயர்வான எண்ணம் பதிய இதுவும் ஒரு காரணம்" என்று அடிக்கடி சுதர்சன் குறிப்பிடுவது உண்டு. நீதிப் பாடல்கள், நீதிக் கதைகள் சொல்லித் தருவது, அற்புதமான சொற்பொழிவுகளைக் கேட்கச் செய்வது, உன்னத மனிதர்களுடன் கலந்துரையாடல், நல்ல புத்தகங்களைப் படிப்பது,

சுதேசி சிந்தனைகளில் ஊறிப் போனவர் சுதர்சன். அதனால்தான், இவர் ஆர்.எஸ்.எஸ். தலைமைப் பொறுப்பேற்றவுடன், 'தாராளமயமாக்குதலைத் தொடர்ந்து கொண்டிருக்கும் வாஜ்பாய் அரசுக்கு, சுதர்சன் ஒரு பிரச்னையாக இருப்பார்; புதிய பொருளாதாரக் கொள்கையின்படி இந்தியாவில் பன்னாட்டு நிறுவனங்கள் நுழைவதற்கு முட்டுக்கட்டையாக இருப்பார்' என்று பரவலான விமர்சனம் எழுந்துள்ளது.

ஆனால், வாஜ்பாயின் நெடுநாளைய நண்பரான சுதர்சன், பா.ஜ.க. அரசு மறுபடியும் கவிழ ஒரு போதும் காரணமாக இருக்க மாட்டார் என்று ஆர்.எஸ்.எஸ். தரப்பில் சொல்கிறார்கள்!

— எஸ். சந்திரமௌலி



# SILENCE PLEASE!

Cover story

- A new series for parents too!

WHAT ARE RAINDROPS?

PERFECT YOUR ENGLISH - the easy way!

APRIL 2000
Rs. 6/-

# GOKULAM

The monthly magazine for children

47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097

பேராசிரியர் பெரியார்தாசன்

# புரட்டிப் போட்ட புத்தகம்!

பத்தாண்டுக் காலம் ஒரு கூட்டுப் புழுவைப் போல படித்துக் கொண்டேயிருந்தேன் என்று ஏற்கெனவே சொல்லியிருக்கிறேன். அப்போது எந்த மாதிரியான புத்தகங்களைப் படித்தேன்?

முதலில், நாம் வாழுகிற சமுதாயச் சூழலைத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நினைத்தேன். அதற்குப் பத்திரிகைகளைப் படிப்பது உதவும் என்றாலும் அது வெறும் மேலோட்டமான விஷயம்தான் என்பதால், ஆழமாகத் தெரிந்து கொள்ள வேண்டும் என்று நினைத்தேன்.

இந்தச் சமுதாயத்தின் யதார்த்த நிலை என்ன? நேர்மையைப் பற்றிப் பெரிதும் பேசுகிறோம். ஆனால் ஒரு நேர்மையாளனுக்கு என்ன மரியாதை கிடைக்கிறது? தில்லுமுல்லுகள் செய்து பணம் சம்பாதித்த ஒரு பணக்காரனுக்குக் கிடைக்கிற மரியாதை ஒரு நேர்மையாளனுக்குக் கிடைப்பதில்லை. மேல் ஜாதி என்கிற ஒரே காரணத்துக்காக ஒரு மோசமானவனுக்குக் கிடைக்கிற மரியாதை, கீழ் ஜாதி என்கிற ஒரே காரணத்துக்காக ஒரு நேர்மையாளனுக்குக் கிடைப்பதில்லை. அது ஏன்?

சமயச் சொற்பொழிவுகளுக்குச் சென்றால், ஒவ்வொரு சமயத்தவரும் தங்களது சமயம்தான் உயர்ந்ததென்று சொல்வதோடு, பிற சமயங்களைக் கேலி செய்வதையும்தான் பார்த்தேன். இவையெல்லாம் ஏன்?

இதுமாதிரியான கேள்விகளோடு, நான் வள்ளலாரைப் படித்தபோது, 'சாதியிலே, மதங்களிலே, சாத்திரச் சந்தடிகளிலே, கோத்திரச் சண்டையிலே, ஆதியிலே அபிமானித்து, அலைகின்ற உலகீர்! அலைந்து அலைந்து வீணே நீர் அழிதல் அழகல்லவே!' என்று அவர் மனம் வருந்தியிருந்ததை அறிந்தேன். பிறகு அவரே, 'சாதி சமயச் சழக்கை விட்டேன், அருட்ஜோதியைக் கண்டேனடி' என்று ஒரு தீர்வு கண்டிருந்ததையும் உணர்ந்தேன்.

சரி, சாதி சமயச் சழக்கை ஒழிப்பது எப்படி? இதற்கு விடை காணும்விதமாகத்தான் மானுடவியலையும் சமூகவியலையும் படித்தேன். இது தொடர்பாகப் பல புத்தகங்களைப் படித்துக் கொண்டே, பெரி

நான் நாத்திகனில்லை – 11




யாரின் கூட்டங்களுக்குச் சென்றேன். பெரியார் மட்டுமல்ல; திருவாரூர் தங்கராசு, கி. வீரமணி ஆகியோரின் கூட்டங்களுக்கும் சென்றேன். மறுபுறம் கண்ணன் அடிகளார், வாரியார் போன்றோரின் சமயச் சொற்பொழிவுகளுக்கும் சென்றேன்.

இந்தச் சமயத்தில்தான் டாக்டர் அம்பேத்கரின் நூல் ஒன்று கிடைத்தது. 'Genesis Mechanism and Development of Caste System in India' என்கிற நூல் அது. வெறும் *32* பக்கங்களைக் கொண்ட அந்நூல், *1916*-ஆம் ஆண்டில் கொலம்பியா பல்கலைக் கழகத்தில் டாக்டர் அம்பேத்கரால் சமர்ப்பிக்கப் பட்ட ஒரு கட்டுரைதான்.

அதுவொரு சிறு நூல்தான் என்றாலும், இதுவரை நான் சமூகவியல், மானுடவியல் துறைகளில் படித்திருந்த புத்தகங் களிலிருந்தெல்லாம் மேற்கோள்களை எடுத்துக்காட்டி, அவற்றி லிருந்தெல்லாம் தாம் எப்படி மாறுபடுகிறார், முரண்படுகிறார் என்பதை அம்பேத்கர் விரிவாக விளக்கியிருந்தார். அது எனக்குப் புதிய பார்வையைத் தந்தது. அந்த நூலில் அவர் அப்படி என்னதான் சொல்லியிருந்தார்?

**எ**ந்தவொரு விஷயத்துக்கும் மூன்று நிலைகள் உண்டு. தோற்றம், இயக்கம், வளர்ச்சி என்பவைதான் அவை. ஜாதிகள் எப்படித் தோன்றின?

ஆதியில், உலகம் முழுவதிலுமிருந்த மனிதன் இரண்டு தொழில்களைத்தான் செய்து வந்தான். ஒன்று வேட்டை. மற்றொன்று ஆடு, மாடு மேய்த்தல். அதாவது மனிதன் தான் எந்த மிருகங்களைக் கண்டு பயந்தானோ அவற்றைத் தன்னி லிருந்து வேட்டையாடினான். தன்னைக் கண்டு எந்த மிருகங் கள் பயந்தனவோ, அவற்றைப் பிடித்து வந்து வளர்க்க ஆரம் பித்தான்.

ஒரு காலகட்டத்தில் வேட்டையாடிச் சாப்பிடுவதை விட, ஆடு, மாடுகளை வளர்த்து அதன் பால் மற்றும் பால் பொருள் களைச் சாப்பிடுவதும் தேவையானால் அவற்றையே அடித் துச் சாப்பிடுவதும் அவனுக்குச் சுலபமாகவும் வசதியாகவும் இருந்தன. அதனால் ஆடு மாடுகளை அதிகம் வளர்க்க ஆரம் பித்தான். அதிகம் வளர்த்ததால், அவற்றுக்கான தீவனத் துக்காகப் புல்வெளிகளைத் தேடி இடம் விட்டு இடம் செல்ல வேண்டிய அவசி யம் ஏற்பட்டது.

இப்படி இடம் விட்டு இடம் சென்று, வளமான ஓரிடத்தில் சென்று தங்கியிருந்து, கூடவே பயிர்த் தொழி லையும் செய்து, வசதியாக வாழ்ந்து கொண்டிருந்த குழுவினருக்கும் வேட் டையில் தோல்வி கண்ட பிற குழுவினருக்கும் சண்டை ஏற்பட்டது. அதா வது இருக்கிற குழுவின ருக்கும் இல்லாத குழுவின ருக்கும் சண்டை ஏற்பட் டது. ('வரலாறு என்பது வர்க்கத்தின் போராட்டம்' என்று மார்க்ஸ் சொன்னது இங்கே பொருந்துகிறது.)

இப்படிச் சண்டை போட்டுக் கொண்டதால், ஆண்கள் இறக்க நேர்ந்தது. அதிக ஆண்களை இழந்து விட்ட குழுக்களிலிருந்த பெண்கள், தங்கள் குழுக் களில் ஆண்கள் கிடைக் காததால் பிற குழுக்களி லிருந்த ஆண்களின் துணையை நாட நேர்ந்தது. எதிரிக் குழுக்களிலிருந்து தங்களின் குழுப் பெண்கள் ஆண் துணையை நாடு வதை எப்படி ஆண்கள் விரும்புவார்கள் அல்லது சம்மதிப்பார்கள்?

இதைத் தடுப்பதற் காகத்தான் தங்கள் குழுவி லுள்ள ஆண்களிலிருந்து மட்டும்தான் பெண்கள் தங்கள் துணையைத் தேடிக்கொள்ள வேண்டும் என்கிற அகமண முறை கொண்டு வரப்பட்டது. இந்த அகமண முறையைச் சில பெண்கள் மீறும் போதுதான், போரில் துணையை இழந்த பெண் ணைக் கைம்பெண்

ணாக்குவது அல்லது உடன்கட்டை ஏறச் செய்வது என்கிற முறைகளும் கொண்டு வரப்பட்டன. ஆக, இந்தக் குழு மனப்பான்மைதான் ஜாதிகளின் தோற்றுவாய் என்று அந்த நூலில் மிக அழகாகவும் ஆணித்தரமாகவும் எடுத்துக்காட்டுகளோடும் விளக்கியிருந்தார் பாபாசாகேப் அம்பேத்கர்.

சரி, உலகின் பிற பாகங்களிலும் இப்படிப்பட்ட நிலைதானே இருந்திருக்க வேண்டும். அங்கு ஏன் ஜாதி வேரூன்றி வளரவில்லை? என்கிற கேள்வி என்னுள் எழுந்தது. அதற்கும் அந்த நூலில் விடை சொல்லியிருந்தார் அம்பேத்கர்.

பிற நாடுகளிலெல்லாம் காலப்போக்கில் – நாகரிக வளர்ச்சியில் குழு மனப்பான்மையால் ஏற்பட்ட ஜாதிகளின் தோற்றம் இயங்கி வளர முடியாமல் போய் விட்டது. ஆனால், நமது நாட்டில் மனு போன்றவர்களால் இந்தக் குழு மனப்பான்மைக்கு – ஜாதிய மனப்பான்மைக்கு மதம் என்கிற சாயம் பூசப்பட்டு நியாயப்படுத்தப்பட்டது. கடவுளே இந்த ஜாதிகளை – வர்ணங்களை ஏற்படுத்தினார் என்கிற பலமானதொரு ஆன்மிக அடித்தளம் போடப்பட்டது. பிறகு ஏற்பட்ட ஆட்சி முறைகளிலும் இது அமல்படுத்தப்பட்டது. இது லாபகரமானதாகக் கருதப்பட்டதால் ஆட்சியாளர்களும் இதை மகிழ்ச்சியோடு ஏற்றுக் கொண்டு விட்டார்கள் என்று விளக்கியிருந்தார் அம்பேத்கர்.

இந்தச் சமயத்தில் நான் அம்பேத்கரைப் பற்றி புதிதாக ஒரு செய்தியையும் தெரிந்து கொண்டேன். அம்பேத்கரைக் குறிப்பிடுகிற போதெல்லாம் அவரது மூன்று வார்த்தைகளைத் தவறாமல் மேற்கோள் காட்டுவார்கள். 'கற்பி, புரட்சி செய், ஒன்று சேர்!' என்கிற வார்த்தைகள்தான் அவை. Educate, Agitate, Organise என்று அவர் ஆங்கிலத்தில் சொன்னதைத்தான் இப்படி மொழிபெயர்த்துச் சொல்லுவார்கள்.

'கற்பி' என்று அம்பேத்கர் சொன்னதற்கு, இந்தியாவிலுள்ள தாழ்த்தப்பட்ட அனைவருக்கும் கல்வி கற்பிப்பது என்றுதான் அனைவரும் புரிந்து கொண்டிருக்கிறார்கள். ஆனால் நான் அப்படிப் புரிந்து கொள்ளவில்லை. மொத்த இந்தியர்களுக்கும் கல்வி கற்பிக்கப்பட வேண்டும் என்கிற அர்த்தத்தில்தான் அவர் Educate என்கிற வார்த்தையை உபயோகப்படுத்தியிருக்கிறார் என்றுதான் நான் புரிந்து கொண்டேன். ஏன் அப்படிப் புரிந்து கொண்டேன்?

(தொடரும்)

## காசு லேது!

ஐந்து மாதத்திற்கு முன்புவரை 'ஓஹோ' வென்று இருந்த கர்நாடக ஐக்கிய ஜனதா தளம் இப்போது கடும் நிதி நெருக்கடியில் தத்தளித்துக் கொண்டிருக்கிறது!

இக்கட்சியின் சார்பில் வங்கியில் தற்போது இருக்கும் பணம் முப்பதாயிரம்! ஃபோன் பில் கட்டாமல் இழுத்தடிக்க, சரி அதையாவது கட்டலாம் என்றால் அறுபதாயிரம் ரூபாயாம் ஃபோன் பில்! இப்போது ஃபோனும் கட்!

ஃபோன் இல்லாமல் இருக்கும் கட்சியில் திடீரென்று கூட்டம் நடந்தால் ''சரி ஆளுக்கு பத்து ரூபாய் கொடுங்க, டீ வாங்கணும்' என்பது மாதிரி வசூல் பண்ண வேண்டியிருக்கிறதாம்!

லோக்சக்தி, சமதா, ஐ.ஜ.த. இணைப்பு நடவடிக்கைக்குப் பிறகு குமார க்ருபாவில் இருந்த ஹெக்டேவின் லோக்சக்தி அலுவலகத்தில் ஐக்கிய ஜனதா தளம் அலுவலகமும் தற்போது இயங்கி வருகிறது!

இங்கும் நிதி நிலைமை சொல்லிக் கொள்ளும்படி இல்லை. ஏற்கெனவே இங்கிருந்த ஃபோன்



• ஜே. எச். பாட்டீல்

களும் பில் கட்டாமல் 'கட்'டாகி விட, முழித்துக் கொண்டிருக்கிறது கட்சி!

''இணைப்பு விவகாரம் தொடர்பாக கட்சி அலுவலகத்தை ஏற்கெனவே ஐக்கிய ஜனதா தளத்திடம் விட்டுவிட்டோம். என்னென்ன தேவையோ அதை அந்தக் கட்சிதான் இனி செய்ய வேண்டும். எங்களுக்கும் அலுவலகத்துக்கும் சம்பந்தமில்லை'' என்கிறது லோக் சக்தி!

''எங்க கட்சியில் நிறைய பணக்காரங்க இருக்காங்க; ஆனா கட்சிதான் ஏழையா இருக்கு'' என்று கிண்டலடிக்கும் ஐக்கிய ஜனதா தளப் பிரமுகர் ஒருவர், ''இனிமே அவங்ககிட்ட போய் வசூல் பண்ண வேண்டியதுதான்'' என்கிறார்!

– மகேந்திரன்




“சதானந்தம், அஞ்சு பொண்ணு பெத்தா அரசனும் ஆண்டியாவான்கறத பொய்யாக்கிட்டடா. எட்டு பொண்ணுங்களைப் பெத்துட்டு இன்னிக்கு சக்கரவர்த்தியா நிக்கறடா. எல்லாப் பொண்ணுங்களையும் டாக்டர், இன்ஜினீயர், சி.ஏ., எம்.பி.ஏ., கம்ப்யூட்டர்னு படிக்க வச்சி, அதே அளவு படிச்ச மாப்பிள்ளைங்களப் பார்த்து கல்யாணம் பண்ணி வச்சி, சும்மா சொல்லக் கூடாது. நீ உண்மையிலேயே கிரேட்.”

தமது ஆத்ம நண்பர் ராமமூர்த்தியின் மனம் திறந்த பாராட்டு வார்த்தைகளில் உச்சிகுளிர்ந்து போனார் சதானந்தம். தமது அறுபதாம் கல்யாண மேடையில் இருந்த சதா, பக்கத்தில் மணக்கோலத்தில் இருந்த தன் மனைவி ராஜத்தைக் கம்பீரமாகப் பார்த்த போது, அவள் புதுப் பெண் போல் தலைகுனிந்தாள். ஒரு பெரிய பட்டாளமாக நின்று கொண்டிருந்த தன் பெண்கள், மாப்பிள்ளைகள், பேரன் பேத்திகளைக் கர்வத்தோடு பார்த்தார் சதா. ‘உண்மையிலேயே சாதித்து விட்டோம்’ என்ற நிறைவு ஏற்பட்டது. இரண்டு மூன்று பெண்கள் பெற்றவர்களே விழிகள் பிதுங்கிக் கொண்டிருக்கும் இந்தக் காலத்தில், அதிகம் பணக்காரராக இல்லாத, பூர்வீகச் சொத்து என்று எதுவும் இல்லாத இவர் செய்து முடித்தது பெரிய சாதனை என்று அவரைப் பாராட்டாதவர்களே இல்லை.

தமக்குத் திருமணமான புதிதில் மூன்று, நான்கு குழந்தைகளுக்கு மேல் வேண்டாம்



என்றுதான் நினைத்தார் சதா. ஆனால் ஆண் வாரிசு வேண்டும் என்ற ஆதங்கத்தில் அடுத்தடுத்து என்று முயற்சி பண்ணிப் பார்த்ததில் மொத்தக் கணக்கு எட்டுப் பெண்கள் என்று முடிந்தது. ஆனால் கூட அசரவில்லை சதா. அவர் பார்த்துக் கொண்டிருந்த வக்கீல் தொழிலில் இந்தப் பெரிய குடும்பம் இரண்டு வேளை சாப்பிடப் போதுமான வருமானம் வந்தது. ஆனால் மற்றச் செலவுகளுக்கு? முக்கியமாக படிப்புச் செலவுக்கு?

சம்பாத்தியத்துக்குப் பல வழிகளை அமைத்துக் கொண்டார் சதானந்தம். அதற்கு அவரது மனைவியும் பெண்களும் ஒத்துழைத்தார்கள். இரண்டு மாடுகளை வாங்கி, தெருவில் பால் வியாபாரம் ஆரம்பித்தார். தெரிந்த ஜவுளிக் கடைகளில் கடனுக்குப் புடைவை, சூடிதார் வாங்கி வந்து வீட்டிலேயே வியாபாரம் செய்தார். அவருடைய மூத்த பெண் ஒரு பழைய தையல் மெஷினை வாங்கிப் போட்டு தைத்துக் கொடுத்தாள். அடுத்தவள் முறுக்கு, தட்டை, சீடை என்று எண்ணித் தர, அதை ஒரு ஆள் போட்டு விற்க ஆரம்பித்தார். ஒருத்தி வீட்டிலேயே புக் பைண்டிங் செய்து கொடுத்து சம்பாதிக்க ஆரம்பித்தாள்.

அவருடைய பெண்கள் படித்தது முக்கால்வாசி ஸ்காலர்ஷிப் பணத்தில்தான். ஒவ்வொரு பெண்ணும் படிப்பில் படு சுட்டி. ஒவ்வொன்றும் இன்ஜினீயர், டாக்டர், கம்ப்யூட்டர் சயின்ஸ் என்று போட்டி போட்டுக் கொண்டு படித்தனர். படிப்பு முடிந்து நல்ல சம்பளம் உள்ள வேலையில் மூன்று நான்கு வருடங்கள் இருந்ததும் அந்தப் படிப்புக்கு சமமான படிப்புள்ள மாப்பிள்ளையைப் பார்த்துக் கல்யாணத்தை முடித்து விடுவார் சதா.

அறுபது வயதை இன்று எட்டிப் பிடித்து விட்ட சதானந்தம் ஏழு பேருக்குக் கல்யாணம் பண்ணிப் பார்த்து விட்டார். கடைக்குட்டி எம்.பி.பி.எஸ். மூன்றாவது வருடம் படித்துக் கொண்டிருந்தாள். கம்ப்யூட்டர் சயின்ஸ் படித்த மூத்தவள் அதே துறையில் உள்ள தன் கணவனுடன் கலிபோர்னியா போய் வருஷம் ஆறாகி விட்டது. அடுத்தவள் சி.ஏ. அவள் கணவனும் சி.ஏ. இருவரும் துபாயில் கொழித்துக் கொண்டிருக்கிறார்கள். அடுத்தவள் ஹார்ட் ஸ்பெஷலிஸ்ட். தன் கணவனான நியூரோ சர்ஜனுடன் மும்பையில் ஒரு நர்சிங்ஹோம் நடத்திக் கொண்டிருக்கிறாள். இப்படித்தான் பட்டியல் நீண்டு கொண்டே போகும்.

**ச**தானந்தத்தின் சஷ்டியப்த பூர்த்திக்குப் பெண்கள், மாப்பிள்ளைகள், பேரன்

**வரலொட்டி ரெங்கசாமி**

பேத்திகள் என்று ஏகக் கூட்டம் கூடிவிட, சதானந்தத்தைச் சுற்றிலும் சந்தோஷம் சூழ்ந்துகொண்டது.

அந்த சந்தோஷத்தில் அன்று இரவு சதானந்தத்துக்குத் தூக்கம் பிடிக்கவில்லை. சத்தம் போடாமல் எழுந்து ஹாலுக்குப் போய் மணியைப் பார்த்தார். பத்தரை கூட ஆகியிருக்கவில்லை. அவருடைய பெண்கள் இருந்த அறையில் பேச்சுக்குரல் கேட்டது. சரி, தூக்கம் வரும் வரை பெண்களுடன் அரட்டை அடித்து விட்டுப் போகலாமே என்ற எண்ணத்தில் மெதுவாக அந்த அறையை நோக்கி நடந்தார் சதா.

காலையில் விருந்து முடிந்ததும் மாப்பிள்ளைகள் எல்லோரும் ஆளுக்கொரு பக்கமாகக் கழண்டுகொண்டார்கள். பேரன் பேத்திகளும் தூங்கிவிட்டார்கள். இந்தச் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு அவருடைய எட்டுப் பெண்களும் விச்ராந்தியாக அரட்டை அடித்துக் கொண்டிருந்தார்கள்.

சாத்தியிருந்த அந்த அறையின் கதவைத் தட்டப் போனவர் பெண்களின் பேச்சு தன்னைப் பற்றி இருந்ததால் 'சட்'டென்று கையைப் பின்னுக்கு இழுத்துக் கொண்டார்.

எம்.பி.பி.எஸ். படித்துக் கொண்டிருந்த அவரது கடைக்குட்டிதான் அந்த டாபிக்கை ஆரம்பித்தாள்.

"அப்பா - அம்மா ரியலி கிரேட் இல்ல? இப்படி எட்டுப் பெண்களைப் பெத்து எல்லாரையும் நல்லபடியா படிக்க வச்சி, கல்யாணம் பண்ணி கரையேத்தி... அப்பா! உண்மையிலேயே பெரிய சாதனைதான்."

சதானந்தத்தின் நெஞ்சம் பெருமிதத்தில் விம்மியது. அடுத்து சந்திக்கப் போகும் அதிர்ச்சியைப் பற்றி அறியாததால்.

மூத்தவள் கடைக்குட்டியை இடைமறித்தாள்.

"என்னடி சொன்னே? அப்பா அம்மா கிரேட்டா? வெளிய இருந்து பார்க்கும் போது, அப்பா - அம்மா ஏதோ பெரிசா சாதிச்ச மாதிரிதான் தெரியும். ஆனா அவங்க அந்த சாதனையைப் பண்றதுக்கு நாங்க பட்ட கஷ்டம், அனுபவிச்ச வேதனை அதெல்லாம் யாருக்கும் தெரியாது. சொன்னாலும் புரியாதுடி. நீ எல்லா வசதியும் வந்தப்புறம் கடைசியாப் பிறந்ததால உனக்கு நாங்க பட்ட கஷ்டம் எதுவும் தெரியாதுடி. அம்மாவுக்கு வருஷத்துக்கு ஒண்ணா குழந்தை பிறந்ததால எங்களுக்கெல்லாம் குழந்தைப் பருவம்கறதே இல்லாமப் போச்சு. என்னிக்காவது ஒருநாள் ஸ்கூல் விட்டு வந்தவுடனே ஹாய்யா விளையாடியிருப்போமா? வரும்போதே ஸ்கூலு வேலை காத்துக்கிட்டு இருக்கும். மாட்டைப் பாத்துக்கணும், பால் காசை வசூல் பண்ணிக்கிட்டு வரணும், மிச்சமிருக்கற தையல் வேலைய முடிக்கணும். இது போக வழக்கமான சமையல், வீட்டு வேலை. நான் கல்யாணம் ஆகி ஹனிமூன் போற வரைக்கும் ஐஸ்க்ரீம் டேஸ்ட் எப்படி இருக்கும்னே எனக்குத் தெரியாது. இந்த வீட்டுல மகளாப் பிறந்துட்டா அஞ்சு வயசுலேயே பொறுப்பு வந்து பெரியவங்க மாதிரி நடந்துக்கணும். குழந்தைப் பருவத்துக்குரிய ஆட்டம், பாட்டு, விளையாட்டு, கனவுகள், ஆசைகளுக்கு இங்கே நேரமும் இல்ல, இடமும் இல்ல. வீட்ல எப்பவும் தொட்டுக்கோ, துடச்சிக்கோன்னு இருந்ததால எந்த சாமானையும் தாராளமா யூஸ் பண்ண முடியாது. இப்படி கஷ்டப்பட்டிருக்கோம். இவ என்னடான்னா பெரிசா அப்பாக்கு வக்காலத்து வாங்க வந்துட்டா பாரேன்!"

சதானந்தம் கீழே விழுந்து விடாமல் இருக்க பக்கத்தில் இருந்த சுவரில் சாய்ந்து அப்படியே தரையில் உட்கார்ந்து விட்டார்.

மூத்தவள் விட்ட இடத்திலிருந்து அடுத்தவள் தொடர்ந்தாள்.

"நாங்க இருக்கறதை வச்சி அட்ஜஸ்ட் பண்ணி வெளியுலகத்துக்கு வெற்றிகரமா வாழ்ந்து காமிச்சிட்டோங்கறது உண்மைதான். ஆனா அதுக்கு எவ்வளவு கஷ்டப்பட வேண்டியிருந்தது தெரியுமா? வெக்கத்தை விட்டு சொல்றேன் - கார்ஃப்ரீ வாங்கக் கூட காசு கிடையாது. அதனால அந்த மூணு, நாலும் வெளில போகாம ஸ்கூலுக்கும் மட்டம் போட்டுட்டு வீட்லயே கிடப்போம்."

"அக்கா நீ வறுமைல கஷ்டப்பட்டது

அறிஞர்கள் அறிவைத் தேடுகிறார்கள்;
முட்டாள்கள் அதைப் பெற்று விட்டதாக நினைக்கிறார்கள்.

– ஜெர்மன் பழமொழி
— கே. ராஜேந்திரன்



நிஜம்தான். அதுக்காக நீங்க சொல்றதைப் பாத்தா அப்பாக்கு நம்ப மேல ஆசையே இல்லைங்கற மாதிரின்னா இருக்கு."

கடைக்குட்டி சொன்னதைக் கேட்ட இன்னொருத்தி வார்த்தைகளாக வெடித்தாள்.

"போடி போ. நீ என்ன பெண் குழந்தைங்க மேல உள்ள ஆசைலதான் எட்டுப் பெண்களை வரிசையா அப்பா பெத்துக்கிட்டாருன்னு சொல்றியா? அடுத்து ஆண் குழந்தைதான் பிறக்கப் போகுதுங்கற நம்பிக்கைலதான் அடுத்தடுத்து பெண்ணாப் பெத்துக்கிட்டாரு. அதுவும் அஞ்சாவது, ஆறாவதுன்னு குழந்தை பிறக்கும் போது ஆஸ்பத்திரிலேர்ந்து ராத்திரி பக்கத்து வீட்டுக்கு போன் வரும்; நான் பாத்திருக்கேன். பெண் குழந்தை பிறந்திருக்குங்கறத கேட்டவுடனே அப்பா, 'போ, இதுவும் பொட்டைக் கழுதை தானா?'னு அலுத்துப்பாரு. அம்மாவையும் குழந்தையையும் போய்ப் பாக்காம போர்வைய இழுத்துப் போத்திக்கிட்டு தூங்கிருவாரு. கடைசியா எட்டாவதா நீயும் பொண்ணாப் பிறந்தவுடனே அப்பா கோபத்துல மூணு மாசம் உன்னைப் பாக்கல. அம்மாகிட்ட முகம் கொடுத்தே பேசல. இது தெரியுமா உனக்கு?"

கடைக்குட்டி சன்னமாக அதிர்ந்தாள். சதானந்தம் தன் நெஞ்சைப் பிடித்துக் கொண்டார். தாக்குதல்கள் இன்னும் நின்றபாடில்லை.

"தீபாவளி வந்தா குழந்தைங்க எல்லாம் என்ன புதுத் துணி வாங்கறது, எப்படி பட்டாசு வெடிக்கறதுன்னு கனவு காணுவாங்க. ஆனா நாங்க அப்படி ஒரு வருஷமாவது இருக்க முடிஞ்சுதா? மத்த குழந்தைங்க அப்பா அம்மா கையப் பிடிச்சிக்கிட்டு துணிக்கடைக்குப் போகும் போது நாங்க உக்காந்து மாங்கு மாங்குன்னு ஊர்ல உள்ளவங்க துணியத் தச்சிக்கிட்டு இருப்போம்."

இப்போது கடைக்குட்டி கடைசியாக ஒருமுறை அப்பாவுக்காக வக்காலத்து வாங்கினாள்.

"அக்கா, அப்பா எவ்வளவு கஷ்டப்பட்டாலும் உங்கள நல்ல இடத்துல கல்யாணம் பண்ணிக் கொடுத்தாரு இல்லையா? அத நினைச்சிப் பாக்க மாட்டேங்கறீங்களே."

"போடி போ அதை நீதான் மெச்சிக்கணும். எங்களுக்கு எப்படித் துணி எடுத்துக் கொடுத்தாரோ அப்படித்தான் மாப்பிள்ளை பாத்தாரு அப்பா. மாப்பிள்ளையை எங்க மனசுக்குப் பிடிச்சிருக்காங்கற பேச்சே



''உனக்குத் தாழ்வு மனப்பான்மை அதிகமா இருக்கா... எப்படி?''

''மத்தவங்க மனக்கோட்டை கட்டுனா என்னால மனக்குடிசைதான் கட்ட முடியுது... டாக்டர்!''

— தஞ்சை தாமு

இல்லை. அப்பா போடற வரதட்சணை, சீர் வரிசை பட்ஜெட்ல எங்க அளவுக்குப் படிச்ச மாப்பிள்ளை யாரு கிடைச்சாலும் சரி, நாங்க கழுத்த நீட்ட வேண்டியதுதான். நாங்களும் இதைத் தவற விட்டா அப்புறம் நிலைமை இதைவிட மோசமாயிருமோன்னு பல்லைக் கடிச்சிட்டு கழுத்த நீட்டிட்டோம். எங்க கல்யாணம் எல்லாம் கவர்மெண்ட் டெண்டர் மாதிரி. எங்க அளவு படிப்பு தகுதி உள்ளவங்கள்ல யாரு ரொம்ப குறைச்சலா சீர் செனத்தி கேட்கறாங்களோ அவருக்குத்தான் டெண்டர் - சாரி பொண்ணு!"

கடைக்குட்டி கடைசியாக ஈனஸ்வரத்தில் கேட்டாள்.

"அப்பாவுக்கு தன் பொண்ணுங்க மேல அன்பே இல்லைங்கறியா?"

"இல்லதான். இருந்திருந்தா இவ்வளவு பொண்ணுங்களப் பெத்துக்காம ரெண்டோடு நிறுத்தியிருப்பாரு. அந்த ரெண்டு பேருக்கு இயல்பான, ஆரோக்கியமான, வறுமையில்லாத குழந்தைப் பருவம் கிடைச்சிருக்கும்.

"ஊர்ல இருக்கறவங்களுக்கு அப்பா பண்ணினது பெரிய சாதனைதான். ஆனா எங்களோட சின்ன வயசு சந்தோஷங்களை, எங்களுடைய குழந்தைப் பருவ ஆசைகளைக் குழிதோண்டி புதைச்சி அது மேலதான் அப்பா தன்னுடைய சாதனை மேடையைக் கட்டினாரு. சரி, நாங்க பட்ட வேதனை யாருக்கும் தெரிய வேணா. யாரும் படவும் வேணா. பேசினது போதும். எல்லோரும் தூங்கலாம்."

நின்ற இடத்தில் சிலையாகிப் போன சதானந்தத்துக்கு இனிமேலும் தூக்கம் வரும் என்று தோன்றவில்லை. ●

# பொன்னியின் செல்வன்

முப்பத்து இரண்டாம் அத்தியாயம்

## "ஏன் என்னை வதைக்கிறாய்?"

சுந்தர சோழர் மிக்க வியப்பு அடைந்தார். மேன் மாடத்திலிருந்து அவ்வாறு தூண்களின் விளிம்பின் வழியாக யார் இறங்கி வருகிறது? எதற்காக வர வேண்டும்? இத்தனை நேரம் கண்ட குழப்பமான கனவுகள் நினைவு வந்தன. இதுவும் கனவிலே காணும் தோற்றமா? இன்னும் தாம் தூக்கத்திலிருந்து நன்றாக விழித்துக் கொள்ளவில்லையா? - இந்தச் சந்தேகத்தைத் தீர்த்துக் கொள்வதற்காகச் சுந்தர சோழர் மறுபடியும் கண்களை மூடிக்கொண்டார். ஒரு நிமிஷ நேரம் அவ்வாறு இருந்து விட்டுக் கண்களை நன்றாகத் திறந்து அந்த உருவம் இறங்கிய திக்கைப் பார்த்தார். அங்கே இப்போது ஒன்றும் இல்லை. ஆகா! அந்தத் தோற்றம் வெறும் பிரமையாகத்தான் இருக்க வேண்டும்.

அவர் உறங்குவதற்கு முன்னால் நிகழ்ந்தவற்றை ஞாபகப்படுத்திக் கொண்டார். முதன் மந்திரியும் அவருடைய சீடனும் இனிய குரலில் பாடிய தியாகவிடங்கரின் மகளும் தாம் தூங்கிய பிறகு போய் விட்டார்கள்

அமரர் கல்கி

போலும். மலையமான் மகளும் தாதிமார்களும் வழக்கம் போல் அடுத்த அறையிலே காத்திருக்கிறார்கள் போலும். தமது செல்வத் திருமகளும் அவர்களுடனே இருக்கிறாள் போலும். குந்தவையைக் குறித்துத் தாம் முதன் மந்திரியிடம் குறை கூறியதைச் சக்கரவர்த்தி நினைத்துக்கொண்டு சிறிது வருத்தப்பட்டார். குந்தவை இணையற்ற அறிவும் முன் யோசனையும் படைத்தவள். இராஜ்யத்திலே குழப்பம் ஏற்படாமலிருக்கும் பொருட்டு இளவரசனை நாகைப்பட்டினத்தில் இருக்கச் செய்திருக்கிறாள். அதைப் பற்றித் தவறாக எண்ணிக்கொண்டது தம்முடைய தவறு. தமது அறிவு சரியான நிலைமையில் இல்லை என்பது சில காலமாகச் சுந்தர சோழருக்கே தெரிந்திருந்தது. பின்னே, இளையபிராட்டியின் பேரில் கோபித்துக் கொள்வதில் என்ன பயன்? எதையும் அவளுடைய யோசனைப்படி செய்வதே நல்லது. இப்போது முக்கியமாகச் செய்ய வேண்டியது நாகைப்பட்டினத்திலிருந்து இளவரசனை அழைத்து வர வேண்டியது. கடவுளே! புயலினால் அவனுக்கு யாதொரு ஆபத்தும் நேரிடாமல் இருக்க வேண்டுமே! உடனே குந்தவையிடம் அதைப் பற்றிக் கேட்க வேண்டும்... பக்கத்து அறையில் இருப்பவர்களை அழைப்பதற்காகச் சுந்தர சோழர் கையைத் தட்ட எண்ணினார்.

ஆனால் இது என்ன? தம்முடைய தலைமாட்டில் யாரோ நடமாடுவது போல் தோன்றுகிறதே! ஆனால் காலடிச் சத்தம் மிக மெதுவாக, - பூனை, புலி முதலிய மிருகங்கள் நடமாடுவது போல், கேட்கிறது. யாராயிருக்கும்? ஒருவேளை மலையமான் மகளா? தம் குமாரியா? தாதிப் பெண்ணா? தமது உறக்கத்தைக் கலைக்கக்கூடாது என்று அவ்வளவு மெதுவாக அவர்கள் நடக்கிறார்களா?

"யார் அது?" என்று மெதுவான குரலில் சுந்தர சோழர் கேட்டார். அதற்குப் பதில் இல்லை.

"யார் அது? இப்படி எதிரே வா!" என்று சற்று உரத்த குரலில் கூறினார். அதற்கும் மறுமொழி இல்லை.

சுந்தர சோழருக்கு ஓர் எண்ணம் தோன்றியது. அது அவருக்குக் குழப்பத்தையும் திகிலையும் உண்டாக்கியது. ஒருவேளை **அவளாக** இருக்குமோ? அவளுடைய ஆவியாக இருக்குமோ? கனவிலே தோன்றிய கிராதகி இப்போது நேரிலும் வந்து விட்டாளா? நள்ளிரவில் அல்லவா ஆடை ஆபரண பூஷிதையாக வந்து தன்னைத் துன்புறுத்துவது வழக்கம்? இப்போது முன் மாலையிலேயே வந்து விட்டாளா? அல்லது ஒருவேளை நள்ளிரவு ஆகி விட்டதா? அவ்வளவு நேரம் தூங்கி விட்டோமா? அதனாலேதான் ஒருவேளை மலையமான் மகளும் தம் குமாரியும் இங்கே இல்லையோ? தாதிப் பெண்களும் தூங்கி விட்டார்களோ? ஐயோ! அவர்கள் ஏன் என்னைத் தனியாக விட்டு விட்டுப் போனார்கள்? அந்தப் பாதகி, கரையர் மகளாக இருந்தால் என்னை இலேசில் விட மாட்டாளே? உள்ளம் குமுறி வெறி கொள்ளும் வரையில் போக மாட்டாளே?

அடி பாவி! உண்மையில் நீயாக இருந்தால் என் முன்னால் வந்து தொலை! என்னை எப்படியெல்லாம் வதைக்க வேண்டுமோ, அப்படியெல்லாம் வதைத்து விட்டுப் போ! ஏன் நான் பார்க்க முடியாதபடி தலைமாட்டில் உலாவி என் பிராணனை வாங்குகிறாய்! முன்னால் வா! இரத்த பலி கேட்பதற்காக வந்திருக்கிறாயா? வா! வா! நீதான் மடியில் கத்தி வைத்திருப்பாயே? புலி கரடிகளைக் கொன்ற அதே கத்தியினால் என்னையும் கொன்று விட்டுப் போய் விடு! என் மக்களை மட்டும் ஒன்றும் செய்யாதே! நான் செய்த குற்றத்துக்காக அவர்களைப் பழி வாங்காதே! அவர்கள் உனக்கு ஒரு துரோகமும் செய்யவில்லையடி! நான்தான் உனக்கு என்ன துரோகம் செய்தேன்? கலங்கரை விளக்கத்தின் உச்சியில் ஏறிக் கடலில் விழுந்து சாகும்படி நானா சொன்

னேன்? நீயே செய்த அந்தக் கோரமான காரியத்துக்கு என்னை எதற்காக வதைக்கிறாய்...?

சுந்தர சோழர் தம்முடைய தலை மாட்டில் வெகு சமீபத்தில் ஓர் உருவம் வந்து நிற்பதை உணர்ந்தார். திகிலினால் அவருடைய உடம்பு நடுங்கியது. வயிற்றி லிருந்து குடல் மேலே ஏறி நெஞ்சை அடைத்துக்கொண்டது போலிருந்தது! நெஞ்சு மேலே ஏறித் தொண்டையை அடைத்துக்கொண்டது. கண் விழிகள் பிதுங்கி வெளியே வந்து விடும் போலிருந்தது. அவள்தான் வந்து நிற் கிறாள். சந்தேகமில்லை. அவளுடைய ஆவிதான் வந்து நிற்கிறது! தாம் நினைத்தபடியே கடைசியாக இரத்தப் பழி வாங்குவதற்கு வந்திருக்கிறது. தம் நெஞ்சில் கத்தியால் குத்திக் கொல்லப் போகிறது. அல்லது வெறுங் கையினா லேயே தம் தொண்டையை நெரித்துக் கொல்லப் போகிறதோ, என்னமோ? எப்படியாவது அவள் எண்ணம் நிறை வேறட்டும்! நாம் இனி உயிர் வாழ்ந் திருப்பதில் யாருக்கும் எந்த உபயோ கமும் இல்லை. அந்தப் பேய் தம்மைப் பழி வாங்கி விட்டுப் போனால் தம் மக்களை ஒன்றும் செய்யாமல் விட்டு விடும் அல்லவா?

இன்னும் சிறிது நிமிர்ந்து அண் ணாந்து பார்த்தால், மந்தாகினிப் பேயின் ஆவி வடிவம் தம் கண்களுக்குப் புலனாகும் என்று சுந்தர சோழருக்குத் தோன்றியது. தலைமாட்டில் அவ்வளவு சமீபத்தில் அந்த உருவம் வந்து நிற்பது போலிருந்தது. அதன் நிழல்கூட அவர் முகத்திலே விழுந்தது போலிருந்தது. ஒருகணம் நிமிர்ந்து பார்ப்பதற்கு எண்ணினார். அவ்வளவு தைரியம் வரவில்லை. "நான் கண்களை இறுக மூடிக்கொள்கிறேன். அது செய்வதைச் செய்து விட்டுப் போகட்டும்!" என்று தீர்மானித்துக் கண்களை மூடிக்கொண் டார்.

சற்று நேரம் அப்படியே இருந்தார். அவர் எதிர்பார்த்தது போல் அவர் நெஞ்சில் கூரிய கத்தி இறங்கவும் இல்லை. அவர் தொண்டையை இரண்டு ஆவி வடிவக் கைகள் பிடித்து நெரிக்கவும் இல்லை.

அந்த உருவம், - அவர் தலைமாட் டில் நின்ற உருவம், - அங்கிருந்து நகர்ந்து போய் விட்டதாகத் தோன் றியது.

ஆகா! கரையர் மகள் அவ்வளவு சுலபமாக என்னை விட மாட்டாள். இன்னும் எத்தனை காலம் என்னை உயி ரோடு வைத்திருந்து சித்திரவதை செய்ய வேண்டுமோ செய்வாள்! இன்றைக்கு என் கண்ணில் படாமலே திரும்பித் தொலைந்து போய்விட்டாள் போலும்! சரி, சரி! யாரையாவது கூப்பிடலாம். யாராவது இந்த அறைக்குள்ளே வந் தால், இன்னும் இவள் ஒருவேளை இங்கேயே இருந்தாலும் மறைந்து போய்த் தொலைவாள்!

"யார் அங்கே? எல்லாரும் எங்கே போனீர்கள்?" என்று உரத்த குரலில் கூவிக் கொண்டே சுந்தர சோழர் கண் களைத் திறந்தார்.

ஆகா! அவர் எதிரே, மஞ்சத்தின் கீழ்ப்புறத்தில், நிற்பது யார்? அவள் தான். சந்தேகமில்லை! அந்த ஊமை யின் பேய்தான்! தலைவிரி கோலமாக நிற்கிறது அந்தப் பேய்! அதன் நெற்றி யிலே இரத்தம் கொட்டுகிறது! "இரத்தப் பழி வாங்க வந்தேன்!" என்று சொல்லு கிறது போலும்! சுந்தர சோழர் உரத்த குரலில் வெறி கொண்டவரைப் போல் அந்த ஆவி உருவத்தைப் பார்த்த வண் ணமாகக் கத்தினார்:-

"அடி ஊமைப் பேயே! நீ உயிரோ டிருந்தபோதும் வாய் திறந்து பேசாமல் என்னை வதைத்தாய்! இப்போதும் பேசாமல் வதைக்கிறாய்! எதற்காக வந்திருக்கிறாய், சொல்லு! இரத்தப் பழி வாங்க வந்திருந்தால் என்னைப் பழி வாங்கி விட்டுப் போ! ஏன் சும்மா நிற் கிறாய்? ஏன் முகத்தை இப்படிப் பரி தாபமாக வைத்துக் கொண்டிருக்கிறாய்? என்னிடம் ஏதாவது கேட்க வந்திருக் கிறாயா? அப்படியானால் சொல்லு! வாய் திறந்து பேச முடியவில்லை யென்றால், சமிக்ஞையினாலே சொல்லு! வெறுமனே நின்றுகொண்டு

என்னை வதைக்காதே! உன் கண்ணில் ஏன் கண்ணீர் ததும்புகிறது? ஐயையோ! விம்மி அழுகிறாயா, என்ன? என்னால் பொறுக்க முடியவில்லையே! ஏதாவது சொல்லுகிறதாயிருந்தால் சொல்லு! இல்லாவிட்டால் தொலைந்து போ! போக மாட்டாயா? ஏன் போக மாட்டாய்? என்னை என்ன செய்ய வேண்டுமென்றுதான் எண்ணிக்கொண்டிருக்கிறாய்? என் அருமை மகனை- சின்னஞ்சிறு குழந்தையை - காவேரி வெள்ளத்தில் அமுக்கிக் கொல்லப் பார்த்தவள்தானே நீ! கடவுள் அருளால் உன் எண்ணம் பலிக்கவில்லை. இனியும் பலிக்கப் போவதில்லை! அடி பாதகி! இன்னும் எதற்காக என் நெஞ்சைப் பிளக்கிறவள் போலப் பார்த்துக் கொண்டு நிற்கிறாய்? போ! போ! போக மாட்டாயா? போக மாட்டாயா! இதோ உன்னைப் போகும்படி செய்கிறேன், பார்!..."

இப்படிச் சொல்லிக்கொண்டே சுந்தர சோழர் தமதருகில் கைக்கெட்டும் தூரத்தில் என்ன பொருள் இருக்கிறதென்று பார்த்தார். பஞ்ச உலோகங்களினால் செய்த அகல் விளக்கு ஒன்றுதான் அவ்விதம் கைக்குக் கிடைப்பதாகத் தென்பட்டது. அதை எடுத்துக் கொண்டு, "போ! பேயே! போ!" என்று அலறிக்கொண்டு, மந்தாகினிப் பேயின் முகத்தைக் குறி பார்த்து வீசி எறிந்தார். திருமால் எறிந்த சக்ராயுதத்தைப் போல் அந்தத் தீபம் சுடர் விட்டு எரிந்த வண்ணம் அந்தப் பெண்ணுருவத்தை நோக்கிப் பாய்ந்து சென்றது.

அப்போது சுந்தர சோழர் பேய் என்று கருதிய அந்தப் பெண் உருவத்தின் வாயிலிருந்து ஓர் ஓலக் குரல் கிளம்பிற்று.

சுந்தர சோழருடைய ஏழு நாடியும் ஒடுங்கி, அவருடைய உடலும் சதையும் எலும்பும் எலும்புக்குள்ளே இருந்த ஜீவ சத்தும் உறைந்து போயின.

தீபம் அந்த உருவத்தின் முகத்தின் மீது விழவில்லை. சற்று முன்னாலேயே தரையில் விழுந்து உருண்டு 'டணங் டணங்' என்று சத்தமிட்டது.

அகல் விளக்கு அணைந்து விட்ட போதிலும், நல்லவேளையாக அந்த அறையின் இன்னொரு பக்கத்தில் வேறொரு தீபம் எரிந்துகொண்டிருந்தது.

அதன் மங்கலமான வெளிச்சத்தில் சுந்தர சோழர் உற்றுப் பார்த்து, மந்தாகினியின் ஆவி வடிவம் இன்னும் அங்கேயே நிற்பதைக் கண்டார். அதனுடைய முகத்தில் விவரிக்க முடியாத வேதனை ஒருகணம் காணப்பட்டது. பின்னர் அது கடைசி முறையாக ஒரு தடவை சுந்தர சோழரை அளவில்லாத ஆதங்கத்துடன் பார்த்துவிட்டுத் திரும்பி அங்கிருந்து போவதற்கு யத்தனித்தது.

அந்த நேரத்திலேதான் சுந்தர சோழரின் உள்ளத்திலே முதன் முதலாக ஒரு சந்தேகம் உதித்தது. இது மந்தாகினியின் ஆவி உருவமா? அல்லது அவளை வடிவத்தில் முழுக்க முழுக்க ஒத்த இன்னொரு ஸ்திரீயா? அவளுடன் இரட்டையாகப் பிறந்த சகோதரியா? அல்லது ஒருவேளை... ஒருவேளை... அவளேதானா? அவள் சாகவில்லையா? இன்னமும் உயிரோடிக்கிறாளா? தாம் நினைத்ததெல்லாம் தவறா? அவளேயாக இருக்கும் பட்சத்தில் அவள் பேரில் தாம் விளக்கை எடுத்து எறிந்தது எவ்வளவு கொடுமை? அவளுடைய முகத்தில் சற்று முன் காணப்பட்ட பரிதாபம் மாறி, விவரிக்க முடியாத வேதனை தோன்றியதே? தம்முடைய கொடூரத்தை எண்ணி அவள் வேதனைப்பட்டாளோ? - ஆகா! அதோ அவள் திரும்பிப் போக யத்தனிக்கிறாள். எந்தப் பக்கம் போகலாம் என்று பார்க்கிறாள்.

"பெண்ணே! நீ கரையர் மகள் மந்தாகினியா? அல்லது அவளுடைய ஆவி வடிவமா? அல்லது அவளுடன் பிறந்த சகோதரியா? நில், நில்! போகாதே! உண்மையைச் சொல்லி விட்டுப் போ...!"

இவ்விதம் சுந்தர சோழர் பெருங்

குரலில் கூவிக்கொண்டிருந்தபோது தடதடவென்று பலர் அந்த அறைக்குள் புகுந்தார்கள். மலையமான் மகள், குந்தவை, வானதி, பூங்குழலி, முதன் மந்திரி, அவருடைய சீடன், - அத்தனை பேரும் அறைக்குள்ளே வருகிறார்கள் என்பதைச் சுந்தர சோழர் ஒரு கண நேரத்தில் தெரிந்துகொண்டார்.

"நிறுத்துங்கள்! அவள் ஓடிப் போகாமல் தடுத்து நிறுத்துங்கள்! அவன் யார், எதற்காக வந்தான் என்பதைக் கேளுங்கள்!" என்று சுந்தர சோழர் அலறினார்.

உள்ளே வந்தவர்கள் அவ்வளவு பேரும் ஒருகணம் வியப்பினால் திகைத்துப் போய் நின்றார்கள். சுந்தர சோழரின் வெறி கொண்ட முகத் தோற்றமும், அவருடைய அலறும் குரலில் தொனித்த பயங்கரமும் அவர்களுக்குப் பீதியை உண்டாக்கின. மந்தாகினி தேவியை அங்கே பார்த்தது அவர்களை வியப்பு வெள்ளத்தில் திக்கு முக்காடச் செய்தது. இன்னது செய்வது என்று அறியாமல் எல்லாரும் சற்று நேரம் அசைவற்று நின்றார்கள். முதன் மந்திரி அநிருத்தர் நிலைமை இன்னதென்பதையும் அது எவ்வாறு நேர்ந்திருக்கக் கூடும் என்பதையும் ஒருவாறு ஊகித்து உணர்ந்து கொண்டார். அவர் பூங்குழலியைப் பார்த்து, ''பெண்ணே! இவள்தானே உன் அத்தை!'' என்றார்.

"ஆம், ஐயா!" என்றாள் பூங்குழலி.

"திருமலை! ஏன் மரம் போல நிற்கிறாய்? மந்தாகினி தேவி ஓடப் பார்க்கிறாள்! அவளைத் தடுத்து நிறுத்து! சக்கரவர்த்தியின் கட்டளை!'' என்றார்.



ஆழ்வார்க்கடியான் தன் வாணாளில் முதன்முறையாகக் குருவின் கட்டளைக்குக் கீழ்ப்படிய மறுத்தான். "ஐயா! அதைக் காட்டிலும் புயற்காற்றைத் தடுத்து நிறுத்தும்படி எனக்குக் கட்டளையிடுங்கள்!" என்றான்.

இதற்குள் பூங்குழலி சும்மா இருக்கவில்லை. ஓரே பாய்ச்சலாக ஓடிச் சென்று அத்தையின் தோளைப் பிடித்துக் கொண்டாள். மந்தாகினி அவளை உதறித் தள்ளிவிட்டு ஓடினாள்.

ஆழ்வார்க்கடியான் சட்டென்று ஒரு காரியம் செய்தான். சற்று முன்னால் முதன் மந்திரி முதலியவர்கள் நுழைந்து வந்த கதவண்டை சென்று அதைச் சாத்தித் தாளிட்டான். பிறகு கதவை யாரும் திறக்க முடியாதபடி கைகளை விரித்துக்கொண்டு நின்றான்.

வேடர்களால் சூழ்ந்து கொள்ளப்பட்ட மானைப் போல் நாலு புறமும் பார்த்து மிரண்டு விழித்தாள் மந்தாகினி. தப்பிச் செல்வதற்கு வேறு வழி இல்லை என்றும், தான் இறங்கி வந்த வழியாக ஏறிச் செல்ல வேண்டியதுதான் என்றும் தீர்மானித்துக் கொண்டாள். அவள் மேல் மாடியை நோக்கிய பார்வையிலிருந்து அவளுடைய உத்தேசத்தை மற்றவர்களும் உணர்ந்து கொண்டார்கள்.

சுந்தர சோழர் "பிடியுங்கள்! அவளைப் பிடித்து நிறுத்துங்கள்! அவள் எதற்காக வந்தாள், யாரைப் பழி வாங்க வந்தாள் என்று கேளுங்கள்!" என்று மேலும் கத்தினார்.

தூணின் வழியாக மேல் மாடத்துக்கு ஏறிச் செல்ல ஆயத்தமாயிருந்த மந்தாகினி தேவியிடம் மறுபடியும் பூங்குழலி ஓடி நெருங்கினாள். இம்முறை அவளைப் பிடித்து நிறுத்துவதற்குப் பதிலாகப் பூங்குழலி கையினால் சமிக்ஞை செய்து ஏதோ கூற முயன்றாள். மந்தாகினி அதன் பொருளைத் தெரிந்துகொண்டவள்போல், கீழே விழுந்து கிடந்த அகல்விளக்கைச் சுட்டிக் காட்டினாள்.

இதைக் கவனித்துக்கொண்டிருந்த குந்தவை, "அப்பா, பெரியம்மாவின் பேரில் தாங்கள்தான் விளக்கை எடுத்து எறிந்தீர்களா?" என்று கேட்டாள்.

"ஆம், மகளே! அந்தப் பேய் என்னைப் பார்த்த பார்வையை என்னால் சகிக்க முடியவில்லை. அதனால் விளக்கை எடுத்து எறிந்தேன்!" என்றார் சுந்தர சோழர்.

"தந்தையே! பேயுமல்ல; ஆவியும் அல்ல; உயிரோடிருக்கும் மாதரசியேதான். அப்பா! பெரியம்மா சாகவே இல்லை! முதன் மந்திரியைக் கேளுங்கள்! எல்லாம் சொல்லுவார்!" என்று குந்தவை கூறிவிட்டு, மந்தாகினியும் பூங்குழலியும் மௌன வாக்குவாதம் செய்து கொண்டிருந்த காட்சியைப் பார்த்தாள். உடனே அந்த இடத்துக்குப் பாய்ந்து சென்றாள்.

"மகளே! அவளிடம் போகாதே! அந்த ராட்சஸி உன்னை ஏதாவது செய்து விடுவாள்!" என்று சுந்தர சோழர் கூவிக் கொண்டே குந்தவையைத் தடுப்பதற்காகப் படுக்கையிலிருந்து பரபரப்புடன் எழுந்திருக்க முயன்றார்.

மலையமான் மகள் வானமாதேவி அவருடைய தோள்களை ஆதரவுடன் பிடித்துப் படுக்கையில் சாய வைத்தாள்.

"பிரபு! சற்றுப் பொறுங்கள்! தங்கள் திருமகளுக்கு அபாயம் ஒன்றும் நேராது!" என்று கூறினாள்.

## முப்பத்து மூன்றாம் அத்தியாயம்

# "சோழர் குல தெய்வம்"



ந்தவை தன் அருகில் வந்ததும் மந்தாகினி அவளை ஒருகணம் உற்றுப் பார்த்தாள். அப்போது யாரும் எதிர்பாராத ஒரு காரியத்தை இளைய பிராட்டி செய்தாள். தரையில் விழுந்து மந்தாகினியின் பாதங்களைத் தொட்டு சாஷ்டாங்கமாக நமஸ்காரம் செய்தாள். மந்தாகினியின் கண்களில் கண்ணீர் பெருகிற்று. அவள் குனிந்து குந்தவையைத் தூக்கி எடுத்து அணைத்துக்கொண்டாள். பிறகு

இளையபிராட்டி அவளுடைய ஒரு கையைத் தோள் வரையில் சேர்த்துத் தன் கையினால் தழுவிப் பிணைத்துக்கொண்டு சக்கரவர்த்தி படுத்திருந்த இடத்தை நோக்கி வந்தாள்.

சக்கரவர்த்தினி இப்போதுதான் மந்தாகினியின் முகத்தை நன்றாகப் பார்த்தார். அவளுடைய நெற்றியிலிருந்து இரத்தம் வழிவதைக் கண்டாள்.

"சுவாமி! தாங்கள்தான் விளக்கை எறிந்து காயப்படுத்தி விட்டீர்களா? ஐயோ! என்ன காரியம் செய்தீர்கள்?" என்று மலையமான் மகள் அலறினாள்.

"இல்லை, இல்லை! நான் எறிந்த விளக்கு இவள் பேரில் விழவே இல்லை. அதற்கு முன்னாலேயே இவள் இரத்தக் காயத்துடன் வந்து நின்றாள். ஆனால் இந்தப் பாதகி என் பேரில் பழி சொன்னாலும் சொல்லுவாள்! நீங்களும் நம்பி விடுவீர்கள். நீங்கள் எல்லாருமே அவளுடைய பட்சத்தில் இருக்கிறீர்கள். மலையமான் மகளே! இவளிடம் நீ கூடப் பரிதாபப்படுகிறாயே? இவள் யார் என்பது உனக்குத் தெரியுமா?" என்று சுந்தர சோழர் கேட்டார்.

"தெரியும் சுவாமி! இவர் என் குல தெய்வம். சோழர் குலத்துக்கே தெய்வம். என் அருமை மகன் காவேரியில் முழுகிப் போய் விடாமல் காப்பாற்றிக் கொடுத்த தெய்வம் அல்லவா...?"

"ஆகா! நீ கூட அவ்விதம் நம்புகிறாயா? குந்தவை ஒருவேளை அவ்வாறு உன்னிடமும் சொன்னாளா?"

"நானே கண்ணால் பார்த்ததைத்தான் சொல்கிறேன். குந்தவையும் அப்போது குழந்தை அல்லவா? அவளுக்கு என்ன தெரிந்திருக்க முடியும்? அருள்மொழியைக் காப்பாற்றியது மட்டும் அல்ல. சோழ நாட்டுக்குத் தங்கள் உயிரைக் காப்பாற்றிக் கொடுத்த தெய்வமும் இவர்தானே! தாங்கள் பூதத் தீவில் காட்டுக் கரடிக்கு இரையாகாமல் காப்பாற்றிய தெய்வம் அல்லவா...?"

"கடவுளே! அதுகூட உனக்குத் தெரியுமா? இவள் இத்தனை நாள் உயிரோடு இருந்து வருகிறாள் என்பதும் தெரியுமா?"

"சில காலமாகத் தெரியும். தெரிந்தது முதல் இத்தேவியை ஈழ நாட்டிலிருந்து அழைத்து வரும்படி முதன் மந்திரியிடம் சொல்லிக்கொண்டிருந்தேன்..."

"அநிருத்தரே! இது என்ன மகாராணி சொல்லுவது? இவள் உண்மையிலேயே அந்தக் கரையர் மகள்தானா? இவள் உயிரோடுதானிருக்கிறாளா? இவள் இறந்துவிட்டாள் என்பது பொய்யா? இவள் ஆவி என்னை வந்து சுற்றுகிறதென்று நான் எண்ணியதெல்லாம் பிரமையா? ஏற்கெனவே என் அறிவு குழம்பியிருக்கிறது. எல்லாருமாகச் சேர்ந்து என்னை முழுப் பைத்தியமாக்கி விடாதீர்கள்!" என்றார் சக்கரவர்த்தி சுந்தர சோழர்.

"பிரபு! இவர் கரையர் மகள் என்பது உண்மைதான். இவர் இறக்கவில்லை என்பதும் உண்மைதான். சக்கரவர்த்தி! நான் பெரிய குற்றவாளி. நான் செய்த குற்றத்துக்கு மன்னிப்பே இல்லை. ஆனாலும் தங்கள் கருணையினால்..."

"முதன் மந்திரி! இப்போது தெரிகிறது. கோடிக்கரையிலிருந்து நீர் பலவந்தமாகப் பிடித்துக்கொண்டு வரச் சொன்னவள் இவள்தான்! பல்லக்கில் வந்தவள் அந்த ஓடக்காரப் பெண் என்று நீர் கூறியது உண்மையல்ல...!"

"மன்னர் மன்னா! அடியேனை மன்னிக்க வேண்டும்!"

"ஆகா! மன்னிக்க வேண்டுமாம்! சக்கரவர்த்தி என்றும், மன்னர் மன்னன் என்றும் கூறப்பட்ட ஒருவன் என்னைப் போல் ஏமாற்றப்பட்டது இந்த உலகம் தோன்றிய காலத்திலிருந்து நேர்ந்திராது. எனக்குத் தெரியாமல் ஏன் இந்தக் காரியத்தைச் செய்ய வேண்டும்? ஏன் முன்னாலேயே சொல்லியிருக்கக் கூடாது? இன்று சாயங்காலம் என்னுடன் அத்தனை நேரம் பேசிக்கொண்டிருந்தீர்களே? அப்போதுகூட ஏன் சொல்லவில்லை? முதன் மந்திரி! எனக்கு எல்லாம் விளங்குகிறது. பழுவேட்டரையர்கள் சொல்லுவது சரிதான். நீங்கள் எல்லோருமாகச் சேர்ந்து எனக்கு எதிராகச் சூழ்ச்சி செய்கிறீர்கள்!"

"நாங்கள் சூழ்ச்சி செய்தது என்னமோ உண்மைதான். ஆனால் தங்களுக்கு எதிராகச் சூழ்ச்சி செய்யவில்லை. எப்படியாவது கரையர் மகளைத் தங்களிடம் கொண்டு வந்து சேர்ப்பிக்க வேண்டுமென்று எண்ணினோம். அவள் கடலில் விழுந்து இறந்தது பற்றித் தங்கள் மனம் மிக்க வேதனைப்பட்டுக்கொண்டிருக்கிறது என்று மகாராணியின் மூலமாக அறிந்து நான் இந்த முடிவுக்கு வந்தேன். மகாராணியும் அவ்விதம் ஆக்ஞாபித்தார்கள். ஆனால் அவரை அழைத்து வருவது எளிய காரியமாயில்லை. அவர் உயிரோடிருப்பதாகச் சொன்னால் தாங்கள் நம்புவது சிரமமாயிருக்கும். ஆகையால் எப்படியும் அவரை இந்த ஊரில் கொண்டு வந்து சேர்த்த பிற்பாடு தங்களிடம் சொல்ல எண்ணினேன். நேற்று மாலை கோட்டை வாசலுக்குக் கிட்டத்தட்ட வந்த பிறகு மந்தாகினி தேவி மறைந்து விட்டார். அவருக்குப் பதிலாக இந்தப் பெண் பல்லக்கிலே வந்தாள். இன்றைக்கெல்லாம் தேவியைத் தேடுவதில் ஈடுபட்டிருந்தோம். அவர் பழுவூர் அரண்மனைத் தோட்டத்தின் மதில் ஏறிக்



குதித்ததைப் பார்த்து விட்டுத்தான் என் சீடனும் அவ்வாறு மதில் ஏறிக் குதித்தான். ஆனால் இந்தத் தேவி அகப்படவில்லை. திருமலையைப் பழுவூர் ஆட்கள் பிடித்துக்கொண்டு வந்தார்கள். சக்கரவர்த்தி! என் சீடனை அக்குற்றத்துக்காக மன்னிக்கப் பிரார்த்திருக்கிறேன்.''

''மன்னிப்பதற்கு இது ஒரு குற்றந்தானா? எவ்வளவோ இருக்கிறது! அப்புறம் சொல்லுங்கள்!''

"அப்புறம், இன்று சாயங்காலம் வரை காத்திருந்தும், பழுவூர் அரண்மனைக்குள்ளே தேடியும், இவரைக் காணவில்லை. தாங்கள் சற்று முன் கண்ணயர்ந்திருந்த போது நாங்கள் எல்லாரும் அடுத்த அறையில் இவரைப் பற்றியே பேசிக்கொண்டிருந்தோம். இவர் எங்கே மறைந்திருக்கக் கூடும் என்றும், இதையெல்லாம் பற்றித் தங்களிடம் எப்படிச் சொல்வது, யார் சொல்வது என்றும் யோசனை செய்து கொண்டிருந்தோம். அதற்குள் இவராகவே எப்படியோ தங்கள் சந்நிதிக்கு வந்து சேர்ந்திருக்கிறார். பழம் நழுவிப் பாலில் விழுந்தது போலாயிற்று!''

சக்கரவர்த்தி அப்போது மந்தாகினி தேவி இருந்த இடத்தை நோக்கினார். குந்தவை, பூங்குழலி முதலியோர் அந்தப் பெண்மணியின் நெற்றியிலிருந்த



காயத்தை ஈரத் துணியினால் துடைத்து விட்டு மருந்து கலந்த சந்தனக் குழம்பை அதன் பேரில் அப்புவதைக் கவனித்தார்.

"விடங்கர் மகளே! உன் அத்தையின் நெற்றியில் காயம் எப்படி ஏற்பட்ட தென்று கேட்டுச் சொல்வாயா?" என்றார்.

பூங்குழலி இரண்டு அடி முன்னால் வந்து, "கேட்டேன், பிரபு! ஆனால்



அத்தை சொல்லும் காரணம் எனக்கே சரியாக விளங்கவில்லை..." என்றான்.

"என்னதான் சொல்லுகிறாள்? நான் விளக்கை எறிந்ததால் ஏற்பட்ட காயம் என்று சொல்லுகிறாளா?"

"இல்லை, இல்லை! மலைமேல் முட்டிக்கொண்டதால் காயம் பட்டதாகச் சொல்கிறார். இரத்தம் வழிந்ததை அவர்



கவனிக்கவில்லையென்றும் கூறுகிறார்...''

சுந்தர சோழர் அப்போது ஒரு மிக அபூர்வமான காரியம் செய்தார். கலகலவென்று நகைத்தார்! அம்மாதிரி அவர் சிரித்ததை மற்றவர்கள் பார்த்துப் பல வருஷங்கள் ஆயின. மீண்டும் மீண்டும் அவர் நினைத்து நினைத்துச் சிரித்தார். அனைவரும் அவரைக் கவலையுடன் உற்றுப் பார்க்கத் தொடங்கினார்கள்.

''முதன் மந்திரி! எதற்காக என்னை எல்லோரும் இப்படி உற்றுப் பார்க்கிறீர்கள்? எனக்குப் புதிதாகப் பைத்தியம் பிடிக்கவில்லை. பழைய பைத்தியந்தான் மிச்சமிருக்கிறது. இப்போது நான் சிரிப்பதின் காரணம் உங்களுக்கெல்லாம் தெரியவில்லையா? சோழவள நாட்டில் இவள் மலையில் மோதிக்கொண்டு காயம் பட்டதாகக் கூறுகிறாளே? மலையைப் பற்றிச் சொல்வானேன்? இங்கே ஒரு சிறிய விக்கிரகம் செய்யக் கூடக் கல் கிடைக்காதே? சோழ சக்கரவர்த்தியின் தலையில் யாராவது கல்லைப் போட விரும்பினால் அதற்குக் கூட ஒரு கருங்கல் கிட்டாதே! இவள் மலை மீது மோதிக்கொண்டதாகச் சொல்கிறாளாமே? எந்த மலையின் மேல் மோதிக்கொண்டாள்? பூங்குழலி! நன்றாகக் கேள்!'' என்றார்.

இதையெல்லாம் கேட்டுக் கொண்டிருந்த வானதியின் முகத்தில் அப்போது ஒரு பிரகாசம் உண்டாயிற்று. அவள் சட்டென்று இரண்டு அடி முன் வந்து சக்கரவர்த்திக்கு வணக்கம் செலுத்தினாள். ''ஐயா! எனக்கு ஒன்று தோன்றுகிறது. கட்டளையிட்டால் சொல்லுகிறேன்!'' என்றாள்.

''வேளிர் மகளே! நீ வேறு இங்கே இருக்கிறாயா? உன்னை இத்தனை நேரமும் நான் கவனிக்கவே இல்லையே? இவ்வளவு தடபுடலுக்கும் நீ மூர்ச்சையடைந்து விழாமல் இருக்கிறாயே? அதுவே ஆச்சரியந்தான்! உனக்கு என்ன தோன்றுகிறது? எதைப் பற்றி? சொல்!'' என்று சக்கரவர்த்தி ஆக்ஞாபித்தார்.

''இந்தத் தேவி மலைமேல் மோதிக் கொண்டதால் காயம் பட்டது என்கிறாரே! அதைப் பற்றி எனக்கு ஒன்று தோன்றுகிறது, ஐயா!''

''என்ன? என்ன? நீ புத்திசாலிப் பெண்! உனக்கு ஏதேனும் காரணம் புரிந்தாலும் புரிந்திருக்கும்! சீக்கிரம் சொல்! ஈழ நாட்டில் மலையில் முட்டிக் கொண்டு அந்த இரத்தக் காயத்துடனே இங்கே வந்திருக்கிறாளா?''

''இல்லை, ஐயா! இந்த அரண்மனைத் தோட்டத்தில் சிற்ப மண்டபம் ஒன்று இருக்கிறதல்லவா? அதற்குள்ளே இராவணன் தூக்கிப் பிடிக்கும் கைலாச மலை ஒன்று இருக்கிறது. ஒருவேளை அதில் இவர் முட்டிக்கொண்டிருக்கலாம்!''

இவ்விதம் வானதி சொன்னதும் அத்தனை பேரும் வியப்புக் கடலில் மூழ்கிப் போனார்கள். ''இருக்கலாம், இருக்கலாம்!'' ''அப்படித்தான் இருக்கும்'' என்று ஒருவருக்கொருவர் சொல்லிக் கொண்டார்கள்.

குந்தவை வானதியின் நெற்றியைத் தொட்டுத் திருஷ்டி கழிப்பது போல் கையை நெரித்து, ''அடி என் கண்ணே! என்ன புத்திசாலியடி நீ! எங்களுக்கெல்லாம் தோன்றாதது உனக்குத் தோன்றியதே!'' என்றாள்.

பூங்குழலி அதைக் கோபத்துடன் பார்த்துக்கொண்டிருந்துவிட்டு, தன்னுடைய ஊமை அத்தையிடம் சமிக்ஞை பாஷையில் பேசினாள். பின்னர்,

''ஆமாம்; சிற்ப மண்டபத்தில் உள்ள மலைதானாம்! அந்த மண்டபத்தை நான் பார்த்திருந்தால், எனக்கும் அது தெரிந்திருக்கும்!'' என்றாள்.

சக்கரவர்த்தி மந்தாகினியை உற்றுப் பார்த்துக்கொண்டே ''ஆமாம்; வழி தெரியாமல் தவித்துச் சிற்ப மண்டபத்தில் மலைமேல் முட்டிக்கொண்டிருக்கிறாள். எங்கே போவதற்காக வழி

தேடினானோ, தெரியவில்லை. கடைசியில் இங்கே வந்து சேர்ந்தாள்!'' என்றார்.

''தங்களிடம் வருவதற்குத்தான் வழி தேடி இருக்கிறார். அதைப் பற்றிச் சிறிதும் சந்தேகம் இல்லை. நானே இவர்களிடம் சொல்லிக்கொண்டிருந்தேன். தங்களைத் தரிசிக்காமல் இவ்விடம் விட்டுப் போக மாட்டார் என்று...''

''நான் நம்பவில்லை, முதன் மந்திரி! என்னிடம் இவள் வருவதாக இருந்தால் முன்னமே வந்திருக்க மாட்டாளா? இருபத்தைந்து வருஷமாக வந்திருக்க மாட்டாளா? இத்தனை நாள் பொறுத்திருந்து வருவானேன்? என்னைப் பேயாக வந்து சுற்றுவானேன்? ஆம், ஆம்! இவள் பேய் வடிவத்தில் இருப்பதாக எண்ணிக் கொண்டிருந்தேன். அதுவும் உண்மைதானே? பேயைப் போலத்தான் ஈழ நாட்டுக் காடு மலைகளில் அலைந்து திரிந்து வந்திருக்கிறாள். நான் இத்தனை காலமும் அரண்மனைச் சுக போகங்களில் ஆழ்ந்து காலங் கழித்திருக்கிறேன். குற்றத்தின் சக்தியைத்தான் என்னவென்று சொல்லுவது? இவளைப் போன்ற உருவத்தைக் கண்டு எத்தனை தடவை என் உள்ளம் பிரமை அடைந்திருக்கிறது? யார் கண்டது? இப்போது வந்ததைப் போல் இதற்கு முன்னாலும் இரகசியமாக வந்து என்னைப் பார்த்து விட்டுப் போனாளோ, என்னமோ? நான் பிசாசு என்று எண்ணி மிரண்டு வந்தேன்...! இருபத்தைந்து ஆண்டு! இருபத்தைந்து யுகம்!''

இவ்விதம் தமக்குத் தாமே பேசுகிறவர் போலச் சொல்லி வந்த சக்கரவர்த்தி திடீரென்று அநிருத்தரின் பக்கம் திரும்பி, ''முதன் மந்திரி! நீர் ஏதோ குற்றம் செய்ததாகச் சொல்லி மன்னிப்புக் கேட்டீரே? அது என்ன குற்றம்?'' என்று ஆத்திரத்துடன் கேட்டார்.

அநிருத்தர் ''சக்கரவர்த்தி! குற்றவாளியிடமே குற்றத்தைப் பற்றிக் கேட்பது தர்மமா?'' என்றார்.

''பின்னே, யாரிடம் கேட்கிறது? ஆம்; ஒருவரிடமும் கேட்க வேண்டியதில்லை. உம்முடைய முகத்திலேயே எழுதியிருக்கிறது. இவள் கடலில் விழுந்து இறந்து விட்டதாக வந்து சொன்னீரே? அதுவே பொய்! இருபத்தைந்து வருஷங்களாக அந்தப் பொய்யை நீர் சாதித்து வந்தீர், நானும் நம்பி வந்தேன். அநிருத்தரே! உண்மையிலேயே உமது குற்றம் மிகப் பயங்கரமானது...!

''அதற்கு நான் மட்டும் பொறுப்பாளி அல்ல. சக்கரவர்த்தி! கரையர் குல மகளும் பொறுப்பாளிதான்! அவர் கடலில் விழுந்தது என்னமோ உண்மை. பிறகு புனர் ஜன்மம் அடைந்தார். தங்களிடம் அவர் உயிரோடிருப்பதைச் சொல்ல வேண்டாமென்று வாக்குறுதி வாங்கிக்கொண்டார். வாக்குறுதியைக் கொடுக்காவிடில் மறுபடியும் உயிரை விட்டு விடுவேன் என்று சொன்னார். இவையெல்லாம் உண்மையா என்பதைத் தாங்களே அவரிடம் கேட்டுத் தெரிந்து கொள்ளலாம்.''

''கேட்க வேண்டியதே இல்லை! அவ்விதமே இருக்கும். ஆனாலும் நீங்கள் எல்லாருமாகச் சேர்ந்து எனக்கு எதிராகச் சதி செய்கிறீர்கள் என்று நான் கூறியதிலே தவறு ஒன்றுமில்லை அல்லவா?'' என்றார் சுந்தர சோழர்.

''நான் செய்த குற்றத்துக்கு மன்னிப்பு இல்லைதான். மன்னிப்பு நான் கோரவும் இல்லைதான். ஆனாலும் பல வருஷ காலமாக என் மனத்திலிருந்த பாரம் இன்றைக்கு நீங்கிவிட்டது. இனி எனக்கு விடை கொடுங்கள். திருவரங்கம் சென்று ஸ்ரீரங்கநாதருக்குச் சேவை செய்து என் நாட்களைக் கழிக்க அனுமதியுங்கள்!''

''அது முடியாத காரியம், பிரம்மராயரே! நீர் அன்று செய்த குற்றத்தினால் இன்று எத்தனையோ குழப்பங்கள் நேர்ந்திருக்கின்றன. அவற்றையெல்லாம் தீர்த்து வைத்து விட்டல்லவா நீர் ரங்கநாதருக்குச் சேவை செய்யப் போக வேண்டும்?'' என்றார் சக்கரவர்த்தி.

(தொடரும்)



**மேஷம்** : *(அஸ்வினி, பரணி, கிருத்திகை முதல் பாதம் முடிய)*

'எல்லாம் நேரந்தான்!'னு உங்க நண்பர்கள் பொறாமை கலந்த பெருமூச்சு விடறாப்பல சில சாதனைகள் செய்யப் போறீங்க; அல்லது சில சாதகமான சமாசாரங்களாவது நடக்கும். குறிப்பா, கவர்ன்மென்ட் சர்வென்ட்களுக்கு இப்ப டயம் நல்லா இருக்குது. இஷ்டப்பட்ட இடமாறுதல்கள், ப்ரமோஷன் கிடைக்க வாய்ப்பு இருக்கு. வியாபாரிகளுக்கு நல்ல லாபம் வர்றாப்பல புதிய ஒப்பந்தங்கள் நிகழும். சிலருக்கு ஷேர்ல நல்ல லாபம் கிடைக்கலாம். கல்யாண நேரம் இது. இளைஞர்களுக்குத்தான்! ஜாலியா கனவு கண்டுட்டே இருக்கற ஜோர்ல, உடம்பை கவனிக்காம விட்டுடாதீங்க. சிலருக்கு உஷ்ணக் கோளாறு ஏற்பட வாய்ப்பிருக்கு.



**ரிஷபம்** : *(கிருத்திகை 2-ம் பாதம் முதல் ரோகிணி, மிருகசீரிஷம் 2-ம் பாதம் வரை)*

உங்க தோள்களை நல்ல வலுவா வெச்சிக்கங்க. நிறைய புது பொறுப்புகளும் சுமைகளும் வந்து சேரப் போகுது. ஆபீஸ்லேயும் சரி; வீட்டுலேயும் சரி. உங்க முக்கியத்துவம் அதிகரிக்கப் போகுது. எதிர்பாராத பணவரவு, திடீர் வெளியூர் பிரயாணம், திருமண ஏற்பாடு - இப்படி ஏதாவது ஒண்ணு உங்களை எப்பவும் பரபரப்பாகவே வெச்சிருக்கும். அரசியல்வாதிகளுக்குப் படு சுவாரஸ்யமான வாரம் இது. அறிக்கைகள் தான் பறக்கும். எழுத்து, பத்திரிகைத் துறையினருக்கும் பிரகாசமான வாய்ப்புகள் தென்படும். பெண்களுக்குப் புதிய வேலை வாய்ப்புகள் உருவாகும். சிலருக்கு வெளிநாடு போற சான்ஸ்கூட வரலாம்.



**மிதுனம்** : *(மிருகசீரிஷம் 3-ம் பாதம் முதல் திருவாதிரை, புனர்பூசம் 3-ம் பாதம் வரை)*

கிரகங்களெல்லாம் சாதகமாகவே இருக்கு. நினைச்சது நடக்கறதுல சிக்கல் ஏதுமில்லை. பொருளாதார ரீதில நல்ல வளர்ச்சி தெரியும். பழைய பாக்கிகள் வசூலாகும். துணிச்சலா சில காரியங்கள்ல ஈடுபட்டு வெற்றியடைவீங்க. வழக்குகள் ஏதாவது நிலுவைல இருந்தா இப்ப உங்களுக்குச் சாதகமா தீர்ப்பாகும். போட்டி பந்தயங்களிலேயும் வெற்றிதான். வீட்டுல ஒரு சுபகாரியம் நடக்கும். அதனால கையிருப்பு கொஞ்சம் கரையும்.



**கடகம்** : *(புனர்பூசம் 4-ம் பாதம் முதல் பூசம், ஆயில்யம் முடிய)*

சிறப்பான பலன்களை இந்த வாரம் எதிர்பார்க்காதீங்க. காரணம், பெரும்பாலான கிரகங்கள் இப்ப உங்க பேச்ச 'டூ'விட்டிருக்கு. மாமூலான காரியங்கள் நடக்கறதுல சிக்கலிருக்காதுன்னாலும் புதிய முயற்சிகளை தள்ளிப் போடறது நல்லது. கடன் வாங்காதீங்க. லாட்டரி, ரேஸ் மாதிரி குறுக்கு வழிகள்ல போறது இப்ப ரொம்ப ஆபத்து. ஆபீஸ்லேயும் சில வம்புகள்ல மாட்டிக்கிட்டு அவஸ்தைப் படற நேரம்ங்கறதால பொதுவா எப்பவும் வாயை மூடிக்கிட்டே இருக்கறது நல்லது.



**சிம்மம்** : *(மகம், பூரம், உத்திரம் முதல் பாதம் முடிய)*

சிக்கலில்லாத வாழ்கைங்க உங்களுக்கு! பாருங்க, கேக்கறதுக்கு முன்னாடி நண்பர்கள் உதவ ஓடி வருவாங்க. குடும்பத்துலயும் வெளியிலயும் நீங்க வெக்கறதுதான் சட்டமா இருக்கும். எதிர்பாராத பணவரவு இப்ப உண்டு. சிலருக்குப் பிரமோஷன் சான்ஸூம் அடிக்கப்போகுது. வயசானவங்களுக்கு ஆன்மீக யாத்திரை போக வாய்ப்பு வரும். ஆனா, உடல்நலன் கொஞ்சம் படுத்தும். வெளிஇடங்கள்ல சாப்பிட்டு சிலர் வயிற்றுக் கோளாறை அனுபவிப்பாங்க. பயணத்துல எச்சரிக்கையா இல்லாட்டி பிக்பாக்கெட்ல கொஞ்சம் இழக்க வேண்டி வரலாம்.

## நடக்குமென்பார்



**கன்னி** : *(உத்திரம் 2-ம் பாதம் முதல் அஸ்தம், சித்திரை 2-ம் பாதம் வரை)*

அரசியல்வாதிகளுக்கு ஓஹோ வாரம் இது! புதிய அணி சேர்ந்து வெற்றி நடைபோட சரியான தருணம். மேடைப் பேச்சாளர்களும் ஆன்மீக சொற்பொழிவாளர்களும் நிறைய புகழ் - பணம் பெறப் போவது உறுதி. இந்த வாரக் கடைசில உங்க வீட்டுல ஒரு சுப காரியம் நடக்கப் போகுது. அதையொட்டி கொஞ்சம் செலவுகள் இருக்கும். வழக்கறிஞர்கள், விளையாட்டு வீரர்களுக்கு இது வெற்றிகரமான வாரம். சிலருககு புது டிரெஸ் யோகம் இருக்கும். பெண்களுக்குப் பூர்வீக சொத்து ஏதாவது கிடைக்கலாம்.

**மார்ச் 22 முதல் 28 வரை**



**துலாம் :** (சித்திரை 3-ம் பாதம் முதல் சுவாதி, விசாகம், 3-ம் பாதம் வரை)

இந்த வாரம் மூணு விஷயத்துல நீங்க கவனமா இருக்கணும். 1. உடல் நலம், 2. பேச்சு, 3. புதிய முயற்சிகள். புதிய வியாபாரங்களைத் தொடங்க இது நல்ல நேரமில்லை. கடன் வாங்கற விஷயத்துலயும் எச்சரிக்கையா இருங்க. நண்பர்களை அளவுக்கதிகமா நம்பாதீங்க. ஆனா, உங்க சாதுர்யத்தால எந்தப் பிரச்னை வந்தாலும் சமாளிப்பீங்கன்னு வைங்க. சில பேர் புதிய டூ வீலர்கள் வாங்குவீங்க. ஆனா பயணத்துல எச்சரிக்கையா இருக்க வேண்டியது அவசியம். வெளியூர் பயணம் சிலருக்கு இருக்கும். ராத்திரி ரொம்ப நேரம் கண் விழிக்காதீங்க.



**விருச்சிகம் :** (விசாகம் 4-ம் பாதம் முதல் அனுஷம், கேட்டை முடிய)

சாமர்த்தியமா செயல்பட்டு சில கஷ்டமான காரியங்களை இப்ப செய்து முடிப்பீங்க. விஐபிங்க சில பேரோட அறிமுகம் இப்ப கிடைக்கும். அது உங்க எதிர்கால வளர்ச்சிக்கு உதவியா இருக்கும். கலைத் துறையினருக்கு வராத பாக்கிகள் வந்து சேரும். பத்திரிகையாளர்கள் கொஞ்சம் கஷ்டப்பட்டுக் காரியங்களை சாதிக்க முடியும். எதிர்பாராத வகைல சில பிரச்னைகளோ இழப்புகளோ வரலாம். மன உறுதியோட நின்னு ஜெயிச்சிக் காட்ட வேண்டிய நேரம் இது. வீட்டுல சில பிரச்னைகளால கணவன் மனைவி உறவுல சிக்கல் வரும். விட்டுக் கொடுத்து நடந்துக்கங்க.

# நடக்கும்!



**தனுசு :** (மூலம், பூராடம், உத்திராடம் முதல் பாதம் வரை)

நிர்வாகத் திறமை கூடும். புத்திசாலித்தனமான நடவடிக்கைகளால ஆபீஸ்ல உங்க அந்தஸ்தும் செல்வாக்கும் உயரும். கலைத் துறையினருக்கு வெற்றி வாய்ப்புகள் கதவைத் தட்டும். பெண்களுக்குப் புதிய நகை வாங்கும் யோகம் உண்டு. சிலருக்கு வெளியூர் டிரான்ஸ்பர் இருக்கும். பல பழைய பாக்கிகள் வசூலாகும். கோயில், குளம்னு சுத்தற யோகம் சிலருக்கு இருக்கும். கார், பஸ் பயணங்களில் எச்சரிக்கை அவசியம். சிறு விபத்துகளுக்கு வாய்ப்பு இருக்கு.



**மகரம் :** (உத்திராடம் 2-ம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2-ம் பாதம் வரை)

அவசரப்படாம எந்தக் காரியத்தையும் கவனமா திட்டமிட்டு செய்யுங்க. எதிர்பார்த்த உதவிகள் கிடைக்கறதுல தாமதமாகலாம். பணம் தண்ணி காட்டலாம். எல்லாவே பிரச்னை வரலாம் – ஆனா, நிதானமா இருக்க வேண்டியது அவசியம். இப்ப உங்களுக்கு வீடுதான் ஒரே ஆறுதல். மனைவி, குழந்தைகளை சந்தோஷமா வெச்சிக்கங்க. மத்த பிரச்னைகளைக் கொஞ்சம் தள்ளிப் போடுங்க. ஆபீஸ்ல யார்கிட்டேயும் அநாவசியப் பேச்சு வெச்சுக்காம இருக்கறது நல்லது.

**மீன ராசிக்காரரான ஹேமமாலினிக்குப் பூர்வீக சொத்து ஏதோ கிடைக்கப் போகுது!**



**கும்பம் :** (அவிட்டம் 3-ம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3-ம் பாதம் வரை)

ஆபீஸ்ல நல்ல பேர், பிரமோஷனுக்கு வாய்ப்பிருக்கு. சிலர் உல்லாச டூர் போவாங்க. காதல் அனுபவங்கள் கிளுகிளுப்பா அமையும். பலருக்குக் கல்யாணம் ஒர்க் அவுட் ஆகலாம். கலைஞர்களுக்கு இது பொற்காலம்னே சொல்லலாம். தொட்டதெல்லாம் துலங்கும். ஆனா, பெண்கள் வாய் மூலமா மாட்டிக்கிட்டு அவஸ்தைப் படறாப்பல சில சம்பவங்கள் நடக்கும். வீண் வம்புகள்ல தலை விடாம இருக்கறது நல்லது.



**மீனம் :** (பூரட்டாதி 4-ம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

ஆன்மிகத்துல மனசு ஆழமா நிலைக்கும். தெய்வ காரியங்கள், சமூகப் பணிகள் மூலமா நல்ல பேர் எடுப்பீங்க. வீட்டுல ஒரு திருமணப் பேச்சு ஆரம்பமாகும். சிலருக்குப் பூர்வீக சொத்து ஏதாவது கிடைக்கலாம். விளையாட்டு வீரர்களுக்கும் விஞ்ஞானிகளுக்கும் புகழ் கொழிக்கும் வாரம் இது. அரசியல்வாதிகளுக்கு இது சிக்கலான காலகட்டம். தர்மசங்கடங்கள்ல மாட்டிக்கிட்டு அவஸ்தைப்படுவாங்க. ●

'அவரை அவரோட ஜவுளிக் கடைல பார்த்தேன். ஐயோ, அவர்ட்ட பேசறதுக்கே பயமாயிருக்குப்பா. கண்ல அவ்ளோ தீட்சண்யம்',- அவனது எழுத்தாள நண்பன் ஒருவன் சொன்னது அவனை இன்னமும் உசுப்பி விட்டது. ஏதேதோ காரணங்களால் அவன் உந்தப்பட்டுவிட்டானேயொழிய, என்ன பேசுவது... எப்படி ஆரம்பிப்பது... என்னும் அடிவயிற்றுப் பயம் அவனை விட்டு இன்னும் முழுசாய் நீங்கியபாடில்லை.

'ஐயா, நான் ஒரு எழுத்தாளன்' என்று சற்றே மிகைப்பட்ட த்வனியில் பேச்சைத் துவக்கலாமா என்று யோசித்தான். அவனுக்கே வெட்கம் பிடுங்கித் தின்றது. ஏதோ நாலு சிறுகதை பிரசுரம் பெற்று விட்டது. அதுவும் ஒரு கதை இலக்கியவாதிகள் மதிக்கும் ஒரு சிறு பத்திரிகையில் பிரசுரமாகி விட்டது என்னும் ஒற்றைத் தகுதியை மட்டுமே வைத்துக் கொண்டு அவனை ஒரு கூட்டத்தில் பேச அழைத்திருந்தார்கள்.

எழுத வருபவனுக்கு பேச வந்து விடுமா...? வரும் என்னும் நம்பிக்கையில் போய்த்தான் அவன் அசிங்கப்பட்டுக் கொண்டான். நான்கு சுவற்றுக்குள் ஆளரவமற்ற சூழலில் சரசரவென்று பேனா வேண்டுமானால் வேகமாய் எழுத்தைக் கக்கலாம். ஆனால் நூறு ஜனக்கூட்டத்தில் அத்தனை கண்களும் மொய்க்கும் பட்சத்தில் வார்த்தைகள் சரளமாய்ப் புழங்குவதென்பது துர்லபம்தான்.

கூட்டம் முடிந்ததும், அங்கு வந்திருந்த அத்தனை மனிதர்களும் அவனைச் சூழ்ந்து கொண்டு ஏகத்துக்கு அறிவுரை தந்தார்கள். ஐயோ பாவம்... ஏதோ கொஞ்சம் எழுத வருதே ஒழிய, பேச வரலை. பேசிப் பேசி பழகுங்க. போகப் போக சரியாயிடும், என்கிற ரீதியில் அனுதாபத்துடன் கூடிய அறிவுரைகள். ஐயா, அதுதான் போகட்டும். உணவறையில் சாம்பார் ஊற்றும் பையனுக்கும் இவனைப் பார்த்துக் கேலி.

சாதாரண நூறு ஜனப் பாமரக் கூட்டத்தினரிடையே கூட என்னால் எழுத்தாளன் என்று நெஞ்சு விரைத்துக் கொள்ள முடியவில்லையே. இங்கு எப்படி, இந்த ஜாம்பவானிடம் நான் ஒரு எழுத்தாளன் என்று மாரை நிமிர்த்தியபடி பேச்சை ஆரம்பிக்க முடியும்?

அவனுக்குள் தெளிவின்மை அடர்ந்திருந்தது.

எழுத்தாளன் எழுத்தை ஜீவிதமாகக் கொள்ள முடியாது. புதுமைப்பித்தன், கு.ப.ரா. என்று தொடங்கி எத்தனையோ பேர் எழுத்தை ஜீவனோபாயமாகக் கொண்டு, வறுமையின் கோரக் கழுத்து நெறிப்பால் மல்லாந்து போயிருக்கிறார்கள். பிதாமகர்களுக்கே இப்படி என்றால் நாம் ஒரு துரும்பல்லவா... இந்த எண்ணத்தில்தான் அவன் ஒரு வேலையைத் தேடிக் கொண்டான்.

ஆனால் வேலையைத் தேடிக் கொண்டபின் தான், அந்தச் சூழலில் பொதிந்திருந்த ராக்ஷஸத்தனம் தன் பிம்பத்தை வெளிக்காட்டியது.

இயற்கை மனிதனை இரு தொழிலுக்குப் படைக்கவில்லை போலும். செய்யலாம். எனக்குப் பல்வேறு முகங்கள் உண்டு என்கிற இறுமாப்பில் பலதரப்பட்ட வேலையில் தன்னை இயக்கிக் கொள்ளலாம்.

ஆனால் பணிகளில் நேர்மை? ஆத்ம சுத்தியோடு கூடிய ஓர்மை...? சாத்தியப்படுமென்பது அரிதுதான்.



# நந்தன்

# உயரம்

எழுத்தாளன், உண்ணும்போது படிக்க வேண்டும். பேருந்தில் பயணம் செய்யும்போது படிக்க வேண்டும். விரயமான வெட்டிப் பேச்சு தவிர்த்து, படிக்க வேண்டும். காலம் ரொம்பவும் சொற்பமானது. இப்படிப் படிக்க வேண்டிய எழுத்தாளன், எத்தனை நேரம் எழுத்து பற்றி சிந்தனைவயப் பட்டிருக்க வேண்டும்...?

இத்தனை நேர படிப்பும், காலம் கணக்கற்ற சிந்தனைகளும்தான், சுண்டச் சுண்டக் காய்ச்சப்படும் பால் சுருங்கிச் சுருங்கி துக்கினி யூண்டு திரட்டிப் பாலாய் உருமாற்றம் கொள்வது போல், ஒரு பத்தி எழுத்தாய் முடிகிறது.

அவன் எழுத்து அவன் வயிற்றுப்பாட்டுக்காக கைக் கொண்ட வேலையை நேர்மை யாகச் செய்ய விடவில்லை. நேர்மையும் ஈடுபாடும் குறைந்த பணிகள் சிறந்ததாகச் சரித்திர மில்லையே. அவன், பணி யிடத்தில் குறைசொல்லப் பட்டான். அங்கு முக்கி யத்துவம் இழந்தான். குற்றம் சுமத்தலையும் முக்கி யத்துவம் அற்றலையும் விட, நாம் நம் பணிக்கு நேர்மை யாயில்லையோ என்னும் சிந்தனைப் பின்னலே அவனை வெகுவாய் வாட்டிற்று.

அதற்காக எழுத்தை விட்டு விடவா முடியும்? இன்று வாழ்க்கை பற்றிய எக்கச்சக்க யோசிப்புகளை படைப்பாய் படைக்க முடிகிறதென்றால்... இதற்காய் நாம் போட்ட பத்து வருட உழைப்பை ஒரே இரவில் குப்பையில் எறிந்து விட முடியுமா?

தூக்கம், கண்களின் மேல் இமைப் படலை அழுத்திக் கிழிழுக்கும் போது எத்தனை இரவுகள் கண்களில் ஜலத்தை தேய்த்துக் கொண்டு எழுத பழகியிருக்கிறோம்! அப்படியே அதையும் மீறி இரவு படுக்க நேர்ந்து விட்டால், மறுநாள் காலை இரண்டு மணிக்கு அலாரம் வைத்து விட்டு அதை மட்டும் நம்பாமல் நாலைந்து தம்ளர் தண்ணீர் குடித்து விட்டு ஒன்றுக் குப் போகாமல், அட்லீஸ்ட் இதுவாவது நம்மை இரண்டு மணிக்கு எழுப்பி விடட்டும் என்கிற எண்ணத்தில் எத்தனை இரவுகள் குறைத் தூக்கம் பயின்றிருக்கிறோம்.

அட, நம்மை விடுங்கள்.

மனைவி என்ன பாவம் செய்தாள்? நான் அருகிருந்து அணைத்தபடி படுத்துக் கொள்ளும் இன்பத்தை, அவள் எத்தனை இரவுகள் என் எழுத்துப் பயிற்சிக்காகத் தியாகம் செய்திருக்கிறாள்...!

இத்தனையையும் மென்று முழுங்கி விட்டு ஒரே ஒரு பணியைக் கைக்கொள் என்றால், எங்ஙனம் ஐயா... எங்ஙனம் இது சாத்தியம்?

அதற்குள் அழைப்பு மணி ஒலித்து, 'ஐயா, உங்களை உள்ளே அழைக்கிறார்' என்று உதவியாளர் சொல்ல, அவன் அப்பொழுதுதான் தன்னுணர்வு மீண்டான்.

ஏதோ ஒரு குருட்டு தைரியத்தில் அவரைச் சந்திக்க வேண்டி நேரம் கேட்டு இங்கு வந்து இந்த இருக்கையில் அவன் அமர்ந்து



''இந்த மெகா சீரியல் ரொம்பவும் ஜவ்வு மிட்டாய் சீ!''

''அப்படியா?''

''பாரேன்! இந்த நிகழ்ச்சியை உங்களுக்கு 'அளப்பவர்கள்'னு போட்டு விளம்பரதாரர் பேர் வருது!''

— அம்பை தேவா

கொண்டிருக்கிறானேயொழிய, வீட்டிலிருந்து கிளம்பும் போது உள்ளே பரவியிருந்த பயம் அவனை விட்டு இன்னும் முற்றாய் விலக வில்லை. அடிவயிறு மெல்லச் சுட்டது மாதிரி அவனுக்குத் தோன்றியது. கை வைத்துப் பார்த்தான். வயிறு சில்லிட்டுப் போயிருந்தது.

ச்... சேய்... என்ன இது, எதை எதையோ யோசித்துக் கொண்டிருந்து விட்டோம். வந்த பணியைக் கோட்டை விட்டு விடுவோமோ...! அலுவலகத்திலும், எழுத்திலும் உணர்வு குவியாமையினால் நமக்குக் கிடைக்கும் இழிவு; இங்கும் ஏற்பட்டு விடுமோ...? அவன் யோசிப்புகள் அறுத்து உள்ளே போனான். ஆத்ம சுத்தியோடு, எழுத்து பற்றிய நம் பிரக்ஞைகளை வெளியே விரித்து விட்டால் போதுமானது என்னும் எண்ணத்தோடு அவன் உள்ளே போனான்.

அவர் சாந்தமாய் தன் இருக்கையில் அமர்ந்திருந்தார். சிரித்த முகத்தோடு அங்கு அவனுக்குக் கிட்டிய வரவேற்பு அவனைக் கொஞ்சம் சந்தோஷப்படுத்தியது. நீ கேட்பவன் – நான் பேசுபவன், நீ மாணவன் – நான் ஆசிரியன், நீ கீழே – நான் உனக்கும் சற்று மேலே என்னும் அதிகார மனோபாவமில்லாத சூழல் அவனுக்குச் சற்று ஆறுதல் தந்தது. அது, அவரோடு கிலேசமின்றி மனம் விரித்துப் பேச அவனை ஆசை கொள்ள வைத்தது. 'நீ கேட்டுக்க வர்றவண்டா. முதுகு வளைச்சி பவ்யமா நில்லு!' என்று ஆணையிட்ட,-முன்பொருமுறை சந்தித்த- எழுத்தாளரின் முகம் நினைவில் வந்து மீண்டது.

இங்கு நிலவிய சிநேக சூழல் அவனை வேகமாய் முடுக்கி விட்டது. அவன் யோசிப்புகள் இல்லாமல், தன்னோடு பல நாள் பழகிய பால்ய காலத்து சிநேகிதனிடம் பேசுவது போல், மனத்தை அழுத்தியிருந்த வற்றை வெளியே கொட்டினான்.

அவன் பேசி முடித்ததும், அவனிடம் அனுமதி கேட்டு விட்டு அவர் பேச ஆரம்பித்தார்.

"உங்களைப் புரிகிறது தம்பி. நன்றாகப் புரிகிறது. 'மனைவிக்கு நெக்லஸ் வாங்கித் தருவதற்காக, கணவன் கொஞ்ச காலம் கஞ்சனாய் இருந்தான். இறுதியில் அதைப் புரிந்து கொண்ட அவன் மனைவி அவனை ஆரத் தழுவிக் கொண்டாள்' என்னும் அச்சுப்பிச்சு கதைகள் எழுதுவதில் உங்களுக்கு நாட்டமில்லை என்பது உண்மைதானே... நல்லது இந்தப் போக்கு, பக்கத்து எதிர்த்த வீட்டாரிடத்தில் தங்கள் பெயரைப் பத்திரிகைகளில் காண்பித்து சந்தோஷப்பட மட்டுமே உதவும். இதில் உயரம் தொடுதலுக்கும் நல்ல இலக்கியத்திற்கும் சாத்தியமே இல்லை. அடுத்து என்ன சொன்னீர்கள்?"

"தத்துவத் தேடல் பற்றி..."

"கொஞ்சம் விரிவாய் சொல்லுங்கள்."

"என்னிடம் தத்துவத் தேடல் கிடையாது ஐயா. பின் தொடரும் நிழலின் குரல் என்று தத்துவம் சார்ந்த புதினங்களை என்னால் எழுத இயலுமென்று எனக்குத் தோன்ற வில்லை. முட்டி முட்டிப் படித்தும் பொருள் முதல் வாதத்தை என்னால் இன்னமும் முற்றாய்ப் புரிந்து கொள்ள முடியவில்லை. மூலதனத் தத்துவத்தில் என்னால் நுனிப்புல் மட்டுமே மேய முடிகிறது.

"எனது இன்றைய நிலை, இரண்டுக்கும் இடைப்பட்ட நிலை. அச்சுப்பிச்சு சிந்தனைக்கும், தத்துவத் தேடலுக்கும் இடைப்பட்ட வாழ்க்கை சார்ந்த பார்வை என்னுடையது. அது குறித்த தேடலும் சிந்தனையும் படைப்புகளும் மட்டுமே என்னால் கிரஹித்துக் கொள்ளக்கூடியது. தவிர, மற்ற இரண்டு எதிர்முனைகளும் என்னால் எட்ட முடியாதவை. இந்த நிலையில் என் எழுத்து முழுமை பெறும் சாத்தியம் உள்ளதா என்பது மட்டமே என் ஐயம்..."

அவன் பேசிக் கொண்டே போக, அவர் அவனைக் கையமர்த்தினார்.

"படைப்புக்கு அடிப்படை வாழ்க்கை. தத்துவங்களோ ஏனையவோ அதனைச் சார்ந்து நிற்றலே அவற்றுக்கு வெற்றி. பிறழ்ந்து போகுமாயின், அது எத்தனை பெரிய தத்துவமாயினும் அது தோல்வியடைந்ததுதான்."

எழுபது வயது மனிதரிடம் வாழ்க்கை மீதான இத்தகைய ஒரு நம்பிக்கையை அவன் எதிர்பார்க்கவில்லை. அவரின் ஆகிருதி கண்டு அவன் மிரண்டு போனான். அவருடனான உரையாடல் அவனுக்கு இதம் தந்தது.

"காப்பி அல்லது தேநீர் ஏதும் சாப்பிடுகிறீர்களா?" என்று அவர் கேட்டார்.

அவன் அதற்கு ஒப்புதலாய் தலையசைத்தான்.

அவர் கடைப்பையனை அழைத்து ஒரு காப்பிக்கு ஆர்டர் செய்தபோது, அவன் வெடுக்கென்று பதறி, "ஐயா... உங்களுக்கு...?" என்று கேட்டான்.

"நான் இரவு ஏழு மணிக்குப் பிறகு ஏதும் சாப்பிடுவதில்லை தம்பி. இதை ஒரு விரதமாகவே கடைபிடித்து வருகிறேன்" என்றார்.

"அப்படியென்றால் எனக்கும் வேண்டாம் ஐயா. நான் மட்டும் தனியாகச் சாப்பிடுவதில் எனக்கு விருப்பமில்லை. ஏதுமே வேண்டாம்" என்றான் அவன்.

அவர் உடனே உள்ளே திரும்பி, "பையா ரெண்டு காப்பி வாங்கிட்டு வா கண்ணு" என்றார்.

அவன் பதறிப் போய், "ஐயா... உங்க விரதம்...?" என்றபடி அவரை ஏறிட,

அவர், "விருந்தாளிக்கு முன்னாடி விரதமாவது வெங்காயமாவது..." என்றவாறு குழந்தை மாதிரி கண்களைக் குறுக்கிக் கொண்டு சிரித்தார்.

அவரது உயரத்துக்கான காரணம் அப்போது அவனுக்கு முழுசாய்ப் புரிபட்டது. ◉

பறக்கும் பாவை! 'ஆம், விமானப் பணிப்பெண் வேலையை விட துணிச்சல் நிறைந்த ஒன்று வேறென்ன இருக்க முடியும்? பறக்கும்போதே நடக்கும் வித்தை, எல்லோரிடமும் காட்ட வேண்டிய கனிவு, பதிலுக்கு அவர்களிடமிருந்து பெறக்கூடிய இன்சொற்கள். இவையே என் வருங்கால லட்சியங்கள்.'

சுவாதியின் மனத்தில் உற்சாகம் பெருக, பீமலா தீதிக்கு ஒரு கடிதம் அனுப்பினாள். இன்னும் பத்து நாட்களில் தன் அம்மாவை சந்திக்கவிருப்பதாகவும், அவனையும் அழைத்துக் கொண்டு காசிக்கு வந்து வீட்டைக் காலி செய்து விடுவதாகவும் எழுதினாள். வாரணாசியில் தீதி தனக்குச் செய்த உதவிகளுக்காக நன்றிகூறவும் மறந்து விடவில்லை. "முன்னா இப்போது முன்னை விடப் பரவாயில்லை" என்று எழுதலாம் என எண்ணி, பிறகு எழுதாமலே விட்டாள். அனாதை ஆசிரமத்தில் அவனைச் சேர்க்கச் சொன்னவளுக்கு அவனைப் பற்றி என்ன கவலை இருந்துவிடப் போகிறது என்று தோன்றியது. கடிதத்தை தபால் பெட்டியில் போட்ட பிறகுதான் "உன் அம்மா அங்கே என்ன செய்து கொண்டிருக்கிறாள்?" என்று தீதியின் மனத்தில் எழுந்திருக்கக்கூடிய கேள்விக்கு தான் பதிலளிக்கவில்லை என்பது புரிந்தது.

"என்னவொரு முட்டாள் நான்" என்று தன்னையே ஒருமுறை குட்டிக் கொண்டாள். சமூகசேவகியாகவே இருக்கட்டும், அம்மாவுக்கென்று இத்தனை வருடங்களில் ஏதோவொரு வேலை இருந்திருக்க வேண்டாமா? தன் வயிற்றை நிரப்பிக் கொள்ள ஒரு மார்க்கம் கிடைத்தால்தானே பிறர் நலனுக்குப் பாடுபட முடியும்?

மேலும் கொஞ்சம் யோசித்தபோது இது பற்றி இந்த மூன்று நாட்களாக கோமளா ஆன்ட்டியிடம் கேட்காததை விட, இப்போதாவது அதைக் கேட்க வேண்டுமென்று தோன்றியதே. தன் கேரக்டருக்குப் பெரிய விஷயம்தான் என்றுபட்டது.

"உன் அம்மாவுக்குத்தானே? தாராளமாக ஒரு வேலை எப்போதும் காத்திருக்கிறது. அவள் நினைத்தால் அங்கு போய் வேலை செய்து அந்த நாட்களுக்கான சம்பளத்தைப் பெற்றுக் கொள்ளலாம். வேண்டாமென்று படுகிறபோது எவ்வளவு நாள் வேண்டுமானாலும் விடுமுறை எடுத்துக் கொள்ளலாம். அப்படி ஒரு சலுகை அவளுக்கு."

சுவாதி வாய்பிளந்தாள். "இப்படியெல்லாம் ஒரு முதலாளி சலுகை காட்டுவாரா என்ன?"

"நீயே இன்று பார்க்கத்தானே போகிறாய். அங்கே உன்னை அழைத்துச் சென்று அறிமுகப்படுத்தி வைக்கிறேன். அவங்களோடு பேசிட்டு நீ வீட்டுக்கு வந்திடு. நான் கடைக்குப் போயிடறேன்."

"இல்லை ஆன்ட்டி. வேண்டாமே."

"ஏன் தனியாக வீடு திரும்ப பயமா?"

"இதிலென்ன பயமிருக்க முடியும்? பஸ் நம்பரைச் சொன்னால் ஏறி வந்துவிடமாட்டேனா?"

சுவாதிக்குத் தன்னம்பிக்கை வியப்பை அளித்தது. எப்படி இவ்வளவு தைரியமாகப் பேசுகிறோம். "வாய்ப்புகள் என்பது தானாக வராது; நாம்தான் அவற்றைத் தேடிப் பார்த்து டக்குனு பிடிச்சுக்கணும்" என்ற அம்மாவின் உபதேசம் அளித்த மாற்றமோ? மரத்தில் கட்டப்பட்டிருந்த கயிற்றை அறுத்துக் கொண்டு கிளம்பிய படகு?




"தின நண்பன் - நடுநிலை நாளேடு' என்ற பலகை தொங்கவிடப்பட்டிருந்த கட்டடத்துக்குள் நுழைந்தபோதே சுவாதியிடம் ஒரு பரபரப்பு ஏற்பட்டது. கடந்த சில நாட்களில் அம்மாவைப் பற்றித்



**அருண் சரண்யா**

தன்னிகுள் பதிந்திருந்த இமேஜை வைத்துப் பார்த்தால் அவன் ஒன்றும் இங்கு சாதாரண வேலை எதிலும் இருந்திருப்பான் என்று தோன்றவில்லை.

)ஙிது உண்மைதான் என்பது போல அங்கிருந்த மரத் தடுப்பினாலான ஒரு சின்ன அறையைக் காட்டினாள் கோமளா. "சத்யா, உதவி ஆசிரியர்" என்ற பெயர்ப் பலகை பித்தளையில் மின்னியது.

"வாங்க கோமளா, ரொம்ப நாளாச்சே பார்த்து. சத்யா மேடம் பத்தி ஏதாவது நியூஸ் உண்டா?" என்று கனிவுடன் வரவேற்றாள் ஒரு பெண்மணி.

''இவங்கதான் மிஸ் சங்கீதா. இந்தப் பத்திரிகையின் ஆசிரியர் குழுவிலே இருக்காங்க. இந்த நாளிதழின் முது

கெலும்பு."

சங்கீதா பாசாங்கில்லாமல் வெட்கப் பட்டாள். "நான் முதுகெலும்பாக இருக் கலாம். ஆனால் இந்த நாளிதழின் இதயம் சத்யா மேடம்தான்" என்றாள்.

"அப்படியா நல்லது, இது யார் தெரி யுமா? ஜூனியர் இதயம். அதாவது சத்யா வின் பெண். பதினெட்டு வருஷம் வட இந்தியாவிலேயே வளர்ந்துட்டு இப்போ அம்மாவோடு நிரந்தரமாத் தங்குவதற்கு வந்திருக்கா. பெயர் சுவாதி."

அந்த சங்கீதாவின் மனத்தில் குறைந்தது ஒரு டஜன் கேள்விகளாவது எழுந்திருக்க வேண்டும் என்பது மாறிக் கொண்டே வந்த அவள் முகபாவத்திலிருந்து தெரிந்தது. என்றாலும் அதையெல்லாம் வார்த்தைகளாக வெளிப்படுத்தாமல் "ரொம்ப ரொம்ப சந் தோஷம். உன்னை சந்திச்சதிலே. கொடுத்துவச்ச மகள்" என்றாள்.

'பதினெட்டு வருடங்களாக அம்மா வையே பார்க்க முடியாத அளவுக்குக் கொடுத்து வைத்த மகள்' என்று நினைத்துக் கொண்டாள் சுவாதி.

"இன்னும் சத்யாவிடமிருந்து எந்த லெட்டரும் வரலே சங்கீதா. பை தி வே, சுவாதியை எடிட்டரிடம் அறிமுகம் செய்து வை. ரொம்ப சந்தோஷப்படுவார். நான் கொஞ்சம் கிளம்பணும்."

"எடிட்டர் வர இன்னும் ஒரு மணி நேரமாகும். அதுவரை சுவாதி என்னோடு பேசிக்கொண்டிருக்கட்டுமே. என்ன சுவாதி, என்ன சொல்றே?"

"வித் ப்ளெஷர்" என்று சுவாதி கூற கையசைத்து விட்டு கோமளா நகர்ந்தாள்.

"சுவாதி காப்பி சாப்பிடறியா?"

"வேண்டாம். இப்பத்தான் டீ குடிச்சுட்டு வரேன்."

"ஒரு பத்து நிமிஷம் வெயிட் பண்ணு. ஆரம்பிச்ச வேலையை முடிச்சுட்டு வரேன். அதுவரை இந்தப் பத்திரிகைகளைப் படிச்சிட்டிரு" என்று சில வார இதழ்களை நீட்டியவள் திடீரென்று அவற்றைத் தன் மேஜை இழுப்பறையிலேயே வைத்துக் கொண்டாள். இதெல்லாம் வேண்டாம். உனக்கொரு புதையலைத் தரேன்" என்றபடி அருகிலிருந்த ஒரு அறைக்குள் போனாள். ஏதோ ஒரு பீரோவை அவள் திறந்து மூடும் சப்தம் கேட்டது. வரும்போது அவள் கையில் ஒரு கோப்பு இருந்தது.

"எல்லாம் உன் அம்மாவின் கைவண் ணம்தான்" என்றவள், "உனக்குத் தரத்தானே கொண்டு வந்தேன். ஏன் இப்படிப் பிடுங் கறே?" என்றாள் சற்றே கிண்டலாக.

அது பற்றியெல்லாம் கவலைப்படா மல் அந்தக் கோப்பைப் பிரித்தாள் சுவாதி.

"திருப்பதி" என்ற தலைப்பில் பல சின்னச் சின்னக் கவிதைகள்.

கவிதைகளைப் படிப்பதற்கு முன் அந்த எழுத்துக்கள் அவளைக் கவர்ந்தன. முத்து முத்தாக என்று சொல்லும்படி செதுக்கி வைத்த அழகு தென்படவில்லையென் றாலும், ஒரு தெளிவு புலப்பட்டது. எந்த தடங்கலுமின்றி வாசிக்க முடிந்தது. 'என் அம்மாவின் எழுத்துக்கள்'! நினைத்தபோதே கண்களில் நீர் நிறைந்தது.

## தங்கமகள்!

எதிராஜ் கல்லூரியில் கார்ப்பரேட் செக ரடரிஷிப் படிப்பில், தங்கப்பதக்கத்தை வென்றி ருக்கிறார் ஜகதீசுவரி.



• ஜகதீசுவரி

பிப்ரவரி 18ஆம் தேதி, சென்னைப் பல்கலைக் கழகத்தின் 142 ஆவது பட்டமளிப்பு விழாவின்போது, ஆளுநர், ஜகதீசுவரியின் கழுத்தில் தங்கப் பதக்கத்தை அணிவித்தார். இது குப்புசாமி நாயுடு நினைவுத் தங் கப்பதக்கம்.

எல்கேஜி முதல் ப்ளஸ் டூ வரை சேலம் பாத்திமா கான் வென்ட்டில் படித்த ஜகதீசுவரி, சென்னை எதிராஜ் கல்லூரியில் பி.ஏ செகரடரிஷிப் பிரிவில் சேர்ந்த போதே வி.எல். எதிராஜ் ஸ்காலர்ஷிப் அவருக்குக் கிடைத்தது. இந்தக் கோர்ஸில் 'மிகச் சிறந்த மாணவி' என்று கல்லூரியின் தங்கப் பதக்கத்தை யும் தட்டிக்கொண்டார். இப்போது சென்னைப் பல்கலைக் கழகத்தின் தங்கப்பதக்கம்!

பெங்களூரில் உள்ள இன்ஸ்டிட்யூட் அஃப் ஃபைனான்ஸ் அன்ட் இன்டர்நேஷனல் மேனேஜ் மென்ட்டில் பட்ட மேற்படிப்புப் படிக்கிறார் ஜகதீசுவரி.

"இந்தி தெரியும். பாட்மின்டன் ஆடுவேன். கேரம் ஆடுவேன். சமூக சேவையில் ஆர்வம் உண்டு" என்கிறார்.

"உங்கள் குறிக்கோள் என்ன? அயல்நாட்டு வங்கி வேலையா?"

"சொந்தமாக பிஸினஸ் தொடங்கி அதில் வெற்றியும் புகழும் பெறுவது!"

பெஸ்ட் அஃப் லக், ஜகதீசுவரி!

– நம்பி

# சின்னச் சின்ன சேமிப்பு...
# சேர்க்கச் சேர்க்க செழிப்பு!



இதுவரை நாம் கண்டிராத மறுமலர்ச்சியை அள்ளித் தரும் புதிய பொற்காலம் மலர்ந்து வருகிறது. இப்போது முதல் கி.பி. 4150 வரை அக்வேரியஸ் ஆண்டுகள். திக்குமுக்காடச் செய்யும் முன்னேற்றங்கள், அவற்றை எதிர் கொள்ள உருவாகும் தேவைகள் எனசாதனைகளும் சோதனைகளும் மடை திறந்த வெள்ளமாகப் பரவும் காலம்.

மலரும் அக்வேரியஸ் யுகத்தில் ஒற்றுமையே பிரதான அம்சமாக விளங்கும். சிறிய முயற்சிகள் ஒன்று சேர்ந்து மாபெரும் முன்னேற்றங்களை உருவாக்கும். உங்கள் வாழ்விலும் இந்த ஒற்றுமை உணர்வுதான் பொருளாதார ரீதியாக உங்களை உயர்ந்த நிலைக்கு கொண்டு செல்லும்.

## சீட்டு சேமிப்புத் திட்டங்கள்

சில நபர்கள் ஒற்றுமையுடன் கூடி மாதந்தோறும் ஒரு தொகையைச் சேமித்து வரவும், தேவை வரும் போது மாதாந்திர ஏலத்தில் பங்கு கொண்டு பணத்தைப் பெறவும் உதவும் நல்ல வழிமுறை தான் சீட்டு சேமிப்புத் திட்டங்கள். இதில் நீங்கள் சேமிக்கும் பணமே உங்கள் தேவைக்கு உதவுகிறது. பிறருக்கு நீங்கள் உதவி செய்யவும், அவர்களது உதவியுடன் உங்கள் வாழ்வை செழிப்பாக்கிக் கொள்ளவும் உதவும் சிறந்த முறையே சீட்டு சேமிப்புத் திட்டம்.

இதில் செயல்முறைகள் யாவும் வெளிப்படையாக இருப்பதால் இத்திட்டம் மிகுந்த நம்பகத் தன்மை வாய்ந்தது. குறிப்பிட்ட காலத்திற்குள் அனைவருக்கும் அவரவர் சேமிப்பு திரும்பக் கிடைத்து விடுவதால் இத்திட்டம் மிகவும் பாதுகாப்பானது. உங்கள் அனைவரையும் ஒன்று சேர்க்கும் இணைப்புப் பாலம் தான் சீட்டு நடத்தும் நிறுவனம்.

## ஸ்ரீராம் சிட்ஸ்.

உலகில் உள்ள முதலீட்டு முறைகளிலேயே மிகவும் பாதுகாப்பான சீட்டு சேமிப்புத் திட்டங்களை கால் நூற்றாண்டுக்கு மேலாக திறமையுடன் நடத்தி வருகிறது ஸ்ரீராம் சிட்ஸ்.

1974ல் எளிமையாகத் துவங்கி, இன்று வருடத்திற்கு ரூ.1,800 கோடிக்கு மேல் பணம் பட்டுவாடா செய்யும் அளவுக்கு வளர்ந்துள்ளது. 400க்கும் மேற்பட்ட கிளைகள் மற்றும் 25,000 முகவர்கள் மூலம் அரும் பணியாற்றி, 18.5 லட்சம் குடும்பங்கள் செழிக்க உதவியுள்ள ஸ்ரீராம் சிட்ஸ் உங்களுக்கு சேவைபுரியக் காத்திருக்கிறது. எந்த வகையிலும் இழப்பே இல்லாமல் செழிப்பை மட்டுமே வழங்கக் கூடிய ஸ்ரீராம் சீட்டுத் திட்டங்களில் இன்றே சேருங்கள். வாழ்வில் உயர்வு பெறுங்கள்.







கையளவு சேமிப்பு. கடல் அளவு செழிப்பு.

WORDCRAFTS

**ஸ்ரீராம் சிட்ஸ் தமிழ்நாடு லிமிடெட்**
சுப்ரமணியன் பில்டிங், 1 கிளப் ஹவுஸ் ரோடு,
சென்னை 600002. போன்:8514833-40



**"உன் கணவரை ஏன் இப்படி அவசரக் குடுக்கைன்னு திட்டறே?"**

**"பின்னே என்ன? எனக்குத் தொண்டைக் குழாய் அடைப்பாயிருக்குன்னு சொல்லிகிட்டேயிருக்கறச்சேயே குடு குடுன்னு போயி ப்ளம்பரை அழைச்சிட்டு வந்து நிக்கிறார்!"**

**— ஜி. பாபு**

---

"என் கணவனை என்னிடம் சேர்.
திருமலையில் ஒருத்தி வேண்ட
தாயார் சிரித்தாள் - திருச்சானூரில் தனியாய்"

**ப**ளீரென்று அறைந்தது அந்தக் கவிதை. அங்கதமாக மட்டுமல்லாமல் அம்மாவின் வாழ்க்கையின் நிழலும் அதில் படிந்திருக்கிறதோ? அடுத்த கவிதையைப் படித்தாள்.

"மொட்டையடிக்கும் இடத்திற்கு
கல்யாண கட்டமென்று
பெயர் வைத்தவன் தீர்க்கதரிசி"

திருப்பதியைப் பற்றியும், மொட்டையடிக்கும் இடமான கல்யாண கட்டத்தைப் பற்றியும் ஏற்கெனவே காசியில் ஒரு ஹரிகதா காலக்ஷேபத்தில் கேட்டு அறிந்து கொண்டிருந்ததால், சுவாதியால் இதையும் ரசிக்க முடிந்தது. கூடவே அப்பா வரதட்சணை என்ற பெயரில் அம்மாவின் பிறந்த வீட்டாரைப் படுத்தியிருப்பாரோ? என்ற லேசான சந்தேகமும் வந்தது.

"தலை சுற்ற வைக்கும்
மலைச்சுற்றுப்பாதை
நிச்சயம் கோவிந்தனை அடையலாம்
மேலே போனாலும், கீழே விழுந்தாலும்"

இது புரிந்தாலும் அடுத்த கவிதை அவளுக்கு சுத்தமாகப் புரியவில்லை.

"திருப்பதிக்குடை பெரிதென்றேன்
மறுப்பாய் ஒரு சீறல் - ஆதிசேஷன்"

எழுத்துக்கள் மூலம்தான் அம்மாவையே புரிந்து கொள்ள முயற்சிக்கிறோம்! இப்போதைக்கு வேறுவழியில்லையே?

வேகமாகப் பக்கங்களைத் திருப்பிய போது அவள் கவனத்தைப் பளிச்சென்று கவர்ந்தது "பற" என்ற தலைப்பில் சத்யா எழுதியிருந்த கருத்துக் குவியல்.

"கிளியைக் கூண்டிலடைத்து கொஞ்சும் மனிதனே, உன் கனிவு எனக்குப் புரிகிறது. கிளியிடம் உனக்குப் பாசமுண்டு. கனி கொடுக்கிறாய். பால் கொடுக்கிறாய். பாசம் கொடுக்கிறாய். உன் கையிலேயே கடலையை வைத்துக் கொண்டு தன் கூரிய மூக்கால் கிளி உன் விரல்களைக் காயப்படுத்தி விடுமோ என்ற கவலையில்லாமல் அதைச் சாப்பிட வைக்கிறாய். ஒருநாள் அதன் முகம் சோர்ந்தால் உன் உள்ளம் சோர்ந்து விடுகிறது.

கிளி பேசும்போதெல்லாம் நீ மகிழ்கிறாய். கைதட்டுகிறாய். அது மகிழும்விதமாக உற்சாகப்படுத்துகிறாய். ஆனால் நீ சொல்வதைத் திருப்பிச் சொல்ல மட்டுமே அதற்கு வாய்ப்பு உண்டு என்பது அதற்குத் தெரியாது. தவிர கூண்டை மறக்காமல் மூடி விடுகிறாய். உன் கருணைதான் காரணம்! குஞ்சாக இருந்ததிலிருந்து கூண்டிலேயே வளர்ந்த பறவைக்கு வெளியுலகம் தெரியுமா? வல்லூறுகள், வேடர்கள் என்று எத்தனை ஆபத்துகள்! அதனால்தான் கூட்டுக்குத் தாளிடுகிறாய்.

ஆனால் மனிதா, இதற்கு யார் காரணம்? சிறு பிராயத்திலேயே அதன் அன்னையோடு அது இருந்திருந்தால் தாய்க்கிளி அதற்கு வல்லூறுகளை இனம்காட்டியிருக்கும். அவற்றிடமிருந்து மறைந்து கொள்வது எப்படி என்ற வித்தையையும் கற்றுக் கொடுத்திருக்கும். "இவன்தான் வேடன். இப்படி சாகசம் செய்து தப்பித்து விடு" என்று பாடம் கற்பித்திருக்கும். இவற்றிற்கு வழியில்லாது செய்து விட்டாய்.

இப்போதும் நேரம் முடிந்து விடவில்லை. கூண்டைத் திறந்து விடு. அடிபட்டோ உதைபட்டோ அந்தக் கிளி வான் சுகத்தை அனுபவிக்கட்டும். பறக்க முடியாமல் ஒரு பறவை இருக்க வேண்டாம்."

திடீரென்று ஏதோ உந்துசக்தியால் உந்தப்பட்டவள் போல, "நான் நிச்சயம் பறப்பேன். வான்சுகத்தை உணர்வேன்" என்று சுவாதி உரத்துக் கூறிவிட, சங்கீதா அவளை வியப்புடன் பார்த்தாள்.

(தொடர்ந்து பறக்கும்)

# தஸ்லிமாவாக யார் நடிப்பார்கள்...?

"எழுத்தென்பது ரம்மியப்படுத்த மட்டுமல்ல; ரௌத்ரப்படுத்துவதற்கும்தான்" – இப்படிச் சொன்னவர் தஸ்லிமா நஸ்ரீன்; பிரச்னைக்குரிய பங்களாதேஷி எழுத்தாளர்.

• ஜாவேத் அக்தர், ஷபானாவுடன் தஸ்லிமா!

அண்மையில் மும்பை வந்திருந்த போது, தாதரில் நடந்த, அவரது 'ஷோத்' புத்தக (மொழிபெயர்ப்பு) வெளியீட்டு விழாவில் அவர் இவ்வாறு பேச, கூட்டம் ஆரவாரித்து, குஷிப்படுத்தியது. இங்கே எக்கச்சக்க வரவேற்பு... ஆனால் சொந்த ஊரில் பயங்கர எதிர்ப்பு!

இவரது 'லஜ்ஜா', இஸ்லாமை மிகவும் மட்டப்படுத்தி விட்டதாக அங்குள்ள மதவாதிகளெல்லாம் வெகுண்டெழுந்து, இவரது புத்தகத்தைத் தடைசெய்ததுமல்லாமல் இவர் மீது 'ஃபட்வா'வும் கொடுத்து விட்டனர். 60 நாட்களுக்கு தலைமறைவாகித் தத்தளித்தவர், ஒரேயடியாக பங்களாதேஷை விட்டே ஓடிவிட்டார்.



• எதிர்ப்பாளர்கள்

இஸ்லாமிய ஆட்சி இருக்கும் நாடுகளெல்லாம் இவரை ஓட ஓட விரட்ட, மற்றவை இவருக்கு வெற்றிலைபாக்கு வைத்து அழைப்பது, தனிச்சிறப்பு. இங்கே கூட, பாதுகாப்பு விஷயத்தில் அனாவசிய செலவுகளைக் குறைத்துக் கொண்டிருக்கும் அரசு, முணுமுணுக்காமல் தஸ்லிமாவுக்கு Z plus செக்யூரிட்டி அளித்து விட்டது. மகேஷ்பட், ஜாவேத் அக்தர், ஷபானா போன்றோர் இதற்கெனவே சகன் புஜ்பல்லிடம் விசேஷ தூது சென்றிருக்கின்ற

## ஷாருக்கானுக்கு மிரட்டல்!



திரையுலகப் பெரும் புள்ளிகளை கடத்திப் போய் வைத்துக் கொண்டோ அல்லது கடத்தப் போவதாக மிரட்டியோ கோடிக் கணக்கில் பணம் கேட்பது மும்பை அண்டர் கிரவுண்டு தாதாக்கள் பயன்படுத்திய பழைய டெக்னிக். இப்போது அதிலும் ஒரு புரட்சிகரமான மாற்றம்! பெரும் ஸ்டார்களுக்கு மிரட்டல் வரும். ஆனால் பணம் கேட்க மாட்டார்கள். பதிலாக, அவர்கள் குறிப்பிடும் புரொடியூசருக்கு நயா பைசா வாங்கிக் கொள்ளாமல் ஒரு படம் நடித்துத் தர வேண்டும் என்று கண்டிஷன் போடுவார்கள். மும்பை போலீஸ் தரப்பில் இதை மறுத்தாலும் இது உண்மைதான் என்கிறது பாலிவுட்! இத்தகைய மிரட்டலுக்கு ஆளாகியிருக்கிறார் ஷாருக்கான், என்றுகூட அரசல்புரசலாகப் பேசிக் கொள்ளுகிறார்கள்.

– சி.எம்.

னர்.

ஆனால் இங்கேயுள்ள மதவாத அமைப்புகளால் சும்மா இருக்க முடியுமா? ராஜா அகாதமி, ஜமாத்-இ-இஸ்லாமி ஹிந்த், அகில இந்திய முஸ்லிம் மஹாஜ், சமாஜ்வாதி பார்ட்டி எல்லாம் எதிர்ப்பு தெரிவிக்கக் கூடாரமடித்துக் காத்திருந்தன. மினாரா மஸ்ஜித்திலிருந்து பெண்டிபஜார் வரை, எதிர்ப்பு தெரிவித்து ஊர்வலம் நடத்தப் போவதாக, பல முஸ்லிம் இயக்கங்கள் ஏற்கெனவே அறிவித்திருந்தன. 'தஸ்லிமாவுக்கு ஆதரவு தெரிவிப்பதன் மூலம் எங்கள் மனத்தை இந்த அரசு புண்படுத்துகிறது' என்று பயமுறுத்தின! அதனால் உஷாராக, கண் இமைக்காமல் தஸ்லிமாவுக்குப் பாதுகாப்பு தந்தது காவற்படை. வந்த அன்றிரவே பாரிஸுக்குப் பத்திரமாக விமானமேற்றி விட்டது.

இருந்த சொற்ப நேரத்தில் புத்தகத்தை வெளியிட்டு, பாராட்டுகளைப் பெற்று, கொஞ்சம் உரையும் ஆற்றிவிட்டுப் போனார் தஸ்லிமா. இவரது 'ஷோத்' மனித உறவுகளைப் பற்றியது; முக்கியமாக கணவன் மனைவிக்குள்ளான உறவுகளைப் பற்றியது. மையக் கருத்து அனைவருக்குமே பொதுவானதால் இந்த நூலைத் தேர்ந்தெடுத்து தாம் மொழிபெயர்த்ததாகச் சொன்னார் மராத்தி எழுத்தாளரான அஷோக் ஷஹானே.

'ஃபிதம் ஃபட்' என்ற தலைப்பில் மராத்திய மொழிபெயர்ப்பை வெளியிட்டபோது, ''நான் மத வெறியர்களால் துரத்தித் துரத்தி அடிக்கப்பட்டிருக்கிறேன்; அவர்களுக்குப் புத்தி புகட்டாமல் விட மாட்டேன்; ஆனால் என் வழி தனி வழி - வாதப் பிரதிவாதங்களை அவர்கள் முன் நிறுத்தி, சிந்திக்க வைத்து, சீர்ப்படுத்த முயல்கிறேன். இந்தச் சிறுமதியாளர்கள் திருந்திவிட்டால் போதும்... அர்த்தமுள்ள வாழ்க்கை வாழ வேண்டும் என நினைக்கும் பெண்கள் வாழ்வில் எல்லாம் மறுமலர்ச்சி ஏற்பட்டு விடும்'' என்றார் தஸ்லிமா!

பங்களாதேஷில் தமக்கிருக்கும் எதிர்ப்புடன் தீபா மேத்தாவுக்கு இங்கிருக்கும் வெறுப்பை ஒப்பிட்டு, தீபாவுக்குத் தம் ஆதரவை வெளிப்படுத்தினார். இந்தியாவை வண்ணக் கோலமிக்க பூமியென வர்ணித்து, அதன் ஒளி தன்னை ஆகர்ஷிப்பதாக மெய்சிலிர்த்தார்.

தனிமனித உரிமைகள் நசிந்து வருவதாக குறைப்பட்டுக் கொண்ட ஜாவேத் அக்தர், ''என்ன இருந்தாலும் இந்தியா இந்து தாலிபானாக மாறாது'' என்று உறுதி கூறினார்.

பிரபல அறிஞர் புஷ்பா பாவே, "உங்கள் போராட்டத்தில் நீங்கள் தனியாக இல்லை; நாங்களும் இருக்கிறோம் என்று இங்கு கூடியிருக்கும் கூட்டத்தைப் பார்த்தாலே தெரியும்'' என தைரியப்படுத்தினார்.

உருது எழுத்தாளர் முன்னேற்ற முன்னணி, அக்ஷா ப்ரகாஷன் போன்ற இயக்கங்கள் தஸ்லிமாவை கௌரவித்தன.

மகேஷ்பட், தஸ்லிமாவின் கதையைப் படமாக்கப் போவதாக அறிவித்திருக்கிறார் - 'மேய பேலா' என்ற இவரது சுயசரிதை (இன்னும் எழுதி முடிக்கவில்லை)யை அடிப்படையாகக் கொண்டது. தஸ்லிமாவாக யார் நடிப்பார்களோ? ஷபானா...? நந்திதா...? ஐயோ... 'பூஜாபட்'?...

— ஜெ.ஆர்.

# பாடத் தெரிந்த ஹீரோ வேண்டும்!

'தில் ஸே'யின் 'தையா தையா' பாடலை நம் சேகர் கபூர், பிரபல இசையமைப்பாளர் சர் ஆன்ட்ரு லாய்டு வெப்பருக்குப் போட்டுக் காட்டியவுடன் அவர் 'தையா தையா' என்று குதிக்க ஆரம்பித்து விட்டாராம்! "எங்கே அந்த ரஹ்மான்? இவர் இசையால் உலகையே ஆளப் பிறந்தவரல்லவா? இப்படி இந்தியாவில் அமுக்கி வைத்திருக்கிறீர்களே?" என்று சிலிர்த்து விட்டாராம். அதன் எதிரொலிதான், அண்மையில் மும்பை 'தாஜ்'ல் சேகர், ஆன்ட்ரு - ரஹ்மான் கலந்து கொண்ட ப்ரெஸ் கான்ஃபரன்ஸ்! ஆன்ட்ரு தயாரிக்க, ரஹ்மான் இசையமைக்க, சேகர் மற்ற வேலைகளையெல்லாம் கவனித்துக் கொள்ள, 'பாம்பே ட்ரீம்ஸ்' என்ற இசை நாடகம் உருவாகப் போகிறது! ஒரு முன்னோட்டத்துக்கு மும்பை வந்திருந்தார் ஆன்ட்ரு; இவரும் ஒரு இசை மன்னர்தான். இவரது "Phantom of the Opera" என்ற இசை நாடகம், வசூலில் டைடானிக்கையே விஞ்சியது என்ற ஒரு விஷயம் போதாதா இவரது பிராபல்யத்துக்கு? லண்டன், நியூயார்க் இரண்டிலுமே இவரது 'ஷோ'க்களுக்கு மஹா டிமாண்டுதான்! 'பாம்பே ட்ரீம்ஸு'க்கு' தகுந்த கதாநாயகனுக்கென்று வலைவிரித்துக் கொண்டிருக்கிறார் ஆசியாவில். ஊஹூம்... ஷாருக், ஹ்ரிதிக்கெல்லாம் தேற மாட்டார்கள். ஹீரோவுக்கு நன்றாகப் பாடத் தெரிந்திருக்க வேண்டுமாம். தியாகராஜ பாகவதருக்கு யாராவது பேரப் பிள்ளைகள் இருக்கிறார்களா? ஒரு இசையமைப்பாளருடன், கதாநாயகனையும் உலக அரங்குக்குக் கொடுத்த பெருமை தமிழ் நாட்டுக்கு வரட்டுமே?



## 'ஆன்'மீ(மு)கம்

சங்கராச்சார்யார், அமிர்தானந்தமயி, ஆஷாராம் பாபு, நிர்மலா தேவி- மும்பை ஒரே பக்திக் கடலில் மூழ்கியிருக்கிறது! ஆனால் முன்பெல்லாம் பயத்தை தருவித்த அலைகள் இப்போது சுகமாக வருடிக் கொடுப்பதுதான் இனிய மாறுதல். "குற்ற உணர்வுடன் பயப்படாதீர்கள்; உங்களையும் மன்னித்து பிறரையும் மன்னியுங்கள்" என்கிறார் Stress & Tension Management ஐப் பற்றி உரையாற்றும் நிர்மலா தேவி; ஆஷாராம் பாபு, இளசுகளையும் கவரும் விதத்தில் ஜோக் கடித்து சிரிக்கச் சிரிக்கப் பேசுகிறார்; சங்கராச்சார்யார் 'online'ல் 'chat' பண்ணுகிறார்; 'Planet M' (hi-fi music store) சென்று இசையின் மேன்மையை இளைய தலைமுறைக்கு உணர்த்துகிறார்; பெரும்பாலும் குடிசைப் பகுதிகளிலிருந்தும் 'சால்'களிலிருந்தும் திரட்டப்பட்ட பெண்மணிகளுடன் மேல் தட்டு மங்கையரும் சேர்ந்தமர்ந்து செய்யும் 1008 விளக்குப் பூஜைக்கு வருகை தந்து அருள் உரையாற்றுகிறார். பல சமூக மக்களை, தலைவர்களை ஒன்றுகூட்டி, 'இங்கு சாதிப்போர் இல்லாமலிருக்கிறதா?' என அக்கறையுடன் வினவுகிறார்... ஆன்மிகத்தின் முகமும் காலத்துக்கேற்ப மாறி வருகிறது!

## சனியின் சதி

நிஜங்கள் கற்பனையைக் காட்டிலும் கொடூரம் என்பதற்கு செல்கண்டே குடும்பமே சான்று; காட்கோபாரில், போலீஸ் குவார்டர்ஸில் வசிக்கும் இக்குடும்பத்தின் தலைவி சுபத்ரா ஸ்டவ் வெடித்து, மரித்த அதே வேளையில், அவள் கணவன் ஹேமந்த் ரயிலுக்கடியில் கூழாகிப் போனான். பாழாகிப் போன எதிர்காலத்தைப் பற்றிய சிந்தனையின்றி, ஆறு வயது நிலேஷும், பத்து வயது சுரேகாவும் சிரிக்கும் போது அது விதியின் சிரிப்பாகத்தான் தெரிகிறது. அந்தச் சிரிப்பு மறையாதிருக்க என்ன செய்வதென்று, ஒரு பிரபல தினசரி பொது மக்களிடம் யோசனை கேட்டிருக்கிறது; மும்பையின் அக்னி சர்மாக்கள் இதுபோன்ற அபூர்வ நிகழ்வுகளுக்கு கிரஹ நிலைகள்தான் காரணம் என்கிறார்கள். ஆய்வுப்படி, வருடந்தோறும் நாடெங்கிலும் இதுபோல் மூன்றோ நான்கோ நிகழ்வுகளும், உலக அரங்கில் 12 ட்ராஜிடிகளும், ஒரு பில்லியன் ஜனத்தொகைக்கு ஆறு ஜோடி அவலங்கள் என்ற விகிதாசாரமும் சகஜமாமே? ப்ச்... ஜோடி வருத்தங்கள்!

— ஜெயஸ்ரீ ராஜ்

# உலகளந்த கோலம்

**மி**ருகண்டு முனிவர் மார்க்கண்டேயரின் தந்தை. தென்பெண்ணை நதி பாயும் கிருஷ்ணாரண்யக் காட்டில் அவர் தவம் இயற்றிக் கொண்டிருந்தார்.

மகாபலி சக்ரவர்த்தியின் கதை தான் நமக்குத் தெரியுமே? வாமன உருவத்தில் பகவான் வந்து மூன்றடி மண் யாசித்துப் பெற்றதும் திரிவிக்ரமனாக வானளாவ வளர்ந்து ஒரு காலால் பூமி முழுவதையும் அளந்து மற்றொரு காலால் வான மண்டலம் முழுவதையும் அளந்து விட்டார். "மூன்றாவது அடி எங்கே" என்றதும் மகாபலி தன் தலையைக் காட்ட அவனைப் பாதாளத்தில் அழுத்தி விட்டார்.

மிருகண்டு மகரிஷி வேறு எங்கோ போயிருந்த சமயம் இந்த அவதார காரியம் நிகழ்ந்து விட்டது. அவருக்கு வானமளந்த பகவானின் தரிசனம் கிடைக்கவில்லை. இந்தச் செய்தியைக் கேள்விப்பட்டபோது அவருக்குத் தாம் அந்த அற்புதக் காட்சியைப் பார்க்கவில்லையே என்ற ஆதங்கம் ஏற்பட்டது. திரிவிக்ரமனாகப் பகவானைத் தரிசிக்க வேண்டும் என்ற ஆசையால் பல காலம் மித்ரமதி என்ற தம் மனைவியுடன் கிருஷ்ணபுரிக்கு அருகில் இருந்த காட்டில் தவம் இயற்றினார்.

ஒருநாள் அகால வேளையில் ஒரு முதியவரும் அவருடைய மனைவியும் மிருகண்டு மகரிஷியின் ஆசிரமத்துக்கு வந்தார்கள். அவர்கள் வீட்டில் உணவு ஏதும் இல்லை. வந்தவர்களோ, "பசிக்கிறது. அன்னதானம் செய்யுங்கள்" என்று கேட்கிறார்கள். மிருகண்டு முனிவர் எல்லாக் கணவன்மார்களையும் போலத் தம் மனைவியிடம் போய்,

"இவர்களுக்கு



• சக்கரத்தாழ்வார்



• புஷ்பவல்லி தாயார்

தெய்வ தரிசனம் – 21

ஆனந்தி



• ஸ்ரீதேவி பூதேவியுடன்

எப்படியாவது உணவு சமைத்துப் போடு. இல்லாவிட்டால் நம் தவம் வீணாகி விடும்" என்றார்.

கற்புக்கரசியான மித்ரவதி மகாலக்ஷ்மியைப் பிரார்த்தனை செய்ய பல வகையான உணவு வகைகள் அவளெதிரில் தோன்றின. வயது முதிர்ந்த தம்பதிகளுக்கு இலை போட்டு ஆர்வத்துடன் அமுது செய்வித்தார்கள். மிருகண்டு மகரிஷி அந்தப் பெரியவரை, "நீர் யார்? எங்கிருந்து வருகிறீர்?" என்று கேட்டபோது, விருத்தராக வந்தவர் மறைந்து போய் விட்டார். திடீரென்று ஆகாயத்துக்கும் பூமிக்குமாக ஒரு வடிவம் தோன்றியது. மித்ரவதியும் மிருகண்டு ரிஷியும் பிரமித்துப் பார்த்துக் கொண்டிருக்கும் போதே கையில் சங்கும், சக்கரமும் தாங்கி ஒரு காலை பூமியில் ஊன்றி வலது காலால் வான மண்டலத்தையே அளந்து கொண்டு பகவான் திரிவிக்ரமனாகக் காட்சியளித்தார்!

திருக்கோவலூர் என்று இன்று புகழ்பெற்று விளங்கும் தலத்தின் வரலாறு இது. வைஷ்ணவர்கள் சைவர்கள் இருவருக்கும் முக்கியமான தலம். அப்பர் பெருமானாலும், ஞானப் பிள்ளையாலும் பாடப்பட்ட வீரட்டானேசுவரர் கோவில் இங்கு உள்ளது. வரலாற்றுச் சிறப்புடையது.

மிருகண்டு மகரிஷிக்காக

# பொன்மேனிப் பிரான்



• திரிவிக்கிரமர்

ஸ்ரீகர விமானத்தில் நான்கு கரங்களுடன் காட்சி தந்த திரிவிக்ரமனைத் தரிசிக்க ஆவலுடன் கோவிலுக்குள் சென்றால் முதலில் நாம் தரிசிப்பது நாற்பதடி உயரம் உள்ள கல்தூண். அதன் உச்சியில் கருடாழ்வார் கூப்பிய கரங்களுடன் வீற்றிருக்கிறார். "கருடத்வஜ!" என்று பகவானை அழைப்பது இதனால்தானோ?

வலது பக்கம் ஸ்ரீ வேணுகோபாலரைத் தரிசிக்கிறோம். இவர்தான் ஆதி தெய்வம். இவரைத்தான் கிருஷ்ணாரண்ய மகரிஷிகள் பூஜித்தார்களாம். ருக்மிணி சத்யபாமாவுடன் தரிசனம் தருகிறார். ரோகிணி நக்ஷத்திரத்தில் இவருக்குத் திருமஞ்சனம் உண்டு.

கோவலூரில் கோவலன் குடிகொண்டிருப்பது பொருத்தமே. ஒரு காலத்தில் இது முல்லை நிலமாக இருந்து கோவலர்கள் மாடு கன்றுகளுடன் வாழ்ந்திருக்கலாம். கண்ண பிரானுக்குக் கோவில் கட்டியிருக்கலாம்.

இந்தக் கோவில் மடப்பள்ளியில் ஒரு நாச்சியார் இருக்கிறார். பகவானுக்குச் செய்யப்படும் திருவமுதுகள் சுத்தமாகவும் சிரத்தையாகவும் செய்யப்படுகிறதா என்று கண்ணும் கருத்துமாகப் பார்த்துக் கொண்டிருக்கிறார்!

முதலில் தாயாரை சேவித்து விடுவோம். மூலவர் பூங்கோவல் நாச்சியார். இரண்டு பக்கமும் விளக்குகள் சுடர் விட பட்டாடை அணிந்து கமலக் கரங்களில் பத்ம மலர்கள் ஏந்தி அபயவரத ஹஸ்தங்களுடன் கருணை பொழிகிறார். நாசியில் அணிந்திருக்கும் நத்தும் புல்லாக்கும் பளபளவென்று சுடர் வீசுகிறது.

முன்னால் கம்பீரமாக அமர்ந்திருக்கும் உத்ஸவரோ கஜலக்ஷ்மியாக, திவ்யாபரண வல்லியாக நமக்குக் காட்சி தரும் புஷ்ப வல்லித் தாயார். எல்லாச் செல்வங்களையும் வாரி வழங்கும் திருச்செல்வி இவள். பூமியில் உயிர்ச் சக்தியாய் விளங்கி வித்துக்களை முளைக்கச் செய்து பன்மடங்காகப் பெருக்கித் தருபவள்.

"மலரின் மேவு திருவே நின்மேல்
மையலாகி நின்றேன்" என்று பாரதியார் பாடினாரே. இவளிடம் மையல் கொள்ளாதவர் யார்?

தாயார் சந்நிதிக்குப் போகும் போது தூணில் ஒரு சிறிய ஹனுமார் இருக்கிறார். அவரைக் குட்டி ஹனுமார் என்று அழைக்கிறார்கள்!

பூங்கோவல்நாச்சியார் ஸந்நிதி மண்டபத்தில் சக்கரத்தாழ்வார் ஸந்நிதி இருக்கிறது. பதினாறு கரங்களிலும் ஆயுதங்கள் ஏந்தி யந்திரங்களுக்கு மத்தியில் ஸேவை சாதிக்கிறார். தீ நாக்குகள் எல்லாப் பக்கங்களிலும் மிளிர்கின்றன. மிகுந்த சக்தியுடையவர் இந்த சுதர்சனர். இவருக்குப் பின்புறம் யோக நரஸிம்மர் நான்கு கைகளிலும் சக்கரம் தாங்கி வீற்றிருக்கிறார். சனிக்கிழமைகளில் இந்த ஸந்நிதியில் சிறப்பான வழிபாடுகள் நடைபெறுகின்றன. மனம் தொடர்பான நோய்கள் உள்ளவர்களும், குடும்பத்தில் சண்டை சச்சரவுகளால் துக்கப்படுபவர்களும் இங்கு வந்து வழிபடுகிறார்கள். நெய் விளக்கு ஏற்றி வைத்து சுதர்சன சதகம் படித்தால் எண்ணிய எண்ணியாங்கு எய்துவர் என்கிறார்கள்.

நந்தவன ஆஞ்சனேயரையும் ராமபிரானையும் தரிசிக்க முடியாமல் கதவைப் பூட்டியிருப்பதால் நாம் உலகளந்த பெருமான் சந்நிதிக்குப் போவோம்.

மண்டபத்தில் முதலாழ்வார்கள் ஓவியங்களில் காட்சி தருகிறார்கள். திருக்கோவலூர் வைஷ்ணவர்களுக்கு மிகவும் முக்கியமான தலமாக இருப்பதற்குக் காரணம் இந்த மூவர்தான். பேயாழ்வார், பூதத்தாழ்வார், பொய்கையாழ்வார் மூவரும் சந்தித்த தலம். ஓர் இரவில் மூன்று பேரும் தங்குவதற்கு இடம் கேட்டார்கள். வீட்டுக்

குரியவர், "ஒருவர் படுக்கலாம்" என்று தன் வீட்டுச் சிறிய ரேழியில் இடம்கொடுத்தார். அடுத்தவர் கொட்டுகிற மழையில் வந்த போது, "இருவர் இருக்கலாம்" என்றார். மூன்றாவது நபர் வந்த போது, "மூவர் நிற்கலாம்" என்று சொல்லிக் கொண்டார்கள். இந்த மூன்று பேரையும் அர்த்த ஜாமத்தில் இன்னொருவர் வந்து நெருக்குகிறார். நிற்கக் கூட முடியாமல் தள்ளுண்டு திண்டாடுகிறார்கள். கடைசியில் அடியார்களின் நெருக்கத்தை விரும்பி வந்த பரந்தாமனைக் கண்டுகொள்கிறார்கள். பொய்கையாழ்வார், வையம் அகலாக கடல் நீர் நெய்யாக கதிரவனே விளக்காக ஒளி வீசச் செய்தார். பூதத்தாழ்வார், அன்பே தகளியா ஆர்வமே நெய்யாக ஞானச்சுடர் விளக்கேற்றினார். உடனே பகவான் தரிசனம்தான். பேயாழ்வார், "திருக் கண்டேன் பொன்மேனி கண்டேன்" என்று

**கா**ரைமுத்துப் புலவர், வணங்காமுடி, கமகப்பிரியா, பார்வதிநாதன், ஆரோக்கியசாமி – இவர்களெல்லாம் யாராம்?



அனைத்தும் அமரர் கண்ணதாசனின் புனைபெயர்களே! கண்ணதாசன் என்பதும் புனைபெயர்தான். முத்தையா என்பதே இயற்பெயர்.

**ஆதாரம் : கண்ணதாசன் பதிப்பகம் வெளியிட்டுள்ள குறிப்பிலிருந்து**

**தகவல் : எல். கோபாலகிருஷ்ணன்**

எக்களிப்போடு பாடினார். இந்தச் சம்பவம் நிகழ்ந்த ஊர் திருக்கோவலூர். திவ்யப்ரபந்தம் தோன்றிய ஊர்.

இப்படியெல்லாம் மூவரும் விளக்கேற்றியிருந்தபோதிலும் நான் உள்ளே போன போது ஒரே இருட்டு! மின்சாரம் தடைபட்டு விட்டதால் ஒற்றைத் திரியின் ஒளியில்தான் "திருக் கண்டேன் பொன்மேனிக் கண்டேன் புரிசங்கம் கைக் கண் டேன்" என்று பாடிக் கொண்டே மூல வரைத் தரிசிக்க முடிந்தது. அது என்ன இருள்! கதை நிஜமாகத்தான் இருக்கும் என்று தோன்றியது. பட்டர் திரியைச் சற்றுத் தூண்டி விட்டுத் தூக்கிக் காட்டுகிறார். பூஜைப் பொருள்கள் பகவானின் இடுப்பளவில் ஒரு பலகையில் இருக்கின்றன. அதற்கு மேல் பொன்மேனி தெரிகிறது. புரி சங்கமும் செருக்கிளரும் பொன் ஆழியும் கண்களுக்குப் புலனாகின்றன. 'உலகளந்த பாதம் எங்கே?' என்று கேட்டதும் குனிந்து பலகைக்கு அடியில் கரண்டி விளக்கை நீட்டுகிறார் பட்டர்! இடது பாதம் தரிசனமாகிறது. பிறகு விளக்கைத் தூக்கி வலது பக்கம் பிடிக்கிறார். வலது பாதம் விண்ணை அளந்த நிலையில் நீட்டியிருப்பதைப் பார்க்கிறோம். "மேலே பாருங்கள்" என்று இன்னும் தூக்கிப் பிடிக்கிறார். சுவரில் புடை சிற்பமாகப் பிரும்மதேவர் தந்தையின் பாதத்துக்குப் பாத்யம் சமர்ப்பிக்கிறார். அந்த நீரே ஸஹ்ய மலையிலிருந்து தென்பெண்ணையாக ஓடி வருவதாக ஐதீகம். அதனால் பெண்ணைக்கு கங்கை என்றும் ஒரு பெயர் உண்டு. உலகளந்த பெருமாள் மரத்தாலான சிற்பமாம். தங்கக் கவசம் சாத்தப்பட்டுப் பொன் மேனியாகத்தான் திகழ்கிறார். நூற்றி எட்டு சாளிக்ராம மாலை அணிந்து கொண்டு தசாவதார ஒட்டியாணம் மிளிர அழகாகத் தான் இருக்கிறார். இன்னும் பெரிய பெரிய காசுகள் போல ஒரு மாலை அணிந்திருந்தார். பட்டரிடம் கேட்டபோது, "திருப்பாவை மாலை" என்று சொன்னார். ஸ்ரீ ஆண்டாளுக்கு இப்படி ஒரு யோகம்!

திரிவிக்ரமர் சற்று வித்தியாசமாக இடது கையில் தோளுக்கு மேல் சுதர்சனரைத் தாங்கி வலது கையில் பாஞ்சஜன்யம் பிடித்திருக்கிறார். வலது தோளின் மேல் உயர்ந்த கரம் ஆள்காட்டி விரலைத் தூக்கிப் பிடித்து, "ஒன்று" என்று காட்டுவதாக அமைந்திருக்கிறது. "இரண்டடிதானே அளந்தேன் இன்னொரு அடி எங்கே?" என்று கேட்கிறார் பகவான்" என்றார் பட்டர். இன்னொரு இடது கை, ஊரு ஹஸ்தமாக விளங்குகிறது.

**உ**ற்சவருக்குத் தேகளீசப் பெருமான் என்று ஏன் பெயர் என பலரைக் கேட்டேன். பொருள் விளங்கவில்லை. யாருக்கும் அந்தப் பெயர் ரகசியம் தெரியவில்லை.

தமிழ் லெக்சிகனில் தேகளீ என்றால் இடைகழி என்று பொருள் போட்டிருந்தது. இடைகழியில் நின்ற ஆழ்வார்களுடன் நெருக்கியடித்துக் கொண்டு நின்றவர் இவரே. "கோவலூர் மன்னும் இடைகழி எம் மாயவன்" என்று திருமங்கையாழ்வார் பாடுகிறார். ஆகையால் தேகளீசவரர் என்பதற்கு இடைகழியில் காட்சி தந்த பெருமாள்" என்று பொருள் சொல்லலாம். ஸ்ரீதேவி பூதேவி சமேதராக பக்தர்களுக்கு அருள் செய்கிறார். மூலவர் மரத்தினால் செய்யப் பட்டவராதலால் தேகளீசப் பெருமானுக்

குத்தான் திருமஞ்சனம்.

வாமனராக நடந்து வந்து திரிவிக்கிரமனாக அடி எடுத்து வைத்த பெருமான் இவர்தான்.

இவரைச் சுற்றி ஒரே கூட்டம். வலது பக்கம் மகாலக்ஷ்மி தாயார் திரிவிக்ரம கோலத்தைக் கண்டுகளித்துக் கொண்டிருக் கிறார். பிரஹலாதன், மகாபலி, அவருடைய புதல்வன் நமச்சு சக்கரவர்த்தி, சுக்ராச்சாரியார், மிருகண்டு மகரிஷி, மித்ரபதி, முதல் ஆழ்வார்கள், கருடன் இத்தனை பேரும் சுற்றிலும் நிற்கிறார்கள். ஸந்நிதிக்கு வெளியே அனந்தனும் வாசுகியும் கூப்பிய கரங்களுடன் காவலிருக்கிறார்கள்.

ஸ்வாமிதேசிகன் தேஹளீச ஸ்துதி பாடியிருக்கிறார். கிருஷ்ணபரமாத்மா எப்போதும் இங்கே வசிப்பதாக ஐதீகம்.

**வா**மனர் சந்நிதியைத் தரிசித்துக் கொண்டு அபூர்வமான துர்க்கையைப் பார்க்கிறோம்.

இந்தத் துர்க்கை திரிவிக்கிரமனுக்கே மெய்க்காப்பாளராகத் தன்னை நியமித்துக் கொண்டிருக்கிறாள்!

திருமங்கையாழ்வார் ஒருநாள் கூட வீணாக்காமல் பிரயாணம் செய்திருப்பார் போல். இங்கும் வந்திருக்கிறார். "கற்புடைய மடக்கன்னி காவல் பூண்ட" என்று துர்க்கை காவல் இருப்பதைக் குறிப்பிட்டுப் பாடியிருக்கிறார். 108 வைஷ்ணவ திவ்ய க்ஷேத்திரங்களில் இங்குதான் துர்க்கை இருப்பதாகச் சொல்கிறார்கள்.

**ப**ல கோபுரங்களை உடைய பெரிய கோவில். பல்லவர் காலத்திலிருந்து நாயக்க மன்னர்கள் காலம் வரையில் கோவிலுக்கு அடிக்கடி திருப்பணிகள் நடந்து வந்திருக்கிறது. பொன்னியின் செல்வனில் வரும் திருக்கோவலூர் மலையமானின் ஊர் இது தான். சுந்தர சோழரின் மாமனார் ஊர்! பதினோரு நிலைக் கோபுரமும் இன்னும் சிறிய கோபுரங்களும் இருக்கின்றன. எத்தனையோ திரவியங்களும், நிலங்களும் பல அரசர்களால் திரிவிக்கிரம மூர்த்திக்கு அளிக்கப்பட்டிருக்கின்றன.

ஓங்கி உலகளந்த உத்தமனின் திருமுக மண்டலம் புன்னகையுடன் இருளில் கண்களுக்குப் புலனாகும் போது, "தீங்கின்றி நாடெல்லாம் திங்கள் மும்மாரி பெய்து நீங்காத செல்வம் நிறைந்து பாரத நாடு வளம் பெறப் பிரார்த்திக்கிறோம்.

# ‘நேரா’ சொல்வது



## சுமி சூப்பர்மார்க்கெட்

என்னை மாதிரி இன்ட்ரஸ்டிங்கா column எழுத இன்னொருத்தர் இனிமேதான் பிறந்து வரணும்னு நினைச்சிட்டிருந்தேன். ‘அண்ணாநகர் டைம்ஸ்’ங்கற ஏரியா மாகஸினைப் பார்த்ததும் வடதிசை நோக்கி தலைக்கு மேல ஒரு கும்பிடு போட வேண்டியதாயிடுச்சு.

என்ன ஸ்பான்டேனிடி! என்ன ஸென்ஸ் ஆஃப் ஹ்யூமர்! எவ்ளோ இன்ஃபர்மேஷன்ஸ் தெரியுமா? ‘நாலு மூலை’ங்கற அந்த column, அண்ணாநகர் கொசுப் பிரச்னைலேருந்து கமலஹாசனோட ‘ஹேராம்’ வரைக்கும் சகலமான விஷயங்கள் பத்தியும் பேசறது.

நான் ரசிச்ச ஒரு ஜோக்:

"நீங்கதான் நாயை வித்துட்டீங்களே? அப்புறம் ஏன் ‘நாய் ஜாக்கிரதை’ போர்டை மட்டும் வெச்சிருக்கீங்க?"

"என்ன பண்றது? போர்டை யாரும் வாங்க மாட்டேங்கறாங்களே!"

நித்யஸ்ரீ கச்சேரிக்கு ஓஸி பாஸ் கிடைக்காம அவஸ்தைப்பட்டது, கதிரி கச்சேரில காத்து வாங்கினது, தனக்கு முக்கியத்துவமில்லாத ஃபங்ஷன்களுக்குக் கண்ணதாசன் கண்டிப்பா போகமாட்டார்னு ஒரு பிட் நியூஸ், கமலஹாசன் ஜீயரா நடிக்க ஆசைப்பட்டார்னு ஒரு திடுக் நியூஸ்...

செம ரீடபிளிடி. செம இன்ட்ரஸ்டிங். இப்படியொரு column எழுத, ரா.கி. ரங்கராஜன் ஏன் ஒரு குட்டி மாகஸினைத் தேர்ந்தெடுத்தார்ங்கறதுதான் ஆச்சரியமா இருக்கு.

• • •

இன்னொரு குட்டி மாகஸின் சமீபத்துல பார்த்தேன்... ஆனா பெரிய விஷயம்! தர்டி ருபீஸ்! பட், படிச்சுப் பார்த்துட்டுத் தூக்கிப் போடற ரகமில்லே... பிரிசர்வ் பண்ணி வைக்கற டைப் - ‘ஹெல்த் அப்டேட்’னு இங்கிலிஷ் மாகஸின். ஏதாவது ஒரு உபாதையைப் பத்தி மாசா மாசம் விரிவா எடுத்துச் சொல்றாங்க. அலோபதி, ஆயுர்வேதம், ஹோமியோபதி, உனானி, இயற்கை வைத்தியம்னு எல்லாவித மெடிசன்லயும் அந்த உபாதையை எப்படி அப்ரோச் பண்ணி ட்ரீட்மென்ட் தர்றாங்கன்னு ரொம்ப சிம்பிள் லாங்குவேஜ்ல விளக்கறாங்க.

உதாரணமா, ஜனவரி ’98 (பழைய இஷ்யூ பட் சமீபத்துலதான் பார்த்தேன்) இஷ்யூல ‘தொடர் கவலை’ என்கிற உபாதையைப் பத்தி ரொம்ப யூஸ்ஃபுல் தகவல்கள் வெளியாகியிருக்கு. இங்கிலிஷ்ல anxiety. Anxiety ஒரு நோய் இல்லை. ஆனா மன அழுத்தத்தோட அடையாளம் அப்படின்றதுதான் முக்கியமான பாயின்ட். இதைத் தெரிஞ்சுக்கறது இன்னைக்கு இருக்கற டென்ஷன் நிறைஞ்ச லைஃப்ல ரொம்ப இம்பார்டன்ட்.

மென்டலாகவோ எமோஷனலாகவோ அதிக அழுத்தம் ஏற்பட்டா உண்டாகிற விளைவுதான் தொடர் கவலை. இதனால இரண்டு வித சிக்கல் ஏற்படும். ஒண்ணு - பயங்கரமான பதற்றம் ஏற்படும். இரண்டாவது, அபாயத்தை எதிர்பார்த்து தவிர்க்கற கபாஸிடி காணாம போயிடும்!

சின்ன வயசுலேருந்து அடக்கி வைச்ச ஞாபகங்கள் - உணர்ச்சிகள், இதெல்லாம் கூட பெரியவங்களோட தொடர் கவலைக்குக் காரணமாயிருக்கலாமாம். முக்கியமா நாலு காரணம் சொல்றாங்க:

சூழல் - குடும்பச் சூழ்நிலை, நண்பர்கள், வேலை செய்யற அட்மாஸ்ஃபியர் - இதுல ஒரு பாதுகாப்பு இல்லைன்னா தொடர் கவலை உண்டாகும்.

அடக்கி வைச்ச உணர்ச்சிகள் - முக்கியமா பெர்ஸனல் ரிலேஷன்ஷிப்ல நம்மைச் சரியா வெளிப்படுத்திக்க முடியாத சூழல் இருந்தா இது விளையும். கோபத்தையும் இயலாமையையும் பார்ஸல் பண்ணி வைக்காதீங்க!

உடல் ரீதியான மாற்றங்கள் - லேடீஸுக்கு ப்ரெக்னன்ஸி டைம்லயும் இளம் வயசுக்காரங்களுக்கு பருவமடையற நேரத்துலயும் மூட் சேஞ்சஸ் நிறைய இருக்கும். இது தொடர் கவலையில கொண்டு விடலாம். ஏதாவது பெரிய டிசீஸ் வந்து குணமாகற டைம்ல ஏற்படலாம்.

சில சமயம் ரொம்ப அபூர்வமா - ஹெரிடிடரியாகவும் - குடும்பத்துல யாருக்காவது இருந்ததாலே ஏற்படலாம்.



# தயங்காதீங்க!

தொடர் கவலை வேற; பயம் வேறே... இரண்டையும் போட்டுக் குழப்பிக்கக்கூடாது. பயம் உடனே போயிடும்; ஆனா தொடர் கவலை, யெஸ்! தொடரும்! பட் இதை அடையாளம் தெரிஞ்சுக்கிட்டோமானால் ரொம்ப சுலபமா நாமே இதுலேருந்து விடுபட்டு வந்துடலாம். வளர விடாம இருக்கறது தான் ரொம்ப முக்கியம்.

அப்படி முடியாம போனா ஹெல்ப் கேட்கத் தயங்க வேண்டாம்ன்றதும் இம்பார்டன்ட். முதல்ல சொன்ன அலோபதி, உனானி, ஹோமியோபதி, ஆயுர் வேதம்னு எல்லா சிஸ்டம்லயும் இதுக்கு ஹெல்ப் இருக்கு...

ஹெல்த் அப்டேட் இந்த பிராப்ளத்துக்குத் தர யூஸ்ஃபுல் டிப்ஸ் என்னன்னா:

● பழைய பிரச்னைகளையும் சூழ்நிலைகளையும் மறந்துட்டு தற்காலத்துல கான்ஸன்ட்ரேட் பண்ணுங்க.

● நிஜ பயத்துக்கும் பகுத்தறிவுக்கு ஒத்து வராத பயத்துக்கும் இடையில டிபரன்ஸ் இருக்கு.... அதைப் புரிஞ்சுக்கிட்டு பயம் 'பி'யை விரட்டுங்க.

● நிஜ பயங்களை துணிச்சலோட எதிர்கொண்டா ஜெயிக்கலாம்.

● பாஸிடிவ்வா சிந்தியுங்க. உங்க ஆற்றல்ல நம்பிக்கை வையுங்க...

● உங்களுக்கு எது நல்லதுன்னு நீங்களே செலக்ட் பண்ணி கவனம் செலுத்துங்க. மத்தவங்க அதை டிசைட் பண்ண முடியாது.

● மன அழுத்தத்துக்கு நீங்களே நல்ல மாற்று கண்டுபிடிச்சுக்குங்க. கொஞ்சம் யோசிச்சு முயற்சி பண்ணினா புது பழக்கங்கள் கிடைக்கும்.

● 'நோ' சொல்லத் தயங்காதீங்க. ஆமாம் சாமியா இல்லாம, கொள்கை நம்பிக்கை எல்லாத்தையும் விட்டுக் குடுக்காம காப்பாத்திக்குங்க.

• கவலைக்கு 'நோ!' சொல்லுங்க - ஹெல்த் அப்டேட் படம்!

● முறையா சாப்டு உடம்பை கவனிச்சுக்குங்க.

● உங்களுக்கு சூட் ஆகற முடிவுகளை எடுத்து அதுல உறுதியா இருங்க.

● ஒருவேளை இத்தனையும் செய்தும் சமாளிக்க முடியலைன்னா டாக்டரை கன்ஸல்ட் பண்ணுங்க.

● ● ●

நம்ம சூப்பர்மார்க்கெட்லகூட யூஸ்ஃபுல் மாட்டர்லாம் வருதேன்றீங்க இல்லியா - வெயிட்!

ஜெயா டீவில 'சவால்'னு ஒரு ப்ரோக்ராம் பார்த்தேன். (பப்லு) பிருதிவிராஜ், பத்து பசங்களைக் கூட்டி வெச்சிக்கிட்டு, 'ஒரு நிமிஷத்துல எத்தனை பலூன் ஊதி வெடிக்க வைக்க முடியும்?'னு சேலஞ்ச் பண்ணினார்.

ப்பூ! இதென்ன பெரிய விஷயம்னு தான் அந்தப் பசங்களைப் போலவே நானும் நினைச்சேன்.

பட், யாராலயும் 2-3ஐத் தாண்ட முடியலை.

இதையெல்லாம் முன் கூட்டியே செய்து பார்த்து, ட்ரையலுக்கு விட்ட அந்த 'மகாத்மா' யாருன்னு தெரியலை.

ரொம்ப நாள் முன்னால குமுதத்துல 'பொழுது போகாத பொம்மு'ன்னு ஒரு ஆசாமி இது மாதிரி ஜோலிகள் பண்ணிட்டிருந்தார். இவர், அவரோட கிராண்ட் சன்னா இருக்கணும்!

● ● ●

ஏப்ரல் நெருங்கிடுச்சி. தமிழ்நாடு முழுக்க புத்தாண்டு கொண்டாடும். பட், நம்ம மன்ற உறுப்பினர்களெல்லாம் ஆண்டு விழாவை எப்படிக் கொண்டாடப் போறேன்னு எதிர்பார்த்துட்டிருப்பாங்க.

போன வருஷம் வாசகர் மேளா நடத்தியாச்சு. அது பெரிய இன்ப அதிர்ச்சின்னு பாராட்டாதவங்களே இடையாது.

இந்த வருஷம்?

ஒரு பிளான் இருக்கு. ஆனா இப்ப சொல்றதா இல்லை.

— சுமி

# 'ஸ்பாட்' ரிப்போர்ட்!

ஒவ்வொரு இடத்திற்கும் ஒரு முகவரி உண்டு. எட்டயபுரம் என்றால் பாரதி. மதுரை என்றால் மீனாட்சி. கோடம்பாக்கம் என்றால் சினிமா. இதே வரிசையில் புகழ் பெற்ற(?!) சில சென்னை ஸ்பாட்டுகளுக்கு ஒரு சின்ன விசிட் அடித்தோம்.




• பொதுக்கூட்ட ஸ்பாட்

### *உண்ணாவிரத ஸ்பாட்! (குறளகம்)*

**கட்**சி, இயக்கம், சங்கம் இப்படி எல்லா தரப்பினரும் உண்ணாவிரதப் போராட்டம் நடத்த தேர்ந்தெடுக்கிற இடம். கட்சி அல்லது இயக்கத்தின் ஆள் பலம், பண பலத்தைப் பொறுத்துக் கூட்டம் கூடும். இவ்வளவுதான் நமக்குத் தெரிந்தது. மிச்சத்தை யாரிடம் கேட்கவென்று ஒரு பழ வண்டி பக்கத்தில் போனோம்...

"இங்க உண்ணாவிரதம்ன்னு வெச்சக்குங்க, பழ வண்டியிலேர்ந்து பிரியாணி வண்டி வரைக்கும் எதுவும் போட முடியாது சார். வண்டி போட்டா, கான்ஸ்டபிள்லேர்ந்து ஏட்டு வரைக்கும் எல்லாருக்கும் தனித்தனியா அழணும். ஒரு வண்டிக்காரன் லாபம் கிடைச்சாலும் கிடைக்காட்டியும் இவங்களுக்கு நூத்தி ஐம்பது ரூவா எடுத்து வெச்சிடணும். உண்ணாவிரதம் நடக்குற நாள்ல போலீஸ்காரங்க முகத்துல எள்ளும் – கொள்ளும் வெடிக்கும். வசூல் போயிடுச்சேங்கிற வருத்தம்தான். ஆனா இப்போ ரொம்ப சந்தோஷமா இருக்காங்க. ஏன்னா இப்போ இங்கே உண்ணாவிரதம் நடக்கிறதில்ல. படிக்கிறதுக்கும், பரீட்சை எழுதறதுக்கும் உண்ணாவிரதம் ரொம்ப இடைஞ்சலா இருக்குன்னு, பக்கத்துல இருக்குற சட்டக் கல்லூரி மாணவர்கள் ஹைகோர்ட்ல தடை வாங்கிட்டாங்க. அதனால இப்போ, பனகல் பார்க்குல தான் உண்ணாவிரதம்"

இப்படியாகத் தகவல்களை மூச்சு முட்ட வழங்கிய பழவண்டி முருகனிடம் ஒரு ஆப்பிள் வாங்கினோம். ஐந்து ரூபாய் ஆப்பிளை பதினைந்து ரூபாய்க்கு நம் தலையில்



கட்டிய குஷியில் மறுபடியும் பேசத் தொடங்கினார்.

"ஒரு நாள் அடையாள உண்ணாவிரதம், தொடர் உண்ணாவிரதம், சாகும் வரை உண்ணாவிரதம்ன்னு பல டைப்ல போடுவாங்க. அரசியல் கட்சிகாரங்க உண்ணாவிரதம்ன்னா, மதிய சாப்பாட்டுக்கு டோக்கன் வரும். பத்து பத்து பேரா போயி நைஸா சாப்பிட்டு வந்துடுவாங்க. சாகும் வரை உண்ணாவிரதம் இன்னும் காமெடியா இருக்கும். தொடங்குற தினம் பத்து பேர் இருப்பாங்க. அஞ்சாவது நாள் அஞ்சு பேரா குறைஞ்சுடும்... அப்புறம் இரண்டு. ஒண்ணுன்னு ஆகிடும். ஒரு வருஷத்துக்கு முன்னாடி நெசவுத் தொழிலாளிங்க சாகும்வரை உண்ணாவிரதம் இருந்தாங்க. அதுல ரெண்டு பேர் பத்து நாள் உண்மையிலேயே உண்ணாவிரதம் இருந்து கட்டில்ல சுருண்டு படுத்துட்டாங்க. மறுநாள் அதுவும் முடியல. உடனே பந்தல் வாசல்ல ஒரு பாடை கட்டி வெச்சு, தப்படிக்க (தமுக்கு) ஆரம்பிச்சாட்டாங்க. கூட்டம் கூடிப் போச்சு. போலீஸ் வுடுமா... கைது செஞ்சு ஆஸ்பத்திரில சேர்த்துடுச்சி. இந்த மாதிரி கைது செய்யறவங்களை 'தற்கொலை முயற்சி' செக்ஷன்ல கேஸ் போட்டுடறாங்க."



• பெரிசுங்க ஸ்பாட்

உண்ணாவிரதத்தில் டாக்டரேட் வாங்கின பழவண்டி முருகனின் வாயை அடைக்க முடியாமல் திணறிக்கொண்டிருந்தபோது... இடையில் ஒரு வாடிக்கையாளர் நுழைந்து ஆரஞ்சு என்ன விலை என்று கேட்க... மெள்ள நழுவி நுங்கம்பாக்கம் வந்தோம்.



• குறளகம்

### கார்ட்டூன் ஸ்பாட்! (முஷ்டாக் கார்னர்)

கிளாஸ்நாஸ்ட் முஷ்டாக் அகமது! நுங்கம்பாக்கத்தில் பர்னிச்சர் கடை வைத்திருக்கும் இந்த நாற்பது வயதுக்காரர், அவ்வப்போது தீ பிடித்து எரியும் நாட்டு நடப்புகளை கார்ட்டூனாக வரைந்து தமது கடை வாசலில் வைப்பார். இந்த மாதம் எதைப் பற்றி கார்ட்டூன் வைத்திருக்கிறார். பார்த்து வரலாம் என்று அவருடைய கடை வாசலை அடைந்தால், கார்ட்டூன் பலகை வைக்கும் இடம் காலியாக இருந்தது.



• முஷ்டாக்



• ராஜன்

கோபத்தில் முணுமுணுத்துக் கொண்டிருந்தார் முஷ்டாக் அகமது.

"பின்னே என்ன சார்... ஏழு வருஷமா, இதுவரைக்கும் 800 கார்ட்டூன் வெச்சுருக்கேன். எனக்குத்தான் தலைவலி தர்றாங்க. பர்னிச்சர் வியாபாரம் படுத்துப் போச்சு. இப்போ பாருங்க. வாட்டர் படம் எடுத்தே தீருவேன்னு சொல்ற தீபா மேத்தாவை பத்தி ஒரு கார்ட்டூன் வெச்சேன். 'வாட்டர் படத்தோட முழு ஸ்கிரிப்டையும் நான் படிச்சுட்டுத்தான் அதைப் பத்தி கார்ட்டூன் வைச்சேன். தீபாவுக்கு கருத்துச் சுதந்தரம் உண்டு? எனக்கு இல்லையா? எஃப்-4 போலீஸ் ஸ்டேஷன்ல என்னோட கார்ட்டூனை எடுத்துட்டுப் போயிட்டாங்க! கடை வாசல்ல போலீஸ்காரங்களைப் போட்டுருக்காங்க. நான் விடுவேனா. ஹைகோர்ட்ல கேஸ் போட்



"உங்கம்மாவும் உன் மனைவியும் சண்டை போடுறப்பல்லாம் இடையில யாரோ புகுந்து என்னமோ சொல்லிட்டுப் போறாங்களே... எதுக்கு?"

"அவங்கதான் இந்தச் சண்டையை ஸ்பான்சர் செய்யறவங்க...!"

— சூரம்பட்டி சத்யா முருகவேல்

டிருக்கேன்."

பல பத்திரிகைகள்ல கார்ட்டூனுக்கு ஐடியா கொடுக்க கூப்பிடுறாங்க. பார்னிச் சரை விட்டுப் போக முடியலை என்று சொல்லும் அகமதுவின் மனைவி இரண்டு வருடங்களுக்கு முன்பு சாலை விபத்தில் இறந்துவிட, ஊர் வம்பை விலைக்கு வாங்கி, அடிக்கடி ஸ்டேஷன், கோர்ட் என்று அலையும் இவருக்கு யாரும் பெண் தர மறுக்கிறார்களாம்!

சோகமாய் ச்சு கொட்டிவிட்டு தி.நகர் சென்றோம்.

### பொதுக்கூட்ட ஸ்பாட்! (பனகல்பார்க்)

கடற்கரை சீரணி அரங்கத்திற்கும், பனகல் பூங்காவிற்கும் ஒரே ஒரு வித்தியாசம். அங்கே மெகா மாநாடுகள், இங்கே மகா பொதுக்கூட்டங்கள். மேலும் விவரங்களுக்கு அங்குள்ள டாக்ஸி ஸ்டாண்டில் கிளீனராக இருக்கும் ராஜன் என்பவரிடம் சரணாகதி அடைந்தோம்.

"இருபது வருஷமா இங்கே இருக்கேன். கலைஞர் முதலமைச்சரா வந்தப்புறம்தான் இங்க பொதுக்கூட்டம் போட ஆரம்பிச்சாங்க. வி.பி. சிங், ஜோதிபாசு, என்.டி. ராமராவ்னு வட மாநிலத் தலைவர்கள் இங்கே நிறைய வந்துருக்காங்க. முப்பதுக்கு நாப்பதுல பெரிய மேடை போடுவாங்க. பாண்டி பஜார் வரைக்கும், டியூப் லைட், ஸ்பீக்கர்னு அமர்க்களப்படும். தேர்தல் நேரம்னா ஒரே மேடைய எல்லா கட்சிக்காரங்களும் யூஸ் பண்ணுவாங்க. அந்த சமயத்துல இங்கே ஸ்டாண்டு போட முடியாது. பஸ் போக்குவரத்தையும் பார்கிட் ரோடு வழியா திருப்பி விட்டுடுவாங்க. சில லெட்டர் பேட் கட்சிக்காரங்க, சங்கம் இதெல்லாம் கூட்டம் போட்டா ஐம்பது பேர் உட்கார்ந்திருப்பாங்க. கடைசில தலைவர் பேச வரும்போது அவர் பேச்சை பஸ்ல போறவங்கதான் கேப்பாங்க!

### பெரிசுங்க ஸ்பாட்! (மயிலாப்பூர் சித்ரகுளம்)

நமது அடுத்த விசிட், சித்ரகுளம் டாக்ஸி ஸ்டாண்டு. டாக்ஸி ஸ்டாண்டை ஒட்டி ஒரு பத்திரிகை ஸ்டால்... மாலை தினசரிகள் சுடச் சுட விற்றுக் கொண்டிருக்க... ஆட்டோக்கள் செல்லமாய் முதுகில் முட்டுவது கூடத் தெரியாமல் தீவிரமாய்ப் படிக்க ஆரம்பித்தனர் பலர். மெள்ள மெள்ள ஒருவர் இருவராக, இருவர் நான்காக. நான்கு பத்தாக சூரியன் அஸ்தமிக்க அந்த ஆறு மணிக்கு கூடிவிட்டது ஒரு முதியோர்கள் ஜமா. எல்லோரும் அறுபதிலிருந்து எழுபது வயதிற்குட்பட்ட பெரிய தலைகள். அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றவர்கள்.

"இந்தக் கார்னர்ல அப்போ ஒரு படிப்பகம் இருந்துச்சி. ஓசில சுதேசமித்ரன் படிக்க ஒரு கூட்டம் கூடும்... அப்படி வந்த கல்ச்சர் தான் இது. இப்போதான் நிறைய பேப்பர் வருதே கேக்கவா வேணும்... தினசரி ரகளை தான். வர்ற ஆட்கள்ல இரண்டு க்ரூப்பா பிரிஞ்சு கடுமையா விவாதம் நடக்கும். அரசியல்வாதிங்க இந்த ஜமாவுக்கு மப்டில வந்தா நிறைய ஐடியா கிடைக்கும்... அந்த அளவு விவாதம் நடக்கும்! கிரிக்கெட் சீசனாயிருந்தா அதான் டிஸ்கஷன்.

"ஒரு விஷயத்தை நீங்க கண்டிப்பா போடணும்... இங்க வர்ற எல்லாருமே பி.எஃப், பென்ஷன்னு கஷ்டப்பட்டு சம்பாதிச்ச பணத்தை பல ஃபைனான்ஸ் கம்பெனிகள்ல போட்டுட்டு, தலையில துண்டைப் போட்டு உட்கார்ந்திருக்கோம்... வைத்தியம்கூட பண்ணிக்க முடியல. நாலு வருஷமா கேஸ் நடக்குது. தீர்ப்பு வந்த பாடில்ல... வழக்கை ஸ்பெஷல் கோர்ட்டுக்கு மாத்தி, இரண்டு மூணு நீதிபதி போடணும்னு கேட்டுப் பாத்துட்டோம். அரசாங்கம் எங்க கஷ்டத்தைப் புரிஞ்சுக்க மாட்டேங்குது. வயசான முதல்வருக்கு எங்க வலி எப்படி தெரியாம போச்சுன்னு தெரியலே..." எல்லோருமே அழுது விடும் நிலைக்கு வந்துவிட, கலகலப்பு மாறி சோக ஸ்பாட் ஆகிவிட்டது!

— ஆர்.சி. ஜெயந்தன்

படங்கள்: வெங்கடேஷ்



"ஒரு நடிகன் நல்லா நடிக்கிறான் என்று சொன்னால் அது மற்ற நடிகர்களுக்குப் பொறாமையாக இருக்கும். ஆனால் அஜீத் நல்ல நடிகர் என்பதை இப்போது நான் ஏற்றுக் கொள்கிறேன்" – கமல் இப்படி பாராட்டியதும் அநியாயத்துக்கு வெட்கப்பட்டுப் போனார் அஜீத்!

கலைப்புலி தாணுவின் ''கண்டுகொண்டேன் கண்டுகொண்டேன்'' படத்தின் பாடல் கேசட் வெளியீட்டு விழா சென்னை தேவி தியேட்டரில் கடந்த 15–ம் தேதி நடந்தது.

கேஸட்டை கமல் வெளியிட, பாடகி கல்யாணி மேனன் (ராஜீவ் மேனனின் அம்மா) பெற்றுக் கொண்டார்.

பாடல் காட்சிகள் திரையிடப்பட்டன.

தான் (யாரோ!) எழுதிய குண்டு குண்டான எழுத்துக் கவிதையைக் கசக்கிப் போட்ட ஐஸ்வர்யாராய், ஒரு பிடி நெல்லை வாரி இறைத்தபடி 'கொஞ்சும் மைனாக்களே' என்று பாடி ஆட, நெஜமாலுமே நெஞ்சைத் தைத்தது! ராஜஸ்தான் பாலைவனங்களிலும் கப்பலிலும் தபுவுடன் காதல் கீதம் இசைக்கிறார் அஜீத்! (படத்தில்தான்)

அஜீத்தைப் பாராட்டிப் பேசிய கமல், ஒரு விஷயம் சொன்னார் :

''டைரக்டர் பாலசந்தருடன் தியேட்டருக்குப் போக நேர்ந்தது. அவருடன் செல்வதே பெரிய விஷயம். தியேட்டரில் அவர் முன்னே இருக்க, நான் அவர் பின்னால் பல்லி மாதிரி சுவரோடு ஒட்டி நிற்பேன்.

ஆனால் ரசிகர்கள் அவர் தோள் வழியாகக் கையை நீட்டி என்னிடம், 'ஆட்டோகிராப்' வாங்குவார்கள். நான் தயங்குவேன். 'உன்னை நடிகன்னு ஏத்துக்கிட்டாங்க. கையெழுத்துப் போட்டுட்டு வா'



• கமல்



• ரஹ்மான்

# ''ஸ்லோ பாய்சன்!''

## சொர்க்கத்தில் போஸ்ட் ஆபீஸ் உண்டா?

பெல்ஜியத்தைச் சேர்ந்தவர் மைக்கேல் கார்வக். இவரிடமிருந்து அண்மையில் ஒரு கடிதம் வந்தது. கடிதத்தில் எழுதப்பட்டிருந்த முகவரி என்ன தெரியுமா? ரவீந்திரநாத் தாகூர், நோபெல் பரிசு (இலக்கியம்) பெற்றவர், கல்கத்தா, இந்தியா.



தாகூரின் படைப்புகளைப் படிக்கும் வாய்ப்பு அண்மையில் தமக்குக் கிடைத்ததாகவும், அவை தம்மை மிகவும் கவர்ந்ததாகவும் குறிப்பிட்டிருக்கும் அவர், தாகூரின் கையெழுத்துடன் கூடிய புகைப்படம் ஒன்றையும் தமக்கு அனுப்பி வைக்க வேண்டும் என்றும் கேட்டிருக்கிறார். தாகூர் இறந்த விஷயமே தெரியாமல் எழுதப்பட்ட இந்தக் கடிதம், தாகூர் சம்பந்தப்பட்ட ரவீந்திர பாரதி பல்கலைக் கழக நிர்வாகத்தைக் குழப்பத்தில் ஆழ்த்தியுள்ளது. கடிதத்தைக் கண்டு கொள்ளாமல் விட்டு விடும்படி ஒரு தரப்பினரும், உரிய பதில் தரப்பட வேண்டும் என்று இன்னொரு தரப்பினரும் கூறுகிறார்கள். இதற்கு இடையில், தாகூரின் கையெழுத்திட்ட புகைப்படம் எதுவும் உடனடியாக கைவசம் இல்லாததால், அதனைத் தேடும் முயற்சியில் ஒரு குழு இறங்கியுள்ளது. சரியாப் போச்சு!

— சி.எம்.

என்று பெருந்தன்மையாகப் போயிடுவார். டைரக்டரானாலே அந்த நல்ல மனம் வந்துடுது."

விழாவில் கேரள சுகந்தம்! வெண் பட்டாடை சரசரக்க உலவியது பெண்மணிகள் மட்டுமல்ல; தயாரிப்பாளர் தாணு, கமல், வைரமுத்து அனைவரும் பட்டு வேட்டியில்தான் வந்திருந்தார்கள்! (ராஜீவ் மேனனின் வேண்டுகோளாம்!)

வாழைப்பட்டையில் தோரண அலங்காரம், சிற்ப வேலைப்பாட்டுடன் செயற்கை நுழைவாயில், உயரமான ஐந்து குத்துவிளக்குகள் எல்லாமே வரவேற்றன.

கேஸட்டில் தன் புகைப்படம் வேண்டாம். தன்னைப் பற்றி படம் பேசட்டும் என்று கூறி விட்டாராம் ராஜீவ்மேனன்! இதைக் குறிப்பிட்ட தாணு, "என்னைக் கூப்பிட்டு இந்தப் படத்தைக் கொடுத்த ராஜீவ்மேனன், பல தயாரிப்பாளர்களுக்கும் படம் செய்து கொடுத்து அவர்களைக் கைதூக்கி விட வேண்டும்" என்றெல்லாம் புகழ்ந்தார்!

"ஏ.ஆர். ரஹ்மான் இல்லையென்றால் நான் இல்லை" என்று 'ஜில்'லில் ஆரம்பித்த வைரமுத்து, "அவரது இசையை 'ஸ்லோ பாய்சன்' என்பார்கள். அவர் பாடல் முதலில் புரியாது. பாடலைக் கேட்கக் கேட்க அதற்கு அடிமையாகி விடுவார்கள். ஆதலால் அதை மெள்ள மெள்ளச் சாப்பிடும் அமிர்தம் என்றுதான் சொல்ல வேண்டும்" என்றார். இதையே பாரதிராஜாவும் பாலசந்தரும், 'முதல்ல கேட்கும்போது புரியாத மாதிரிதான் இருக்கும். ஆனால் அடிக்கடி கேட்டு விட்டால் அதை இழக்க மனம் வராது' என்று கூறி ரஹ்மானை புகழ்ந்து தள்ளினர்!

படத்தின் நாயகன் அஜீத் பேசும்போது, 'இந்தப் படத்திற்கு ஹீரோ, நான் என்றார்கள். இல்லை' என்று கூறி நிறுத்திவிட்டு, "ஹீரோ ரஹ்மான்தான். அவர் இசைதான்" என்றார். மற்ற யாருக்கும் கிடைக்காத கைதட்டல்களை ரஹ்மான் மேடையேறும் போது அள்ளிக் கொண்டார்.

தேவி தியேட்டரின் வெளிப்புறம் காத்திருந்த ரசிகப் பெருமக்களுக்கு 'நிகழ்ச்சி தொடங்கிய பிறகும் ரேவதி எதற்காக (யாருக்காக) வெளியிலேயே நின்று கொண்டிருக்கிறார்' என்ற சஸ்பென்ஸ்!

வருத்தமும் உண்டு. 'இப்படி வெயிலிலே காத்துக் கிடந்தும் ஐஸ்வர்யாராய் வரலியே' என்பதுதான் அது. அவர் மட்டுமல்ல, அழைப்பிதழில் குறிப்பிட்டிருந்த மம்முட்டி, அப்பாஸ் ஆகிய நட்சத்திரங்களும் மிஸ்ஸிங்!

— ஜி



"நான் ரெண்டு பந்தியிலும் சாப்பிட்டது வாஸ்தவம்தான்; அதுக்காக, எல்லார் எதிரிலும் மூணாவது பந்தியும் போட்டாச்சுன்னு சொல்லி என் மானத்தை வாங்கணுமா?"

– சீர்காழி வி. ரேவதி

"**வா**ல் அறுந்த பட்டம் போன்று, எங்கள் இனத்தவர், இந்தச் சமுதாயத்தில் அலைகழிக்கப்படுகிறோம்" என்று ஆதங்கப்படுகிறார் சப்னம் மௌசி. மத்தியப் பிரதேச மாநிலம் சோகாபூர் தொகுதியிலிருந்து, அண்மையில் நடந்து முடிந்த சட்டமன்ற இடைத்தேர்தலில் ஜெயித்து எம்.எல்.ஏ. ஆகியிருப்பவர். சுமார் பதினெட்டாயிரம் வோட்டு வித்தியாசத்தில் இவர் ஜெயித்தார் என்பதை விட, இவருக்கு எதிராக களம் இறங்கிய பி.ஜே.பி. மற்றும் காங்கிரஸ் வேட்பாளர்கள் வாங்கிய மொத்த வோட்டு சப்னம் பெற்ற வோட்டுக்களை விடக் குறைவு என்பது கவனத்துக்குரியது.

தேர்தலில் ஜெயித்து, எம்.எல்.ஏ. ஆனதும் நாடெங்கும் பெரும் பரபரப்பை ஏற்படுத்தி விட்டார் இந்த சப்னம். காரணம், நாட்டின் முதல் அரவானி (அலி) எம்.எல்.ஏ. இவர்.

சப்னம் மௌசியின் வாழ்க்கைக்குப் பின்னால் ஏராளமான சோகம் இருக்கிறது. அதை மனம்திறந்து சொல்லத் தயங்கவில்லை அவர் :

"என் அப்பா, மகாராஷ்டிர மாநிலத்தில் போலீஸ் டி.ஐ.ஜி. ஆக இருந்தவர். எனக்கு மூன்று சகோதரிகள், நாலு சகோதரர்கள். இளம்வயதில் என் பெயர் சந்திர பிரகாஷ் சர்மா. இந்தப் பெயரில்தான் நான் பள்ளியில் படித்தேன். இதற்கு மேல் என் இளம் பிராயம் பற்றி எனக்கு வேறு ஏதும் நினைவில் இல்லை. அரவான்கள் கூட்டத்தில் சேர்ந்தபின், சில தடவைகள் என் வீட்டுக்குப் போனேன். ஆனால் அவர்கள் என்னை ஏற்றுக் கொள்ளவில்லை.

"இடையில் என்னை வளர்த்த ஹலீமா என்ற அரவானி, என்னை சென்னைக்கு அழைத்துச் சென்றார். அப்போது எனக்கு வயது பதினெட்டு. அழகாக இருப்பேன். சென்னை ரயில் நிலையத்தில் சில இளைஞர்கள் என்னிடம் வம்பு செய்யவே, நான் போலீசை அழைத்தேன். அவர் என்னை ஒரு பெண் என்று தவறாக நினைத்து விட்டார். 'நான் என்னைப் பற்றி விளக்கியபின், என் மீது



பரிதாபப்பட்டு ஐம்பது ரூபாய் கொடுத்து, நீ மும்பைக்கே திரும்பிப் போய்விடு" என்று ஆலோசனை சொன்னார். அப்போது புறப்படத் தயாராக இருந்த சென்னை - டெல்லி ரயிலில் நான் ஏறிக் கொண்டேன். இது என் வாழ்க்கையில் ஒரு திருப்புமுனை!

# சென்னை தந்த திருப்புமுனை!

"ஊர் ஊராகப் போய் தெருவில் டான்ஸ் ஆடி பணம் சம்பாதித்துக் கொண்டிருந்த காலகட்டத்தில் ஒருவர், என் மீது காதல் கொண்டிருப்பதாய்ச் சொன்னார். நான், என் புகைப்படம் ஒன்றை அவருக்குக் கொடுத்து விட்டு, 'காதல்,

கல்யாணம் எல்லாம் எனக்குச் சாத்தியமில்லை' என்றும், என்னை மறந்து விடும்படியும் சொல்லி விட்டேன். அண்மையில், தேர்தல பிரசாரத்தின்போது, அந்த மனிதரை நான் சந்திக்கும் வாய்ப்பு கிடைத்தது. என் போட்டோவை இன்னமும் பத்திரமாக வைத்துக் கொண்டிருப்பதாக அவர் தெரிவித்தார்.

"நான் வயிற்றுப் பிழைப்புக்காக, நடனம் ஆடிக் கொண்டிருந்த நாட்களில் அனுபவித்த கொடுமைகள் பல. அலகாபாத்தில் ஒரு முரடன் என்னைக் கத்தியால் வயிற்றில் குத்திக் கிழிக்க, என் குடல் வெளியில் வந்து விட்டது. அன்று உயிர் பிழைத்தது கடவுள் அருள்தான்!

"நான் பிறந்தது இந்து பிராமணராக! என்னை வளர்த்தது ஒரு முஸ்லிம். எனக்கு, சப்னம் என்ற நாமகரணம் சூட்டப்பட்டது மும்பை சர்ச் ஒன்றில். குரான் வரிகள் கூட எனக்கு மனப்பாடம்."

அமர் அக்பர் அந்தோணி, டான் போன்ற ஒருசில இந்திப் படங்களிலும் சப்னம் நடித்திருக்கிறார். இவர் மும்பையில் ஷாருக்கானின் வீட்டுக்குப் போன போது, அவர் மனைவி கௌரி, நிறைய பணம் கொடுத்து அனுப்பி வைத்தாராம்.

பத்து வருடங்களுக்கு முன், சமூகச் சேவையில் ஈடுபட ஆரம்பித்தார்.

கடந்த இடைத் தேர்தலின் போது, காங்கிரஸ் அதிருப்தியாளர்கள் தூண்டுதலின் பேரில் தான் தேர்தலில் போட்டியிட முடிவு செய்தார். பகுஜன் சமாஜ் கட்சியின் ஆதரவும் கிடைத்தது. ஜெயித்து விட்டார்!

'நீங்கள் எம்.எல்.ஏ. என்ற முறையில், சாதிக்கப் போவது என்ன?' என்ற கேள்விக்கு, அவரது பதில் : "பெரும் புகழும் அடைய வேண்டும். என் தொகுதி மக்களுக்கு ஏதாவது செய்து, அவர்களிடம் நல்ல பெயர் எடுக்க வேண்டும். இதுதான் என் லட்சியம்!"

— கௌதம்

## புது வகை டினோசர்!

ஸ்டீபன் ஸ்பீல்பெர்க்கின் 'ஜுராஸிக் பார்க்' படம் வந்த போது உலகம் முழுவதும் டினோசர் பற்றிய பேச்சுதான்.

அந்த டினோசர் புல், பூண்டுகளை மட்டும் தின்று உயிர் வாழ்ந்ததாகக் கூறப்



படுகிறது. ஆனால் இறைச்சி தின்னும் புதுவகை டினோசரின் எலும்புக் கூடு ஒன்று சமீபத்தில் கண்டு பிடிக்கப்பட்டுள்ளது.

அர்ஜென்டினாவிலுள்ள பாலைவனத்தில் வட அமெரிக்கா மற்றும் அர்ஜென்டினா புதைபொருள் ஆய்வாளர்கள் நடத்திய சோதனையில்தான் இந்த டினோசரின் எலும்புக்கூடு கண்டுபிடிக்கப்பட்டுள்ளது.

மிகக் கொடூரமாக (எலும்புக்கூடே) காட்சி தரும் இதன் பற்கள் நம்ப முடியாத அளவிற்கு மிகவும் கூர்மையாக நீண்டு இருக்கிறது. இப்போது கை வைத்தால் கூட கையை கிழித்து விடுமாம்! அவ்வளவு கூர்மை!

"இதன் மூக்கும் மண்டை ஓடும் மற்ற டினோசரை விட நீளம். இப்போதே இப்படி கொடூரமாக இருக்கிறதே.. உயிரோடு இது இருந்திருந்து இதை பார்த்தால்...யப்பா!" என்கிறார் இந்த புதைபொருள் குழுவிலுள்ள பிலிப் குரி! இவர் கனடாவிலுள்ள ராயல் டைரல் மியூசியத்தைச் சேர்ந்தவர்.

பல நூற்றாண்டுகளுக்கு முன் வாழ்ந்த இதன் கால்கள் மற்ற டினோசரைவிட சிறியதாக உள்ளது. இதன் மொத்த நீளம் 13.7 மீட்டர். அதாவது 45 அடி!

"டினோசர் வகையிலேயே புதுவகை இனமாக இது இருக்கலாம். இது கூட்டம் கூட்டமாக சென்று வாழும் தன்மை கொண்டதாகத் தெரிகிறது. இதன் பற்களை வைத்துப் பார்க்கும் போது இது அதிக அளவு இறைச்சி தின்னும் தன்மையுடையது தான் என்று நம்ப முடிகிறது" என்கிறார் குரி.

— சலாம்ஜி

# முகூல்

**பிரபஞ்சன்**

**வை**தேகியுடன் அரவிந்தனும், அவள் ஆராய்ச்சிப் பயணத்தில் வந்திருந்தான். அவள்தான் அவனை அழைத்தாள். பேச்சுத் துணைக்கு என்று அழைத்தாள். அவனுக்கும் அவள் செய்கிற பணிகளில் ஈடுபாடு இருந்ததால் ஒப்புக் கொண்டான். பஸ் பிடித்து, ஆறு மணி நேரம் பயணம் செய்து, ஊர் வந்து சேர்ந்தார்கள்.

அங்கிருந்த ஒரு ஓட்டலில் அறை எடுத்து, குளித்து, காலை உணவை முடித்துக் கொண்டு, கோயிலை அடுத்த தென்னந்தோப்புக்குச் சென்றார்கள். நூற்றுக்கணக்கான மரங்கள் அடர்ந்த தோப்பு அது. பிள்ளை வைக்க மண் தோண்டியபோது, சிலைகள் கிடைத்தன. ராமர் சிலை ஒன்றும் சீதை, மற்றும் கருடாழ்வார் சிலைகளும் கிடைத்திருந்தன. சம்பந்தப்பட்ட துறை அதிகாரிக்குத் தகவல் கொடுக்கப்பட்டது. ஜீப் கிடைக்காததால் அவர் வருகை தரத் தாமதமாயிற்று என்று தகவல் வந்தது.

''மண்ணுக்கு மேல இருக்கும் சிலைகளைக் காட்டிலும் கீழே இருக்கிற சிலைகள் அதிகம் போல தோணுது.''

''எதனால் அப்படி?''

''சண்டை, ராஜாக்களின் சண்டை, மதச் சண்டை, மக்களின் சிரத்தைக் குறைவு, வெள்ளப் பெருக்கு எல்லாம்தான் காரணம்.''

ராமர், வில்லேந்திய பெருமாளாக இருந்தார். முகத்தில், புன்சிரிப்பு. விளையாட்டு நேரத்தில், எதிரி தோற்கப் போவதை




அறிந்து, ஜெயிக்கிறவன் சிரிக்கிற சிரிப்பு. அலகிலா விளையாட்டு ஆடுகிற ஆத்மனின் எல்லா ஆத்மாக்களின் கொள்கலனான பெருமிதச் சிரிப்பு. அந்த முறுவல் முகத்தையே பார்த்துக் கொண்டிருந்தான், அரவிந்தன்.

"அரவிந்த்... என்ன மெய்மறந்த நிலை?"

"பரிபாலய, பரிபாலய என்பார், குழைந்துக் குழைந்து எம்.டி. ராமனாதன். இந்த உலகங்களைப் பரிபாலிக்கிறவள், இப்படித்தான் சிரிக்க முடியும் என்று தீர்ப்பு எழுதியிருக்கிறான் சிற்பி."

"அக்காவுக்கு உன்னை ஏன் பிடிக்கிறதுன்னு இப்போ தெரிகிறது."

"எதனாலாம்?"

"நீங்கள் ரெண்டு பேரும் ஒரு அலை வரிசையில் இயங்குகிறீர்கள்" என்றபடி, அவன் கண்களையே பார்த்தாள் வைதேகி.

இப்போது சிலையை நோக்கிக் கொண்டிருந்தான் அவன். அவளைத் திரும்பிப் பார்த்தான்.

"இல்லை வைதேகி. நாங்கள் ரெண்டு பேரும் ஒரு அலைவரிசையில் இயங்க வில்லை. என்னை விடவும் உயர்ந்த நிலை யில் இருக்கிறவர் உன் அக்கா. வானத்தைக் கிழித்துக் கொண்டு, ஏதோ சூரியனோடு யுத்தம் செய்கிற மாதிரி பறக்கிறதே கழுகு, அது போன்றவர் அவர். அவர் இறக்கைகள், கிரௌஞ்சப் பறவையின் இறக்கைகள். தேவ தாரு மரத்தில் முட்டையிட்டு, குஞ்சு பொறிக்கிறவர். நான் கோழி. என் உயரம், அதிகபட்சம் குடிசை உயரம். என் கால்கள் தரையில்தான். உன் அக்கா சமாச்சாரமே வேறு."

வைதேகி, அவன் முகத்தை ஆராய்ந் தாள்.



"என்னோட புதுப்படம் குடும்பத்தோட உட்கார்ந்து பார்க்க வேண்டிய படம்."

"எப்படி?"

"நின்னுக்கிட்டு பார்த்தா மத்தவங்களுக்கு மறைக்குமே!"

– வந்தவாசி பா. ஜெயக்குமார்

"ஏதாவது வருத்தம் உனக்கு இருக்கா, அரவிந்த்?"

அவன் தலையசைத்தான்.

"இல்லை. நிச்சயமா இல்லை வைதேகி. எதுக்கு வருத்தம்? ஒவ்வொரு உயிரும், ஒவ் வொரு வார்ப்படம். இது போல் அது ஏன் இல்லை என்று கேட்பது, ஒப்பிட்டுப் பார்ப் பது அதர்மம். தப்பு. நமக்கு, ஒப்பிட்டு ஒப் பிட்டே ஒரு பொருளின் சிறப்பை அறிய முடிகிறது. மயில் மாதிரி ஏன் வான்கோழி இல்லை என்று கேட்பது முட்டாள்தனம். மயிலைப் பார்த்துத்தான் வான்கோழி சிறகை விரிக்கிறது என்று சின்ன வயசில் ஒரு பாட்டு வரும்."

"ஆமாம்.

*கானமயிலாடக் கண்டிருந்த வான்கோழி*
*தானும் அதுவாகப் பாவித்துத்*
*தானும்தன்*
*பொல்லாச் சிறகை விரிந்து*
*ஆடினாற்போலுமே*
*கல்லாதான் கற்ற கவி... சரியா?"*

"பத்துக்குப் பத்து மார்க்."

அவள் சிரித்து முடித்ததும் அவன் சொன்னான்.

"கல்லாதவன். இளக்காரத்துக்குள்ளா கிறான். அதுக்கு வான்கோழி உதாரணமா? வான்கோழி, அதன் சிறகை வேண்டுகிற போது விரிக்கிறது. அறிவில்லாத்தனத்துக்கு அது உதாரணம் ஆக முடியுமா? இது மாதிரி அன்பில்லாத பாடல்கள் மனித குணத் தையே கொன்று விடும்."

அவன் சொல்வதை அவளால் புரிந்து கொள்ள முடிந்தது. அவன் வார்த்தைகளில் வலி இல்லை. வேதனை இல்லை. பரிதாபம் இல்லை. ஆனால், தெளிவும், சுயமாகச் சிந்தித்துச் சொல்கிற பக்குவமும் இருந்தது.

கோவில் பட்டாச்சாரியார், ஆலய மகிமையை விளக்கினார். பழைய கோவில் என்பதற்கேற்ப, பல இடங்கள் இருண்டு, வவ்வால் வாசனையோடு மிளிர்ந்தது. சுவர்களில் இடம்பெற்ற கல்வெட்டுக்கள், சிதைந்தும், உருமாறியும் கிடந்தன.

கோவிலில் இருந்து வெளிவந்தபோது, ஆசுவாசத்துடன் அவள் சொன்னாள்.

"தப்பித்து வந்தாற்போல இருக்கு. பக்தி கூட அவசியம் இல்லை. நமது புராதன கலைச் சின்னம் என்ற அளவிலாவது இது களைக் காப்பற்ற வேண்டாமா? கலாசாரம், பண்பாடு என்று முழங்குகிறோம். ஆனால், கலாசாரத்தை மட்டும் காப்பாற்ற மாட் டோம்."

பட்டர், மிகுந்த விசாரத்துடன் ஒரு செய்தி சொன்னார்.

அவர், தலைமுறைகளாக கோயில் சேவ கம் பண்ணுகிறவராம். அவர் தாத்தா காலத் தில் இருந்த சுவாமியின் நகைகள், சொத்துகள் இன்று இல்லையாம்.

"எப்படி மறைந்தது?"

"கடவுளா மறைக்க முடியும்?" என்றார் அவர்.

வெளிப் பிரகாரம், வாசல் எங்கும் கடை கள். கடைகள். மனிதர்கள் வியாபாரம் பண்ணிக் கொண்டு, கத்திக் கொண்டு, சூழலை அழுக்காக்கிக் கொண்டு, பணத் துக்கு அலைந்து கொண்டு கிடந்தார்கள்.

அறைக்குத் திரும்பும் போது இருட்டத் தொடங்கியிருந்தது. முகம் கழுவிக் கொண்டு, பக்கத்திலேயே இருந்த, ஒரு சின்ன காப்பி ஓட்டலில் சாப்பிடப் போனார்கள். இட்லி சூடாகவும், மெத்தென்றும் இருந்தது. அதோடு, சட்னி, தேங்காயால் மட்டுமே ஆகி, கலப்படம் அற்று இருந்ததும், திருப்தி யாக இருந்தது.

"ஊர், முற்றும் வியாபாரத்துக்கு அடிமை

யாகாமல் இருக்குங்கிறதுக்கு, இந்த இட்லியும் சட்னியும் சாட்சி'' என்றாள் வைதேகி. இதைக் கேட்டுக் கொண்டு உள்ளே இருந்து வெளியே வந்தாள் ஒரு இளம் வயசுப் பெண்மணி. அவர்களுக்கு முன்னால் வந்து அமர்ந்தாள். சினேகம் தோன்றும்படிச் சிரித்தாள். வைதேகி சொன்னதைக் கேட்டிருப்பாள் போலும்.

''சாப்பாட்டு விஷயம் இல்லீங்களா? அதுல தப்பு பண்ணலாங்களா? நானும், இதையேதான் சாப்பிடறேன். என் பிள்ளைகளும் இதைத்தான் சாப்பிடறாங்க.''

வைதேகி, அந்த அம்மாளைப் பார்த்துச் சொன்னாள்.

''இதுதாங்க அறம்கிறது. அறம் செத்துப் போனா, எல்லாம் அடியோடு அழிஞ்சுடும். உங்கள மாதிரி சில பேர்தான், தர்மத்தைக் காப்பாத்திக்கிட்டு இருக்காங்க.''

அந்த அம்மாள் கூச்சப்பட்டுப் போனாள்.

''ஏதோ எனக்குத் தெரிஞ்சது பாப்பா. கைக் குழந்தையா, நாலு வயசிலயும், ஒரு வயசிலயும் ரெண்டு குழந்தைகளை விட்டுட்டு அவர் போயிட்டார். இது எங்க இடம். சும்மா பூண்டு முளைச்சுக் கிடந்துச்சு. முதல்ல இட்லி கடை போட்டேன். அப்புறமா, கிளப்பா மாத்திட்டேன். ரெண்டு ஆளுக கூலி போக, ஏதோ மானமா கஞ்சி குடிக்க முடியுது. இருங்க, வர்றேன்.''

அந்த அம்மாள் உள்ளே போனாள். இரண்டு தோசைகளுடன் வந்து ஆளுக்கொன்றாகப் போட்டாள்.

''குழந்தைகள் படிக்குதா?''

''படிக்குதுங்க பாப்பா. ஒன்னு மூணாங் கிளாஸ். ஒன்னு ஒண்ணாங் கிளாஸ். ரெண்டுமே பொம்பளப் புள்ளைங்க. அதுகளை நல்லாப் படிக்க வைக்கணும். அது போதும். பணத்தை என்ன பண்ண முடியும்? பணம் இருக்கிறதுங்கிறதுக்காக, ரெண்டு புடைவை, நாலு ஜாக்கெட் போட்டுக்க முடியுங்களா?''

அவர்கள், திருப்தியுடன் பணத்தைக் கொடுத்து விட்டு வெளியே வந்தார்கள்.

''ஒரு பாட்டு நினைவுக்கு வருது. உண்பது நாழி, உடுப்பது நான்கு முழம்னு அது தொடங்கும். எவ்வளவு பணம் இருந்தாத்தான் என்ன? நாலு படி அரிசி ஒருத்தரால திங்க முடியுமா? நாலு வேஷ்டி கட்டிக்க முடியுமா? தேவைகள் கொஞ்சம் தான். அந்த அம்மா வார்த்தையும், அந்தக் கவி வார்த்தையும் ஒன்னா இருக்கில்லையா?''

அரவிந்தன் சொன்னான்.

''மேதைகளும், சராசரி மனிதர்களும் ஒன்று சேர்ற இடம், சந்திக்கிற இடம் ஒன்றாகத்தான் இருக்கும். சத்தியம், ரொம்ப சாதாரணமாத்தான் இருக்கும். அதோடு, அது வெளிப்படையாகவும் இருக்கும். ரொம்ப எளிய மக்கள்னு நாம் நினைக்கிறவங்க. நம்மை விடத் தெளிவாக, தைரியமா வாழ்க்கையைப் பார்க்கிறாங்கன்னு தெரியுது. அந்த அம்மா. கணவன் இல்லாம போன பிறகு, குழந்தைகளுக்காக எப்படி நேருக்கு நேரா துன்பத்தைச் சந்திக்கிறாங்க, பார்.''

அறைக்குத் திரும்பி, பால்கனியில் நாற்காலியைப் போட்டுக் கொண்டு அமர்ந்தார்கள். நிலா இல்லை. வெறும் வானமும், அழகாகவே இருந்தது. அழகற்ற பொருள் என்று எதுதான் இருக்கிறது?

காற்று அழுத்தமாக வீசியது. பறந்த முடியை வாரிச் சுருட்டிக் கொண்டாள், அவள்.

''ஒருவழியாகப் பாரதி அக்காவோட பிரச்னை தீர்ந்தது.''

''அப்படியும் சொல்ல முடியாது, வைதேகி. வெளிநாடுகள்ள, இந்தப் பிரச்னை அவ்வளவு பெரிசா இல்லை. நம் நாட்டுல, விவாகரத்து பண்றவங்க வாழ்க்கை, அதுக்குப் பின்னாலும் கஷ்டம் தருது. குழந்தையைப் பார்க்கணும்னு அவன் வருவான்.

---

**'மனித நாய்' என்ற பெயர் கொண்ட இது உண்மையில் ஒரு ரோபோ! இதற்கு மூளையும் பொருத்தப்பட்டுள்ளது. இதனால், குழந்தையைப் போன்ற அறிவு உண்டு. மனிதர்கள் சொல்லுவதை இதனால் புரிந்து கொள்ள முடியும். இந்த வருடக் கடைசியில் இந்த ஜப்பானிய பொம்மை, விற்பனைக்கு வருகிறது. விலை சுமார் பதிமூன்றாயிரம் ரூபாய்!**

**– சி.எம்.**





லண்டன் ஃபேஷன் ஷோ ஒன்றில் ஒரு மாடல் இந்த உடையை அணிந்து வலம் வந்தார். இடுப்பைச் சுற்றி படிகள் கட்டிக் கொண்டது போலில்லை!

— சி.எம்.





அல்லது இவள் போவாள். கல்யாணத்துல, அப்பா யார்னு ஏதாவது ஒரு அச்சுப்பிச்சு கேட்டு வைக்கும். தொடர்ந்து சங்கடம் தான்."

அவள், தரையைப் பார்த்தபடி உட்கார்ந்திருந்தாள்.

"அக்காவுக்கு ஏற்றபடி ஏதாவது துணை கிடைச்சா?"

"தொடர்ந்து, இந்தப் பிரச்னையை அவங்க சந்திக்க வேணுமா, வைதேகி?"

"எமோஷனலா ஒரு துணை...?"

"அது அவசியப்படும்போது, அதுக்கொரு வாசல் திறக்கும். நாமா ஏன் கற்பனை பண்ணிக்கணும்?"

"திறந்துக்குற சாமர்த்தியம் அக்காவுக்கு இல்லை."

"இருவேறு, தெள்ளியர் - ஆதலும் வேறுன்னு சொல்லுவாங்க."

"அக்காவை நினைச்சா..."

அவள் முடிக்கும் முன் அவன் சொன்னான்.

"எனக்கு வருத்தம் இல்லை."

"வருத்தம் இல்லையா? ஏன்?"

"எஸ்.எஸ்.எல்.சி. முடிச்சு, +2. அப்புறம் டிகிரின்னு இருக்கிற மாதிரி, வயசுக்கு வர்றது, கல்யாணம் பண்ணிக்கறது, பிள்ளை பெத்துக்கிறதுன்னு இருக்கிறது. எந்த அளவு சரி? தனி மனுஷரோட சுதந்திரத்தை நாம் ஒப்புக் கொள்ளணும். விவேகானந்தரைப் பார்த்து, ஏன் சார், கல்யாணம் பண்ணிக்கலைன்னு நாம் கேட்கிறது இல்லை. பாரதியை மட்டும் ஏன்?"

வைதேகி சிரித்தாள்.

"தங்கள் நியாயத் தராசு சரியாகவே அளக்கிறது" என்றாள் நாடக பாணியில்.

விடியும் முன்பு அவர்கள் ஊருக்குப் புறப்பட்டார்கள்.

"ஒரு நிமிஷம் காத்திரு அரவிந்த்."

"ஏன்?"

"புதுப் புடைவை ஒன்னு இருக்கு. அந்த ஓட்டல்கார அம்மாவுக்குக் கொடுத்துட்டு வந்துடறேன்."

"ரொம்ப அருமையான மனசு உனக்கு. கட்டாயம் செய்."

அவள், போய்த் திரும்பினாள்.

"என்ன சொன்னாங்க?"

"ரொம்ப சந்தோஷம் அவங்களுக்கு."

"அதை விடவும் உனக்குத்தான்."

"நிச்சயமா."

விடிந்து வெயில் பரவும் வேளையில், அவர்கள் ஊர் திரும்பினார்கள். ருமி அவர்களுக்காகக் காத்திருந்தான்.

"நீ வருவேன்னு எனக்குத் தெரியும். நான் சாப்பிடாமே உங்களுக்காகக் காத்திருக்கேன்."

"எதுக்காகக் காத்திருக்கணும்? பசிச்சா சாப்பிட வேண்டியதுதானே?"

"உன்னை விட்டுச் சாப்பிட முடியலை."

"அதுதான் ஏன்?"

"அதுதான் சினேகம், அன்பு, பாசம்" என்றவன் தொடர்ந்து, "உன் கண்ணில் நீர் வழிந்தால் என் நெஞ்சில் உதிரம் கொட்டுதடி" என்று பாடினான்.

வைதேகி சிரித்தாள்.

"என்னோடு, உடன்கட்டை ஏறப் போகிறவன் ருமி" என்றாள்.

"அப்படியா ருமி சார்?" என்று கேட்டான், அரவிந்தன்.

"ஆமாம். அந்தக் கட்டையோடு, இந்தக் கட்டையும் சேர்ந்துதானே எரியணும்?" என்றான்.

"நான் இன்னிக்கே புறப்படணும்?"

"ஏன்?"

"நாளைக்கு ஒரு நேர்முகத் தேர்வு. அப்பா தந்தி கொடுத்திருக்காங்க..."

"வெரிகுட். புறப்படு. நானும் வர்றேன். எனக்கும் வேலை முடிஞ்சது" என்றாள் வைதேகி.

"நான்தான் தனி" என்றான் அரவிந்தன்.

(தொடரும்)

# கிணற்றுக்குள்

● ரின்சாய் என்கின்ற துறவியைக் காண ஒருவன் வந்தான். வரும் வழியில் ஏதோ ஒரு எரிச்சலூட்டும் சம்பவம் நடந்திருக்க வேண்டும், அவன் வேகமாகத் தன்னுடைய காலணியைக் கழற்றிச் சுவரில் எறிந்துவிட்டு,

ரின்சாய் முன்வந்து மண்டியிட்டு வணக்கம் செலுத்தினான்.

அதற்கு ரின்சாய் "நான் ஒருக்காலும் உன்னைச் சீடனாக ஏற்றுக் கொள்ள முடியாது" என்றார்.

"வரும்போது ஏன் நீ இந்தக் கதவைத் தள்ளிவிட்டு உன் காலணிகளை உதறி எறிந்தாய்! முதலில் உன் காலணிகளிடமும், கதவிடமும் சென்று மன்னிப்புக் கேட்டுவிட்டு வா; பின்னர் நான் உன்னை அனுமதிக்கிறேன்" என்று சொன்னார்.

வந்தவன், ஒரு மிகப் பெரிய துறவி இப்படிப் பேசுகிறாரே, பகுத்தறிவுக்குச் சிறிதும் சம்பந்தம் இல்லாத ஒரு செயலைச் செய்ய வற்புறுத்துகிறாரே என்று நினைத்தான்.

"நான் எதற்கு என் காலணிகளிடமும், கதவிடமும் மன்னிப்புக் கேட்க வேண்டும்? முதலில் அவற்றுக்கு உயிர் இருக்கிறதா? நான் மன்னிப்புக் கேட்டால் அவை புரிந்து கொள்ளத்தான் போகின்றனவா? உயிரற்ற அவற்றிடம் மன்னிப்புக் கேட்பதால் என்ன பயன்?" என்று எதிர்க்கேள்வி கேட்டான்.

அதற்கு ரின்சாய் "உண்மைதான். உயிரற்றவைதான் அவை. ஜடப் பொருட்கள்தான் அவை. ஆனால் நீ உன் கோபத்தை அந்த ஜடப் பொருட்களிடம்தானே காண்பித்தாய்? அவற்றைத்தானே நீ உதறி எறிந்தாய்? அப்போது ஜடப் பொருட்களாக அவை உனக்குத் தெரியவில்லையா? நீ அவற்றிடம் மன்னிப்புக் கேட்டுத்தான் ஆக வேண்டும்" என்றார். அவன் தன் தவறை உணர்ந்தான்.

● ஒரு புத்த துறவி பாறைகளைத் தூக்குவதில் மிகத் தேர்ச்சி பெற்றவர்.

அவர் உடலைப் பார்க்கும்போது பலசாலி என்று யாரும் நம்ப மாட்டார்கள்.

ஆனால், அவர் ஒவ்வொரு பாறை தூக்கும்போதும் அந்தப் பாறையின் 'காதுகளில்' உதடுகளை வைத்துப் பேசுவார்– "நான் உன்னைத் தூக்கப் போகிறேன். சற்று ஒத்தாசை செய்" என்று. அப்படி அவர் சொல்லிவிட்டு அந்தப் பாறைகளைத் தூக்கும்போது எல்லாம், அவை கனமிழந்து பஞ்சுபோல ஆகிவிடும்.

கோபம் இருந்தால் மலர்கூடச் சருகாகி விடும்.

நம் மன நிலையைப் பொறுத்துத்தான் ஜடப் பொருட்கள் கூட வளைந்து கொடுக்கின்றன.

கோபமே வராமல் பார்த்துக் கொள்கிற மனநிலை ஏற்பட்டால், அவனுக்குள் இருக்கும் புத்தர் அகப்படுவார்.

● ரிச்சர்டு மெக்ளீன் கூறும் ஓர் அழகிய கதை உண்டு.

ஒரு தலைமைச் சிற்பி பல விதமான பளிங்குக் கற்களைச் சுரங்கத்தில் பரிசோதித்தார்.

அவருடைய அனுபவத்தில் ஒவ்வொரு கல்லுக்கும் ஒரு வடிவம் இருப்பதை அவர் அறிந்திருந்தார். அதன் வடிவத்தைக் கண்டு கொண்டு அதைக் கல்லிலிருந்து விடுவிப்பது தான் சிற்பத்தின் ரகசியம்.

ஒவ்வொரு கல்லைப் பார்க்கும்போதும் மகிழ்ச்சியால் கத்துவார்.

ஆஹா! இதில் ஒரு வீரன் ஒளிந்திருக்கிறான்.

ஆஹா! இதில் ஒரு துறவி ஒளிந்திருக்கிறார் –

ஆஹா! இதில் ஒரு நடன மங்கை இருக்கிறாள் என்று அவர் கூவும்போது கற்களுக்குக் கூட கர்வம் வந்து விடும்!



அவர் 'புத்தருக்கான' கல்லை நாற்பது வருடமாகத் தேடினார். உலகத்தில் உள்ள புகழ் பெற்ற சுரங்கங்களில்கூட அது அவருக்கு அகப்படவில்லை. அந்த வருத்தத்தில் ஒரு புத்தத் துறவியைப் பார்த்து 'எங்கே அந்தக் கல் கிடைக்கும்?' என்று கேட்டார்.

"அந்தத் துறவி அதில் ஒன்றும் பிரச்னையில்லை" என்றார்.

"எங்கு கிடைக்கும் என்பதை உங்களால் சொல்ல முடியுமா? நான் புத்தரை விடுவிக்கக் கூடிய கல்லைக் காட்ட முடியுமா?"



# த்தர்!

"அங்கே!" என்று துறவி ஒரு கிணற்றைக் காண்பித்தார்.

மகிழ்ச்சியுற்ற சிற்பி ஓடிப் போய் அந்தக் கேணியை எட்டிப் பார்த்தார்.

அதில் அவர் உருவம் தெரிந்தது!

ஆம்! நம்மிடம் இருக்கும் புத்தரைத் தேடிப் பிடிப்பதும் ஒரு சிற்பக் கலைதான் - நாம் கல்லாக இருக்கிறோம்.

நம்மிடம் இருக்கும் கோபம், பதற்றம், ஆசை ஆகியவற்றை நீக்கும்போது அந்தச் சிற்பம் அகப்படுகிறது.

● ஒரு மீனவ இளைஞனைப் பார்த்துக் கேட்டார்கள்.

"கடல் இவ்வளவு ஆபத்தான இடமாயிற்றே. எப்படி துணிச்சலுடன் நீங்கள் மீன் பிடிக்கப் போகிறீர்கள்?"

"என்ன செய்வது. நாங்கள் மீன் பிடித்தால்தான் உணவு உண்ண முடியும்."

"அது சரி, உன் தந்தை எப்படி இறந்தார்?"

"அவர் மீன் பிடிக்கச் செல்லும்போது புயலில் இறந்தார்."

"உன் தாத்தா?"

"என் தாத்தா ஒருமுறை அலையில் மாட்டிக்கொண்டு கடலுக்குள் இழுத்துச் செல்லப்பட்டு விட்டார்."

"இவ்வளவு நடந்த பிறகும் எப்படி உன்னால் கடலுக்கு மீன் பிடிக்கச் செல்ல முடிகிறது?"

அவன் திரும்பக் கேட்டான். "உங்கள் தந்தை எப்படி இறந்தார்?"

"நோய்வாய்ப்பட்டு படுக்கையில்."

"உங்கள் தாத்தா?"

"அவரும் படுக்கையில்."

"உங்கள் கொள்ளுத் தாத்தா?"

"அவரும் படுக்கையில்."

"இப்படிப் பரம்பரையே படுக்கையில் இறந்திருக்கிறார்கள். அப்புறம் எப்படி தினமும் தைரியமாக நீங்கள் படுக்கப் போகிறீர்கள்?"

● ஒருவர் தான் வளர்த்து வந்த 'டாபர்மேன்' நாய்க்கு நோய் என்று மருத்துவரிடம் காண்பித்தார். அவர் எழுதிக் கொடுத்த மருந்தைத் தினமும் மூன்று வேளை நாய்க்குக் கொடுக்க வேண்டும்.

டாபர்மேன் - மிகுந்த கோபம் கொண்ட நாய்.

கோபம் வந்தால், அதைச் சீண்டினால் வளர்த்தவர்களையே பல்லால் கையொப்பமிட்டு விடும் - தன் வாலையே தன் மேல் திணிக்கப்பட்டதாகக் கருதிக் கடித்துக் கொள்ளும் என்பதால், சின்ன வயதிலேயே வாலை ஒட்ட வெட்டி விடுவார்கள்.



கடுமையான நாய் என்ற காரணத்தால் நாயின் சொந்தக்காரர் இரண்டு பேரை இரண்டு பக்கமும் பிடிக்கச் செய்து, வாயைத் தான் கெட்டியாகப் பிடித்துக் கொண்டு மருந்தை ஊற்றுவார்.

அது துள்ளும்போது, அதை அமுக்குவது மிகுந்த சிரமமாக இருந்தது.

மூன்றாவது நாள், எவ்வளவு அமுக்கியும் அது துள்ளியதில் ஒரு துளி மருந்து கீழே ஊற்றி விட்டது. அந்த நாயே பிறகு அதை நக்கிக் குடித்தது!

அப்போதுதான் அவர்களுக்குப் புரிந்தது. அந்த டாபர்மேன் மருந்து பிடிக்காமல் முரண்டுபிடிக்கவில்லை. அது கொடுக்கப்படுகிற முறை பிடிக்காமல்தான் முரண்டு பிடித்தது என்கிற விவரம்!

**வெ. இறையன்புவின் 'ஏழாவது அறிவு' நூலிலிருந்து எடுக்கப்பட்ட சில கதைகள். வெளியீடு: தாகம், 8. மாசிலாமணி தெரு, சென்னை - 17.**

# 61

# குறையொன்று

**ச**ர்வ பிராயச்சித்த மஹாமந்திரம் என்று பெயர். யக்ஞத்தையெல்லாம் முடித்து கடைசியில் பிராயச்சித்த ஹோமம் என்று பண்ணுவார்கள். அப்போது இந்த மந்திரங்களெல்லாம் வரும். தப்பாக, குறைவாக நாம் பண்ணியதெல்லாம் தோஷம் ஏற்படுத்த வேண்டாம் என்று பிரார்த்திக்கும் இந்த மந்திரம். தெரிந்தோ, தெரியாமலோ புத்தி பூர்வமாகவோ அபுத்தி பூர்வமாகவோ தப்பு பண்ணியிருந்தால் அதையெல்லாம் பொறுத்தருள வேண்டும் என்று கேட்கும்.

அக்னியிலே சுசியான அக்னி அசுசியான அக்னி என்றெல்லாம் கிடையாது. அக்னி சுசியானவன். அக்னிர் மாணவ: என்று சொன்னால் என்ன அர்த்தம்? 'பையன் அக்னி போன்று ஜொலிக்கிறான்' என்றுதானே உவமை சொல்கிறோம். நம்மை முன்னுக்கு அழைத்துச் செல்லக்கூடியவன் அந்த அக்னி பகவான்.

அப்படிப்பட்ட அக்னியைப் பார்த்துச் சொல்கிறாள் அந்தப் பெண்: குழந்தை அக்னியிடம் போவதைப் பார்த்த பின்னரும், மடியில் தூங்கும் பர்த்தாவை எழுப்பாமல் அமர்ந்தபடியே கைகூப்பிச் சொல்கிறாள்:

"ஹே அக்னே! எல்லாம் உனக்குத் தெரியும். என்னுடைய கடமையிலே நான் இருக்கிறேன். என்னுடைய குழந்தையைக் காப்பாற்றுவாயோ, எரிப்பாயோ – அது உன் பொறுப்பு' என்று கைகூப்பி விட்டாள்.

அக்னி பகவான் பார்த்தான். நடுநடுங்கிப் போய் விட்டான். அக்னியையே கொளுத்தக்கூடிய அக்னி உலகத்திலே உண்டா? என்று ஒரு கேள்வி கேட்டால், நெருப்பையே கொளுத்தக்கூடிய நெருப்பு பாதிவ்ருத்யம் என்கிற நெருப்புதான். கற்புக் கனல்! அது கொளுத்தியதும் நடுங்கிப் போய் விட்டான் அக்னி பகவான்.

நாம் இந்தக் குழந்தையைச் சுட்டோமானால் அவளிடத்தில் இருக்கிற பாதிவ்ருத்யம் நம்மை அழித்து விடுமே என்று நடுநடுங்கிப் போய் அந்தக் குழந்தை கையை வைத்தவுடனே, மாறிப் போனான்! சந்தனக் குழம்புக்குள்ளே கையை வைத்தால் எப்படி ஜிலுஜிலுவென்று இருக்குமோ, அந்த மாதிரி நெருப்பை எடுத்து மேலே போட்டுக் கொள்கிறது குழந்தை. நெருப்புடன் விளையாடிக் கொண்டிருக்கிறது.

பர்த்தா தூங்கி எழுந்து பார்த்தார். குழந்தை அக்னியோடு விளையாடிக் கொண்டிருக்கிறது. இவளானால் கைகூப்பிக் கொண்டிருக்கிறாள்! நடுங்கிப் போய் விட்டார் அவர்!

ஆகையினாலே, பாதிவ்ருத்யம் என்பது ஆபரணங்களைக் காட்டிலும் உயர்ந்த ஆபரணம் பதிதான் என்று கொண்டாடுகிறது.



**அ**ப்படிப்பட்ட பாதிவ்ருத்யா தர்மத்திலே நின்றவள் சைப்யை என்பவள் – சததனு மகாராஜாவின் மனைவி என்று சொன்னேன்.

எந்த கிருஹத்திலே ஸ்த்ரீகள் பூஜிக்கப்படுகிறார்களோ அந்த கிருஹத்திலே மஹாலக்ஷ்மி வாஸம் பண்ணுவாளாம். ஸ்த்ரீகள் பூஜிக்கப்படுகிறார்

முக்கூர் லக்ஷ்மிநரசிம்மாச்சார்யார்



கள் என்றால், மனையிலே கோலம் போட்டு அவர்களை அமர்த்தி, "ஓம் பார்யாயை நம: ஓம் தர்ம பத்னியை நம:" என்று அர்ச்சனை பண்ணப்படுவதாக அர்த்தமில்லை.

ஸ்த்ரீ தர்மம் – ஸ்த்ரீகள் பண்ண வேண்டிய தர்மமெல்லாம் கடைப்பிடிக்கவில்லையானால் அந்த கிருஹத்திலே பண்ணக்கூடிய காரியமெல்லாம் விரயமாகும்.

அந்த ஸ்த்ரீ தர்மத்தினால்தான் கிருஹத்தின் சுபாசுபங்கள் நிச்சயிக்கப்படுகின்றன. ஸ்த்ரீ தர்மம் முக்கியம். சததனு தர்மத்தை அனுஷ்டிக்கிறான் என்றால் அதற்கு அவன் பத்னி காரணம். அம்பரீஷன் அனுஷ்டித்தான் என்றால் அதற்கு அவன் பத்னி காரணம். குசேலரைப் பாருங்கள்... அவருடைய தர்ம பத்னி போல கிடைப்பாளா? ஹரிஸ்சந்திரனின் தர்ம பத்னி.... – இப்படி சாஸ்திரத்திலும் புராணங்களிலும் நாம் பார்த்தோமானால் நிறைய பேர்! அவர்களையெல்லாம் நாம் தியானம் பண்ணினாலே நல்ல குணம் நம்மிடத்திலே வரும்.

# ல்லை

**ப**திவ்ருதையான சைப்யை சததனு இருவரும் விடாமல் ஏகாதசி விரதத்தைக் கடைப்பிடிக்கிறார்கள்.

கங்கையிலே ஸ்நானம் பண்ணிவிட்டு, அந்த ஈர வஸ்திரத்தோடு அரண்மனை நோக்கி வந்துகொண்டிருக்கிறார்கள்

இரண்டு பேரும்.

அப்போது சததனு ராஜாவுக்கு வில் வித்தை கற்றுக் கொடுத்த ஆசார்யருடைய நண்பன் எதிரே வருகிறான். அவன் ஆசிரம தர்மத்தை, குலதர்மத்தை விட்டவன். அப்படிப்பட்டவன் என்னதான் பட்டுப் பீதாம்பரம் உடுத்தியிருந்தாலும் வஸ்திரமில்லாதவனே ஆவான் என்கிறது சாஸ்திரம்.

அப்படிப்பட்டவன் எதிரே வந்து விட்டான். ஆசார்யருடைய மித்ரன். தெரிந்தவன் என்பதாலே அவனைப் பார்த்து சததனு மகாராஜா 'சௌக்யமா?' என்று கேட்டான்.

இந்த சைப்யை இருக்கிறாளே... அவனைப் பார்த்த தோஷத்துக்கு, ஆகாயத்திலே சூரியனைப் பார்த்தாள், பூமாதாவைப் பார்த்தாள்; பசுவைப் பார்த்தாள் - தோஷ நிவர்த்தி ஏற்பட்டுப் போய்விட்டது அவளுக்கு.

ராஜா எதுவுமே பண்ணவில்லை. சில நாட்கள் சென்று இறந்து போய்விட்டான். அந்தக் காலத்தில் உடன்கட்டை ஏறுகிற வழக்கம் இருந்தது. - இந்தக் கதையைப் பராசர மஹரிஷி மைத்ரேயருக்குச் சொல்கிறார். ரொம்ப சிரத்தையாக மைத்ரேயர் கேட்டுக் கொண்டிருக்கிறார். வியாஸருக்கு அப்பா பராசர மஹரிஷி - அவர் சொல்கிறார் :

சததனு மாண்டு விட்டான். சைப்யை என்ன பண்ணினாள் - சததனுவோடு உடன்கட்டை ஏறிவிட்டாள். உத்தம பதிவ்ரதையானதனாலே அடுத்த ஜன்மாவிலே காசி ராஜாவுக்குத் திருமகளாய் வந்து பிறந்தாள். சுமதி என்று பெயர். பூர்வ ஜன்மத்திலே மகா பதிவ்ரதையான காரணத்தினாலே தன்

## அருள்வாக்கு

மனிதப் பிறவி எடுத்ததன் பயனே அன்பு செலுத்துவதுதான். அன்பு செலுத்துவதில் உள்ள ஆனந்தம் வேறு எதிலும் இல்லை. தனக்கென்று பொருள் சேர்ப்பதில், புகழ் சேர்ப்பதில், அலங்காரம் செய்து கொள்வதில் தாற்காலிகமாக இன்பம் கிட்டலாம். ஆனாலும் இவற்றில் உள்ளம் நிறைவு பெறுவதில்லை. உள்ளத்துக்கு நிறைவான ஆனந்தம் அன்பு செலுத்துவதிலேயே உண்டாகிறது. அன்பு செலுத்தும் போது நமக்கு எத்தனை கஷ்டம் வந்தாலும், தேக சிரமம் வந்தாலும், பணச் செலவானாலும் இதெல்லாம் தெரிவதேயில்லை. அன்பின் ஆனந்தமும் நிறைவுமே இந்தத் துன்பத்துக்கெல்லாம் மேலாகத் தெரிகிறது. அன்பு செலுத்தாத வாழ்க்கை வியர்த்தமே.

அன்பு செலுத்தும்போது துன்பமே

பர்த்தா எங்கு பிறந்திருக்கிறான் என்று தெரிந்து கொள்ள அவளுக்கு ஆசை ஏற்பட்டது. அந்த ஜன்மாந்த்ர ஸ்ம்ருதி பலம் அவளுக்கு இருந்தது. இயற்கையிலேயே அமைந்து போயிற்று அது.

பார்த்தால், ஜம்பு மார்க்கம் என்கிற பெரிய காட்டிலே ஒரு புதருக்குள்ளே குள்ள நரியாகப் பிறந்திருக்கிறான் சததனு.

தென்றல் காற்றைக் கண்டால் குள்ள நரிக்கு ஆகாது - பெரியவாச்சான் பிள்ளை இதைத் தமது வியாக்யானத்திலேயே கையாண்டிருக்கிறார். விபீஷணன் சொல்கிற வார்த்தை இருக்கிறது பாருங்கள்... 'சீதையைக் கொண்டு போய் ராமனிடத்திலே விட்டுவிடு; தப்பான காரியம் நீ பண்ணுகிறாய் என்று விபீஷணன் சொல்கிறான் ராமனுக்கு. எல்லோருக்கும் பிடிக்கிறது அந்த வார்த்தை; ஆனால் ராவணனுக்குப் பிடிக்கவில்லை. தென்றல் காற்று வீசினால் எல்லா ஜீவராசிகளுக்கும் பிடிக்கிறது. ஆனால் அது குள்ளநரிக்குப் பிடிக்காதாம்; புதருக்குள்ளே புகுந்து கொள்ளுமாம். அதைப் போல்தான் விபீஷணனின் வார்த்தை ராவணனுக்குப் பிடிக்காமல் போயிற்று!

ஆசார்யர்களெல்லாம் இந்த ஜீவராசிகளைப் பார்த்துப் பார்த்து வியாக்யானத்திலே எழுதி வைத்திருக்கிறார்கள்! அது மாதிரி எத்தனையோ விஷயங்கள்! அவர்களுக்கு இந்த விஷயங்கள் நன்றாகத் தெரிகின்றன. ஒரு பிராணியினுடைய

---

**''ஏன் சார் நேத்து நான் சபாவிலே பண்ணிய க்கச்சேரிக்கு நீங்கள் வரவில்லை?''**

**''அதுக்குத்தாங்க புறப்பட்டேன். விழியிலே வேறே ஒரு கஷ்டம் வந்து விட்டது!''**

**- டி.கே. சுப்பிரமணியன்**



தெரிவதில்லை என்றேன். ஆனால் கடைசியில் ஒருநாள் அன்பு செலுத்தப்பட்ட வஸ்துவே நமக்குப் பெரிய துன்பத்தைக் கொடுத்து விடுகிறது. நாம் ஒருவரிடம் அன்பு வைக்கிறோம். கடைசியில் ஒருநாள் அவர் நம்மை விட்டுப் போயே போய் விடுகிறார். அல்லது நாமாவது அவரை விட்டு ஒருநாள் போகத்தான் போகிறோம். அன்பின் முடிவான பலன் துன்பம்தானா என்று பெரிய சலிப்பு உண்டாகி விடுகிறது.



அன்பு செய்தாலும் முடிவில் துன்பம்; அன்பு இல்லாமல் இருந்தாலோ வாழ்க்கையில் ருசியே இல்லை. இப்படியானால் என்ன செய்வது? மாறாத, மாளாத அன்பை உண்டாக்கிக் கொள்வதே வழி. நம்முடைய அன்புக்குரிய வஸ்து நம்மை விட்டு என்றும் பிரிந்து போகாததாக இருக்க வேண்டும். அப்படி ஒரு வஸ்து இருந்து அதனிடம் அன்பை வைத்து விட்டால் நாமும் அதுவும் ஒருநாளும் பிரியப் போவதில்லை. எப்போதும் ஆனந்தமாக, நிறைவாக இருக்கலாம்.

அதாவது, என்றும் மாறாமல் இருக்கிற ஒரே வஸ்துவான பரமாத்மாவிடம் அன்பைப் பூரணமாக வைத்துவிட வேண்டும். பரமாத்மா நம்மை விட்டு ஒருபோதும் நீங்குவதில்லை. நம் சரீரத்திலிருந்து உயிர் பிரிந்தாலும், பிரிகிற உயிர் பரமாத்மாவிடமிருந்து பிரியாமல் அவரிடமே கலந்து விடும். அவரிடம் வைக்கிற அன்பே சாசுவதமாக இருக்க முடியும்.

**— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சார்ய ஸ்வாமிகள்.**

தன்மை, குணம், அது எப்படி வாழ்கிறது என்பதெல்லாம் தெரிகின்றன. இதையெல்லாம் அவர்கள் நமக்குப் பலவிதமாகக் கற்றுத் தருகிறார்கள். நாமும் படிக்கிறோம்; பார்க்கிறோம். குள்ளநரிக்குத் தென்றல் காற்று பிடிக்காது என்று நம்மில் பலருக்குத் தெரியும்? அவர் எழுதி வைத்திருக்கிறார்!

அப்படிப்பட்ட குள்ளநரியாகப் பிறந்துள்ளான் சததனு. அவனைத் தேடிப் போன சுமதி காட்டிலே குள்ளநரி உட்கார்ந்திருப்பதைப் பார்க்கிறாள். பார்த்து நடுநடுங்கிப் போய் விட்டாள். சின்னப் பெண்– கன்யா பெண் சுமதி.

புதருக்கருகிலே போய், குள்ளநரியைப் பார்த்து, ''நீங்கள் சததனு அல்லவா? சக்ரவர்த்தி அல்லவா...? நான் சைப்யை இரண்டு பேரும் விரதங்களை அனுஷ்டித்தோமே அது உங்களுக்கு ஞாபகம் இல்லையா?'' என்கிறாள்.

இப்படிச் சொன்னவுடனே, பூர்வ ஜன்ம ஸ்ம்ருதி ஏற்பட்டுப் போயிற்று அந்தக் குள்ளநரிக்கு! ஆகாரத்தையே உட்கொள்ளாமல் பிராணனை விட்டு விட்டது.

பிராணனை விட்ட குள்ளநரி செந்நாயாகப் பிறந்தது. அதனிடம் போய்ச் சொன்னாள் சுமதி. அதுவும் பிராணனை விட்டு விட்டது!

அதன் பிறகு ஓநாயாய் வந்து பிறந்தது. ஓநாயினிடத்திலே போய்ச் சொன்னாள், ஓநாயும் பிராணனை விட்டது. பின்னர் கொக்காய்ப் பிறந்தான். கொக்கினிடத்திலே போய்ச் சொன்னாள்; கொக்கும் பிராணனை விட்டது. அப்புறம் காக்கையாய்ப் பிறந்தது. அதனிடம் போய்ச் சொன்னாள் :

''சுவாமி! முன்பு நீங்கள் பலிபுக்காக இருந்தீர்கள். இப்போதும் பலிபுக்காக இருக்கிறீர்கள். அதற்கும் இதற்கும் வித்தியாசம் உண்டு'' என்றாள்.

பலிபுக் என்றால் இரண்டு அர்த்தம். அன்னத்தை வைத்தோமானால் காக்காயெல்லாம் வந்து சாப்பிடுகிறது. கோயிலில் பலிபீடம் இருக்கும். அதிலே அன்னத்தை வைப்பார்கள். காக்கை வந்து சாப்பிடும். அன்ன பலியைச் சாப்பிடுகிறது காக்கை – அதனால் பலிபுக்.

பலி என்பதற்கு இன்னொரு அர்த்தம் உண்டு – சிற்றரசர்கள் எல்லாம் செலுத்தக் கூடிய கப்பம் இருக்கிறது பாருங்கள், சக்ரவர்த்திக்கு – பெரிய அரசனுக்குக் கட்டக்கூடிய கப்பம் – அதற்கு பலி என்று பெயர்.

''நீங்கள் சக்ரவர்த்தியாய் இருந்து சிற்றரசர்கள் செலுத்திய கப்பத்தை ஸ்வீகரித்தீர்கள். இப்போது அன்னத்தை ஸ்வீகரிக்கும்படியான காக்கையாய் ஜன்மா ஏற்பட்டு விட்டதே?'' என்றாள் சுமதியாகப் பிறந்திருந்த சைப்யை.

(தொடரும்)

Printed and published by K. Rajendran at the Bharathan Press on behalf of Bharathan Publications Private Limited. Editor : Mrs. Seetha Ravi
Address : 47, Jawaharlal Nehru Road, Ekkaduthangal, Chennai - 600 097.
Telephones : Editorial : 2345624; Circulation Manager, Subscription and Advertisement : 2345623; Chief Administrative Officer : 2345622; Fax: 2345621.
Annual Subscription : India : Rs. 275/-; Overseas : Rs. 2000/- (Air Mail)
Half Yearly Subscription : India : Rs. 140/-; Overseas : Rs. 1000/- (Air Mail)

Registered with the Registrar of Newspaper of India under No. 1041/57 * Registered No. TN / Chief PMG-141 / 2000 *
Licensed to post without prepayment under PMG's Licence No. WPP 37 * Registered as a Newspaper in Srilanka